ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# இருசமயவிளக்கம்.

தெய்வப்புலமை

## அரிதாசர்

அருளிச்செய்தது.

---

இது

விசிஷ்டாத்துவித வேதாந்ததரிசன

சம்பிரதாயஸ்தரான

ஸ்ரீமத்வேதமார்க்கசபையாரில்

ஒருவரும்

அத்திரிருஷி கோத்திரரும் ஆகிய

பூவலநகரம்

**பார்த்தசாரதிராஜா**

அவர்களால்

சிலவித்துவான்கள் முன்னிலையிற்

பார்வையிட்டு

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

கலியுகாப்தம் - ௫௲௰௮ - பிங்கள ௵





நன்றாக...குருவாழ்க...குருவேதுணை.

# அரிதாசர் திருவடிகளேசரணம்.

## தனியன்கள்.

(விருத்தங்கள்.)

விரிதாருகமழ்துளவத் தொடைமாயன்பாலென்ன .........*
வேதஞ்சாலை.................................................*
பெரிதாகமொழிவதனை மோகனசாத்திரமயக்காற் .........*
பிணக்குப்பேசிக்.............................................*
கருதாதகுயவர்தமை யறத்துமிக்கச்சினந்தெழுகூர்க்.........*
கதிர்வாளான..................................................*
அரிதாதனிருசரண மெந்நாளுந்தொழுதேத்தி...... ........*
யகத்துள்வைப்பாம் ........................................ (௧)

விரியோதநெடுங்கடல்சூழ் வியனுலகிற்கமலவிழி ...........*
மேகமேனிக் ....................................................*
கருதாதியகவனுல கெவ்வுயிரும்படைத்தளித்துக்............*
காக்குந்தன்மை ................................................*
பிரிவேதுமில்லாத பழமறைகடெளிபொருளைப் ..........*
பேணிப்பேசும் .................................................*
அரிதாதவிருசரண மெனதுசிரத்தணிந்திந்துய................*
ரகற்றினேனே...................................................(௨)

[வேறு.]

பதுமமலர்மகண்மார்பன் வளரொளிர்முகுந்தனே...........*
பாவுதசசதமோலி திகழ்முடியனந்தனே ...........*
பயிலவழகியசேனை முதல்வனெனுநம்பனே ...........*
பலவுகனிபொழின்மேவு குருகைவருமொய்ம்பனே ...*
சதுரனெதிபதியோபொன்மதிலுயரரங்கனூர் ...............*
தமது செவியுறுகேள்வி யிதமொழிபிரசங்கனே .........*
சகமதனிலெவரோவிவ் வடிவுகொடிணங்கினோர் .........*
தவசுருபமிதுவாகு மெனவிவணடைந்துசேர்.........*
விதமுறுமரன்மாய னிவர்தரமிலங்குமா .......................*
வியனியல்புபெறவோது பெயர்குணநிறைந்துசீர் ... *
வியாமவைவெளியாக வரியமறையங்கமாய் ................*
மிகுமிருதியிதிகாச முதலுளவரம்பினால் ............ *
அதுலவிதலவாய்மை யுரைகளிலடங்கிநீ......................*
டமைதிபெறுபிரமாண வகைதொகைசெய்தின்பமே *
அமரிருசமயதீப விரிபனுவலெங்கள்பால் ...............*
அருள்புரியுமரிதாச ரடியிணையிறைஞ்சுவாம்...... ..(௬)



நூற்பயன்.

வளங்கெழுசெல்வமுண்டா மனக்கருத்தெல்லாமுற்றும்... ... ...*
களங்கமின்ஞானமெய்தும் காட்சிசேர்முத்திவாய்க்கும்............*
தளங்கமழ்துளவக்கோலத் தாரிதாதன்வாக்கால் ...................*
விளங்கிருசமயநூலின் மெய்ப்பொருள்விரும்புவோர்க்கே ......(௧)

கண்ணகன்ஞாலத்தீர்நுங் கருப்பற்றையறுக்கவேணும் ...........*
எண்ணியவெண்ணியாங்கே யெண்மையினெய்தவேணும் ..........*
நண்ணிருசமயகாண்டு நன்கறிவிளக்கமேபோல் .....................*
திண்ணநாற்பிறிதொன்றின்மை தெரிந்திடீர்விரைந்திடீரோ ...(௨)

[வேறு.]

இந்துதவழ்பைம்பொழில்சூழ் வளமிக்க அரிவைநக ..........*
ரிறைவனென்னும் ... .......................................*
மந்தரபுயத்தண்ண லரிதாதனருள்சுரந்து ....................*
வகுத்துச்செய்த ................................................*
முந்தையிருசமயவிளக் கப்பெருநூலொருகவியை ....... ..*
மொழிந்தோர்கற்றோர் ............................................*
பைந்துளவப்பரஞ்சுடரி னருட்பேற்றுவிகபரமும்... ... ...*
படைப்பர்மாதோ ...............................................(௧)

பொய்ம்மைபுகலாகமவாதியர்கள்செருக்குத்திமிரம்.........*
புடைபேர்ந்தோட ................................................*
மெய்ம்மைபெறுபரவத்து விண்டுவெனயாவருக்கும் ... ...*
விளக்கமாக ........ ..............................................*
மும்மையெனுந்தமிழ்ப்புலமை யேறரிதாதன்பரிந்து ......*
மொழிந்தவிந்தச் ...............................................*
செம்மையுறுவிருசமய விளக்கமுணர்நிருர்கள்போற் ......*
சிறந்தோர்யாரோ ............................................. (௨)

[வேறு.]

இருமாசமய விளக்கமெனப்பேர் ................*
வருமாநூல்புவி வாய்ந்திடலாலிப் ..............*
பெருமாமன்னுயிர் பேதைமைநீங்குத் .........*
திருமாமுத்தியை யெய்வதுதிடனே ............(௩)

[வேறு.]

வேதமேமுதலவாய விண்ணவர்முனிவரேனோர்...............*
ஓதுநூற்புராணஞ்சிற்ப முறைபுறத்துறைநான்மற்றும் ......*
நீதியினுணர்ந்தோராவர் நீடிருசமயத்தன்மை ...............*
போதமாம்விளக்கநூலைப் புரையறத்தெரிநல்லோரே ... (௪)

பொன்னிதழ்மலர்த்தண்டேனைப் புரிந்தயில்சுரும்பரென்ன *
மன்னிருசமயநீர்மை வகுக்குநல்விளக்கநூலை ................*

நன்னர்மெய்யறிஞர்கொள்வர் நாறுபுன்னீருண்ணீப்போல்*
அன்னியபுன்னூல்வெட்ப ரறிவழிமாந்தர்மாதோ .........(எ)

[வேறு]

ஆரணத்தின்சாரமென்கோ ஆரிடத்தினுணாவென்கோ... ...*
வணிவேதாங்க ..........................................*
காரணநாம்கருத்தென்கோ கனதமிழ்வாரிதிக்கொளிர்தண் *
கதிரோவென்கோ ..........................................*
தாரணியுமிருபுயக்குன் றரிதாதன்றன்னருளாற் ............*
றந்தவாய்மைச் ..........................................*
சீரணியுமிருசமய விளக்கமுறைவிழுப்பொருளைத் .........*
தேருங்காலே ..........................................(அ)



## பழிச்சினர்ப்பரவல்.

செழுமதியரிபிம்புகூர் சிறியவரொடிணங்கியே ..............*
திரிதருமெனையன்பின்வா சிலவுறநிவிளம்புகேம் .....*
இருபொருண்மருடங்கிடா திசிதுணர்ந்திடென்றநீ .........*
டிருசமயவிளங்குறூ னெனதிதயமழுந்தவ .........*
மூதுகுருவடிவங்கொளா முறைதவறுதலன்றியே.............*
மூடிவுறவகளங்கமாய் மொழிமுதன்மையனெம்பிரான்*
மதாசையிலுயர்சிங்கமேர் வயினைவகுலத்துங்களும் ...........*
வடிவழகியநம்பிசே வடியிணைகள்வணங்குவாம்......(க)

[வேறு.]

சுத்திரமிலங்குபழ மறைநட்குமாறுய ....................*
சொல்லுமெழுநான்காகமம் ................................*
நன்மார்க்கமென்றுதெரியாமற்புகழ்ந்திடிற் ...........*
துட்டர்கள்செய்செருவடங்க................................*
வந்தனைக்கருகன்மா வென்றவெளிபிட்டாண்ட ........*
வடிவழகியநம்பியோன் ................................*
மலரடிபணிந்துநங் குருவாயடைந்துயிக ............*
மனமகிழ்ந்தேபுயர்ந்தோன்...............................*

சந்தரந்திரியவர்க ளோடேயிணங்கித் ......*
நலத்திற்பிரிந்தவெல்லேனத் ......*
தலையிறுமெல்லபணைமுத் திருசமய நூலினைச் ......*
சங்கையபறம்வோதியேயதி ......*
சிந்தையிலினித்தெளிந் தேயறிந்திடவுலா ......*
செட்பியரிவித்தகாசான் ......*
செயசமயசிங்கேறு பெத்தபெருமாளனுஞ் ......*
செல்வனடிப்போற்றும்வாமே......(உ)

---

## சாத்துகவிகள்.

காஞ்சி

செல்வப்பெருமாள் கவிராஜபண்டிததிலகர்

செய்தது.

(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

சேவற்பார்கொடிப்புத்தேள் கருளப்புட்கொடிப்பரமன் ......*
திறன்செய்மெய்ச்சீர் ......*
புவலயமுரைவுணர்த் திருசமயவிளக்கமெனும் ......*
புனிதநூலை ......*
மாவலயத்திணிதோளான் வயிணவவிமைப்பொருபெரித்த ......*
வாய்மையாளன் ......*
புவலயநகர்ப்பார்த்த சாரதிராசாவச்சிற் ......*
பொருத்தினனே ......*

---

ஸ்ரீ - நாராயணசாஸ்திரி கவிராஜபண்டிதசேகரர் செய்தது.

இதுவுமது.

போதலரும்பூம்பொழில்சூழ் பூவலமாநகரிலுறை ......*
புனிதன்மன்னித் ......*
சிதமதிலுலகிலங்கன் இருட்டிணைமாவள்ளலருஞ் ......*
செல்வனென ......*
நாதுலவுந்தொண்டர்ப்பார்த்த சாரதிராசாவிந்தச் ......*
சகத்தோரோர்த்துத் ......*
தீதகலத்திருசமய விளக்குநூலச்சதனிற் ......*
சேர்த்திட்டானே ......*

---





ஸ்ர்வம்விஷ்ணுமயம்ஜகத்.



அரிதாசர்திருவடிகளேசரணம்.



# இருசமயவிளக்கம்.



## ஸ்ரீ - வது. பாயிரகாண்டம்.



## முதலாவது. கடவுள்வாழ்த்துப்படலம்.



நீர்ஏற்றபாரில்உயராதுறுநீடுஞானம்
கூர்ஏற்றுசிந்தைஎதிராசர்குலத்துளானை
போர்ஏற்றுநாயன்தனைவாழ்பெரும்பூதுரானை
சீர்ஏற்றசெல்வக்குருராயனைச்சிந்தைசெய்வாம். (க)

அலையிட்டநீரைஅடக்கும்வடவானலம்போல்
தலையிட்டுவாதுமுயல்சாகியர்தம்மைவென்று
மலையிட்டதீபம்எனமால்சமயத்தைமண்மேல்
நிலையிட்டபூதூர்எதிராசனைநெஞ்சில்வைப்பாம். (உ)

கமிழ்கின்றவாசவகுளச்செழுங்கண்ணிஅம்தேன்
உமிழ்கின்றதிண்தோள்அரசைப்பவத்தநீர்க்குள்
அமிழ்கின்றஎன்னைக்கரைஏற்றுதற்காகவேதம்
தமிழ்செய்தஞானக்குருகூரனைத்தாள்துதிப்பாம். (௩)

நானாமுகம் ஆய் நவில்வாணி என் நாவில் மேவ
மானார் அயன் அங்கவர் போல்பலமாக்கணங்கட்
கானாதகரத் துளவேத்திரத்தையர் தெய்வச்
சேனாபதியார் மலர்த்தாள் இணை சென்னிவைப்பாம். (௪)

கிரிபோல்விளங்கிக்கிளரும்புயக்கிட்ணராயன்
தரைமீதுசிங்காத்திரியில்[illegible]த்தம்பம்நாட்ட
வரம் ஆதரவால் அளித்தே தவட்கூவம்மேவும்
கருமாமணிவண்ணனை நீடுகருத்தில்வைப்பாம். (௫)

படமாசுணமும்முதிரா இளம்பச்சை ஆலும்
திடமாமறை அந்தமும் ஆகிநற்செல்வன் ஆன
வடமாமலை அண்ணனதுள்ளமும் வைகநாளும்
இடமாம்ஒருவற்கடியோங்களியாங்கள் தாமே. (௬)

விரிதாதணியும்தொடைமேவியவேந்தன் ஆன
அரிதாதன் நினைத்தஎலாம்முடித்தாண்டகோவை
தெரிதாதரவேதகிரித்தடச்செங்கண்மாலை
பெரிதாதரிப்பார்க்கரிதோபிறவாதபேறே. (௭)

௧-வது. கடவுள்வாழ்த்துப்படலம்முற்றும். ஆ திருவிருத்தம். [௭]

அரிதாசர்திருவடிகளேசரணம்.



## உ-வது. நூற்பெயர்விளக்கப்படலம்.

பூண்கின்றபணாடவியால்ஒளிர்பூதநாதன்
சேண்கொண்டலைநேர்திருமேனி அம்தேவன் என்ன
மாண்கொண்டவருள்பரவத்துவைவண்மை ஆக
காண்கின்றதுவேதமியேன் தன்கருத்துமாதோ. (௧)

சதுவேதமும் ஆகமமும்கொடுசார்ங்கபாணி
விதுவேணியினான் எனும்மூர்த்திகள் மேன்மைநோக்கில்
கதுவேழ்கடல்சூழ்உலகத்தவர்கட்கெலாம் அங்
கதுவே அதுவேபரம் ஆய்வியப்பாகையாலே. (௨)

ஏர் ஆரணம் ஆகமம்நீடிதிகாசம் ஆதி
சார்வாகியநூல்பொதுநூல்கொடுதத்துவத்தை
ஆராயும்இடத்தரன்மால்புகழ் அங்குறைக்கும்
சீர் ஆனமொழிக்கெதிர் உத்தரம்செப்பவேண்டி. (௩)

திரமாகியஆகமமேஒருசெய்யமாதும்
அருமாமறைமற்றொருதோகையும்ஆகநாட்டி
ஒருமாதுறைபாகனைமாலைஉகந்துபோற்றும்
இருமாசமயத்துவிளக்கம் இயம்பலுற்றேன். (௪)

ஒருதேவதையேஉலகுக்குயர்நாதன்என்ன
அருமாமறைநிச்சயித்தோதிஅமைத்திருக்க
இருமாசமயத்துவிளக்கம்என்றிந்தநூற்கு
திரமாகியபேர்வருகாரணம்செப்பவேண்டில். (௫)

திரம்முந்தியஇப்பெருநூலில்செகம்தனக்கு
பிரமங்கள்இரண்டுளஎன்றுபிரித்ததில்லை
இருமைச்சிவன்மால்சமயங்களைஇன்னஇன்ன
தரம்என்றுவிளக்கியதாதலில்தக்கதாமே! (௬)

நூலீதுரைசெய்திடநான்நுவன்றிங்குநாட்டும்
வேலேய்விழியார்களில்முக்கண்ணன்வீற்றிருப்பாள்
பாலேய்மொழிஆகமவல்லிஅப்பங்கயக்கண்
மாலேபரம்என்பவள்ஆரணவல்லிஎன்பாள். (௭)

அப்பாவைமார்கள்இருவோரும்அறைந்ததாக
இப்பார்மதிக்கஇயலும்பதினெண்புராண
வைப்பானசொல்லும்உயர்வைதிகவாக்கும்எல்லாம்
ஒப்பாகஞாலத்தினில்கூட்டிஉரைக்கலுற்றேன். (௮)

உ-வது-நூற்பெயர்விளக்கப்படலம்முற்றும் ஆக திருவிருத்தம்-௰௫

அரிதாசர்திருவடிகளேசரணம்.



௩-வது-விடயத்திறப்படலம்.

தாதார்துளவத்தரிசங்கரர்தம்மைஏத்தும்
வேதாகமத்தைத்தெரிந்தோதும்இம்மெய்மைநூலில்
ஓதேதும்இலாவிடயத்தின்திறங்கள்தம்மை
ஏதேதியல்பால்சொலிநாட்டியதென்றுகேட்கில். (௧)

பேரின்னனஆய்திகழ்கின்றஇப்பெண்கள்ஆழிப்
பாரும்திசையும்படர்கார்இருள்பாறிஓட
ஊரும்கதிரோன்மகரத்தைவந்துற்றபோதில்
சீரொன்றியஆரணிமூழ்கிடச்சென்றஆறும் (௨)

தண்ணம்புனலில்படிவெலையில்தன்தனுதாம்
எண்ணம்பயில்சங்கரர்நாரணர்என்றுளோரை
நண்ணும்பரம்என்றிருவோரும்நவின்றஆறும்
வெண்ணன்நகையார்க்கதில்ஈசுவிளைந்தஆறும். (௩)

ஏராரணிமாநதியின்கரைஎய்திவேத
ஆராமம்அணைந்ததில்எய்தியஅந்தணாளர்
நேராகியசந்நிதிமன்னியநீள்கண்மானுர்
சீராகியதத்துவநிச்சயம்செய்தஆறும். (௪)

திரம்ஆகியதத்துவநிச்சயம்செய்தபோதில்
மருமேவியவார்குழல்ஆகமவல்லிஎன்பாள்
பொருவாகியஆகமசைவபுராணம்ஆதி
விரிவாகியபல்வகைநூலும்விரித்தஆறும். (௫)

ஒல்லும்படிஇப்பெருநூற்பொருள்ஓர்ந்துமேலே
சொல்லும்படியேநினைவாகித்துணைத்தனங்கள்
வல்லின்படிஆம்இவள்பாரில்வழக்கைமுந்தி
செல்லும்படிதன்விரகால்உரைசெய்தஆறும். (௬)

திரம்ஆகியபார்வழக்கம்தனில்சிற்பநூலால்
ஆரவாபரணத்துமைபாகன்அலாதபேர்க்கு
மருவாலயத்தில்பிரமத்தலமாப்பதிட்டை
உரைவாதெனநீடுலகத்தில்உரைக்கும்ஆறும். (௭)

தண்ணம்புலிசேர்சடையற்குயர்சார்ங்கபாணி
எண்ணும்பரிவாரமதாகிஇருக்கும்ஆறும்
வண்ணம்கரியமதுசூதன்வராகம்ஆகி
நண்ணும்சிவன்மெல்அடிதேடிநடந்தஆறும். (௮)

அரிமோகினிஆய்அரனைப்புணர்ந்தையனுரை
தரையோர்அறியும்படிபெற்றதும்சக்கரக்கை
கருமாமுகில்மானும்நன்மேனிஅம்கஞ்சநாபன்
வருசாபவசத்தினல்என்னவகுத்தஆறும் (௯)

நக்கன்தனைஇன்றியவேள்விநடத்திவேதா
மெய்க்கண்ணன்எனத்தகுதேவர்விளித்தஆறும்
மைக்கந்தரன்ஓர்சரபத்துருவாகிவந்து
செய்க்கண்ணரகேசரிதன்னைச்செயித்தஆறும் (௰)

செம்பங்கயமேல்உறைநான்முகன்தேர்கடாவ
நம்பன்புரம்மூன்றெரிஏறநகைத்தநாளில்
வெம்பும்சினவெவ்விடையும்மகமேருவில்லுக்
கம்பும்எனநின்றரிஏவல்புரிந்தஆறும் (௰௧)

ஆகாசமோடுதிசைஎங்கணும்அங்கிபொங்க
காகோதரத்தில்உயர்வாசுகிகான்றவெய்ய
மாகாளகூடம்தனையேமுனம்வானுளோர்கள்
நோகாமல்அத்தமகதேவன்நுகர்ந்தஆறும் (௰௨)

மாயன்கயிலைக்கிரியானிடைமைந்தன்வேண்டி
போய்நின்றதுவும்பரசாயுதப்போர்இராமன்
எயும்சிவன்ஆம்சமதங்கிஇடத்துதித்து
காயும்படைவிஞ்சையும்ஈசனிற்கற்றஆறும் (௰௩)

ஆசற்றுயர்பாசுபதத்தைஅருச்சுனற்கா
ஈசற்கிதம்மாயவன்பேசிஇரந்தஆறும்
காசற்றொளிபூண்மதுசூதனன்கண்இடந்தே
பூசித்ததனால்அடல்ஆழிபொறுத்தஆறும் (௰௪)

பொடிபூசியைமைக்கடற்சேதுவில்பூசைசெய்து
சுடர்வேல்இராமன்பிரமத்திதொலைத்தஆறும்
இடம்ஆகியகாசியில்எய்தியயாவருக்கும்
அடைவேபரிவால்அரன்முத்திஅளிக்கும்ஆறும் (௰௫)

உரைபற்றியநீற்றுபஞ்சாக்கருத்திராக்க
தரணத்தியல்பால்உயர்புண்ணியர்புண்ணியம்சாரும்ஆறும்
பொருவற்றிடுதற்சிவதீக்கையும்பூசைதானும்
இருமைக்கும்இசைத்திடுசாதனம்என்றஆறும் (௰௬)

உன்னும்சரிதைகிரிகைத்தொழில்யோகம்ஞானம்
என்னும்திறத்தால்மனம்எகம்உற்றேத்துவார்க்கு
பன்னும்படிஆகியநாலுவகைப்பதங்கள்
கொன்னின்றமழுப்படைஈசர்கொடுக்கும்ஆறும் (௰௭)

தன்னைப்பணித்துதவம்செய்திடுவோர்தமக்கு
பின்னைக்கெனாதுபெருமாவரப்பேறுநல்கும்
பொன்னைப்பொருதேஅரன்அன்றிஇப்பூதலத்தில்
பன்னற்குரியார்எவர்என்றுபகர்ந்தஆறும் (௰௮)

# பாயிரகாண்டம்.

வீறாகியநற்சிவநூலில்விரிந்ததொண்ணூற்
றாறும்உடல்த்துவத்தன்மையும்அஞ்செனப்பேர்ப்
பேறாகியதீக்கையும்முத்திணைப்பேதம்ஆறும்
தேறாதவர்முத்தர்கள்அல்எனச்செப்பும்ஆறும் (௰௯)

பொருவார்மலர்ஐங்கணைகொண்டெதிர்போர்செய்வேளை
எரிஏறவிழித்தருள்சங்கரன்என்னும்மூர்த்தி
அருநால்உருநால்அருவோடுருஒன்றவைக்கும்
பரம்ஆய்உறையும்படிதன்னைப்பகர்ந்தஆறும் (௨௰)

தரையைத்தொடங்கித்தொகைசெயதிடுதத்துவங்கள்
இருபத்துநாலும்உயர்மாயைகள்ஏழும்அஞ்சாய்
திரம்உற்றிடுநீள்சிவதத்துவமும்தெளிந்தோர்
வரமுத்தர்கள்என்றுரைசெய்திடும்வாய்மைதானும் (௨௧)

பெருக்கும்பயபத்தியினோடுபிராணலிங்கம்
தரிக்கின்றவரும்சிவன்ஆகும்அத்தன்மைதானும்
தெரிக்கின்றஈசன்நிருமாலியம்தீண்டஒண்ணா
திருக்கின்றதுநின்மலர்இன்மையின்என்றஆறும் (௨௨)

ஆரைப்புவியில்பணிகின்றதும்ஐம்முகன்பால்
சேரப்பெறும்என்பதும்நற்குணச்செய்கையாலே
நேரற்றவன்அங்கவன்ஆகியநீர்மைதன்னால்
பாரிற்பகவான்எனும்நாமம்படைத்தஆறும் (௨௩)

நடைமன்னியநான்மறையில்தெளிநாரணோப
நிடம்என்பதனில்கிரணம்புனைநீடுசூலப்
படைமன்னியபங்கயச்செங்கரப்பாவைபங்ன்
இடம்மன்னும்உபாசனையேசொனதென்றஆறும் (௨௪)

மயம்மிக்குயர்ஏழ்பரிச்சூரியமண்டலத்தில்
இயல்புற்றிடுசோதியதாகிஇருந்துதன்னால்
நியமப்படும்பல்உயிர்வம்மையும்நீடுநெஞ்சம்
முயல்விப்பவன்முக்கணன்என்னமொழிந்தஆறும் (௨௫)

கேள்விப்பசுவின்பதிஆகிகிளர்ந்துளானும்
வேள்வித்துறைஉற்றவிர்ப்பாகம்விரும்புவானும்
வாழ்வுற்றவேள்விப்பதிஆகிவயங்குவானும்
நீள்வெற்றிமழுக்கரன்என்னநிகழ்த்தும்ஆறும் (௨௬)

முற்றும்பகர்ந்துவிரகாகமுடித்தபின்பு
மற்றங்கவருக்கெதிர் ஆரணவல்லிஎன்பாள்
நற்றும்சுருதித்தொகையும்மறைநாலின்அந்தம்
பற்றும்நியமோபநிடங்கள்முப்பத்திரண்டும். (௨௭)

வருதாமதராசதசாத்திகவன்புராணம்
உரவோர்தெளிசீர்உபபாரபுராணமோடும்
அரிதாம்மிருதித்தொகையும்அதனுக்கிசைந்த
விரிவாம்உபமாமிருதிப்பெயர்மேவுநூலும். (௨௮)

வசைஇன்றியபஞ்சஇராத்திரம்வாய்த்தவைகா
னசமும் இருமுச்சமயங்களின் நாமநூலும்
அசைவின்றியசோதிடவாகடம்ஆதிஆக
இசையும்பொதுநூல்களும்சார்வுறும்இன்னநூலும்.(௨௯)

பகரும்சொலவின்பரமார்த்தமும்பாரின்மீதே
திகழும்பலஆகியசைவசித்தாந்தநூலே
மிகவென்றிடுகண்டனமும்பின்விரிப்பதாக
தொகைமன்னியபார்வழக்கிற்குமுன்சொன்னஆறும்.(௩௰)

செப்பத்தகுபார்வழக்கத்தினில்சிற்பநூல்கள்
முப்பத்திரண்டும்பிரமத்தலமூர்த்திஆக
வைப்புற்றவன்மால்எனச்சொன்னதும்வண்மைமாலுக்
கட்புச்செறிசெஞ்சடைச்சங்கரன் ஆதியானை. (௩௧)

துன்றும்பரிவாரகர்என்றும் துவாரபாலர்
என்றும்மதுசூதனைஇசருக்கீசன்என்றும்
மன்றம் துளவத்தவன்உத்தமன்மற்றுளோர்கள்
புன்றன்மையின்மத்திமர்என்றுபுகன்றஆறும். (௩௨)

அந்தண்கமலத்துறையும்சதுரானனத்தோன்
உந்தும்பரிவால்இருபாதம்உவந்துபோற்ற
வந்தப்புவிமங்கையைஏற்றவராகர்ஈசன்
அந்தண்கழல்தேடியதில்லென்றறைந்தஆறும். (௩௩)

காவாலிதன்னைக்கணமோகினிஆய்மயக்கி
கோவாழிஅங்கைஅரிதன்உருக்கொண்டஆறும்
மாவாலகில்லியர்கள்வேதனில்வந்தவர்போல்
சேவாகனற்குமகசாத்தன்செனித்தஆறும். (௩௪)

மாலேபுருடோத்தமன்மற்றுளதேவர்மாதர்
போலேஎனப்பல்பிரமாணம்புகன்றஆறும்
நூலோதிருமாமுனிவோர்கள்நுவன்றசாபத்
தாலேதிருமாற்கிடையூறடையாதஆறும். (ருரு)

விதிதாதையினூர் இருதாளினில்மேவுஞானத்
ததிமேதையன் ஆகியசீர்புனை அம்பரீடன்
முதல்ஆகியபேர்தமக்கும்முனிவோர்கள்வாக்கில்
உதிர்சாபமோடவ்அபிசாரம்உளுதஆறும். (ருசா)

மடமங்கைபாகன்மிருசாபவசத்தன்என்னும்
படியும்புகழ்விச்சுவசிட்டியர்பண்ணும்வேள்வி
இடைவந்துதக்கன்அவமானம்இசைப்பஇந்துச்
சடையன்தனதாம்கயிலைக்கிரிசார்ந்தஆறும். (ருஎ)

மற்றந்தமேன்மைபுனைதக்கன்மகத்தைநண்ணி
எற்றங்குமேனிச்சதிதேவிஇறந்தஆறும்
அற்றந்தகண்டன்அதனால்வெகுண்டந்தவேள்வி
முற்றும்சிதைத்துச்சுரரைக்கொலைமூண்டஆறும். (ருஅ)

உடைந்தோடிவானோர்மலரோன்உலகத்தைஒல்லை
அடைந்தேபணிந்தங்கவர்இன்னல்அறைந்தஆறும்
தடந்தாமரையோன்சிவன்கோபம்தணித்தமர்க்கண்
மடிந்தார்கள்உய்யும்படிவேண்டியவாறுதானும். (ருகூ)

அழித்திட்டவேள்விக்கயனோடரன்வந்துதக்கன்
பிழைக்கப்பணித்துக்குறைவேள்விபின்னும்தொடங்க
எழுத்தெட்டுடையபெருமான்அவண்எய்தலோடும்
வழுத்திச்சிவன்நான்முகனோடுவந்தித்தவாறும். (சo)

மலரோனும்மாலும்மருவாஒருமாமகத்தை
இலைமேவுசூலப்படையான்அழித்திட்டதெல்லாம்
சலமோடுவேள்விதசகண்டன்தகர்த்ததற்கே
நிலமீதில்ஒக்குமெனஒதியநீர்மைதானும். (சக)

பொன்னூர்பினாகச்சிலைஏந்திபுகுந்தபோதும்
அன்னோர்இல்வாணன்அமர்தன்னிலும்ஆர்தவத்தின்
நன்னாரணமாமுனியோடமர்நண்ணுகாலும்
சொன்னீடுசூலப்படைச்சங்கரன்தோற்றஆறும். (சஉ)

இது அன்றிநக்கன்விருகாசுரற்கீவரத்தும்
அது அன்றியும்அந்தகன் அந்தகர் அன்றும்அன்றும்
மதுதுன்றுகொன்றைஅரன்வேண்டஎம்மால்அளித்தே
கதுமென்றிடுக்கணினில்நின்றுகடந்தஆறும்                    (௪௩)

கங்காளம்உற்றஅரனோடயன்காரிஆதி
அங்கானவற்கும்அவெலாம்அடங்கூழிதன்னில்
தங்காதுமாளமிகவும்தகிக்கின்றசற்வ
சங்காரவத்துஅரியேஎனுந்தன்மைதானும்                    (௪௪)

சோராததன்மைஉளவச்சிரத்தூணும்ஆடல்
போராடகன்தன்மணிமார்பும்பிளந்ததேபோல்
கூரார்எயிற்றுச்சரபத்தையும்கூறுசெய்து
தாரார்புயத்துநரசிங்கம்தழைத்தஆறும்                    (௪௫)

அவ்வாள்அரிபின்அமரர்க்கரனுக்கிரங்கி
வெவ்வாள்அவுணன்உதிரத்துவிளைந்தவெய்யோர்
தெவ்வாகுசத்திசமூகம்தமையும்செயித்தே
தவ்வாதுநின்றிப்புவிமீதுதயங்கும்ஆறும்                    (௪௬)

பண்ணார்மொழிஅம்பிகைமேவியபங்கினன்தன்
தண்ணார்சடையேதகைமேவுசமித்ததாக
நண்ணார்புரத்தைத்தழலுக்கிரைநல்கவேண்டி
விண்ணோருடன்ஓர்மகவேள்விவிளைத்தஆறும்                    (௪௭)

சோர்மருவப்புரம்மூன்றுசெயித்தநாளில்
பாராகியதேர்பதியாமல்பரிப்பதற்கோர்
ஏரார்மருப்புவிடைஆகியும்ஏவதாயும்
ஆரார்சடாஈசனுக்கந்தரியாமிஆயும்                    (௪௮)

பொருள்ஒன்றியபாற்பசுஆகியும்புத்தன்ஆயும்
திருமன்னுமார்பன்அருள்செய்ததும்தேவர்வேண்ட
விரைதுன்றுகஞ்சத்தயன்தேரும்வியப்பொடோர்ந்தங்
கரிபஞ்சரமாஉபதேசம்அளித்தஆறும்.                    (௪௯)

ஆழிக்கடல்வாய்தனில்வந்தெழும்ஆலகாலம்
ஊழிக்கனல்போல்வருநாளில்அவ்ஓங்குநஞ்சை
வாழிக்கருடக்கொடியானைமனத்துள்வைத்து
பூழித்திருமேனியன்முன்புபொசித்தஆறும்                    (௫௰)

பாலார்கடலில்துயில்வார்ஒருபாலன்வேண்டி
சேலார்அருவிக்கயிலைக்கிரிசேர்ந்தநாளில்
மேலாகியகேசவநாமவியாக்கியானம்
ஆலாலமிடற்றுமைபாகன்அறைந்தஆறும், (௫௧)

பொருவார்பரசாயுதம்ஏந்தியபோர்இராமற்
கரணோடரன்மெய்ப்பிறிவாம்சமதங்கிமேல்நாள்
குருஆய்மிகுதந்தையும்ஆனதுகொண்டவர்க்கு
பான்ஆயினதன்மையன்அல்எனும்பண்புதானும் (௫௨)

திசைபற்றியபாரதப்பூசல்செயிப்பதற்கா
விசையற்குயர்பாசுபதாத்திரம்வேண்டிமாயன்
இசையச்சிவன்பால்இரந்தான்என்றிசைத்தசொற்கு
பசைஅற்றிடும்உத்தரம்ஓதியபண்புதானும். (௫௩)

அரன்பால்அரிகண்அணிந்தாழிபெற்றான்எனும்சொல்
உரந்தான்அலஆழிபண்டேஉளதுற்றுபாசித்
திரந்தாழியில்பெற்றனென்குலம்யான்என்றுமைக்கு
வரன்தான்இசைத்தான்எனஓதிடும்வாய்மைதானும் (௫௪)

மதிதங்கியசெஞ்சடைநாதன்மகிழ்ந்துபோற்ற
கதிமன்னியமால்தரஞானநற்கண்ணனும்யாரும்
துதிசெய்வரமும்திரிமூர்த்தியிற்சொல்லிஎண்ணும்
பதமும்மிகுஞானமும்நக்கன்படைத்தஆறும் (௫௫)

அன்றங்களித்தவரபாலனம்ஆக்கமாயன்
சென்றம்புவிக்குள்சிவபூசனைசெய்தஆறும்
மின்றங்குநேமிநெடுமால்அருள்மேவுகண்டா
கன்றன்தனக்குபிரமத்திகவ்வாதஆறும் (௫௬)

சங்கம்தரளம்தமைஉந்துதரங்கம்எங்கும்
பொங்கும்துறைதங்கியகங்கைபொருந்துகாசி
வெங்கண்நெடுமாசுணமீதுவிழித்துறங்கும்
செங்கண்நெடுமால்தலம்என்றுரைசெய்தஆறும் (௫௭)

அந்தத்தலத்தில்அகலாப்பிரமத்திநீங்க
இந்தத்தலத்தைத்தமியேற்கருள்என்றிரந்த
கந்தர்ப்பஅரிக்குயர்காசியைக்காதலால்ஈய்ந்
துந்திக்கமலன்பிரயாகையைஉற்றஆறும் (௫௮)

மாதாரகம்ஆம்வரராமநன்மந்திரத்தை
வேதாஅருளால்உபதேசம்விளைத்தபின்னர்
சீதாகரம்ஆம்புனற்காசியில்சிவகோடிக்
காதாராமதாய்அரன்முத்திஅளிக்கும்ஆறும் (௫௯)

ஆசின்றியசொற்சிவபூசையும்அஞ்செழுத்தை
பேசும்திறமும்திருநீறணிபெற்றிதானும்
மாசின்றியஞானமும்காமமும்வாய்ப்பதல்லால்
ஏசின்றியமுத்தியின்ஏதுஅல்என்றஆறும் (௬௰)

அக்காமியபத்தினொடுஞானம்உண்டாதல்தானும்
மெய்க்காளகண்டற்கொருமூன்றுவிதங்கள்ஆக
புக்கோதுபூசையினில்சாத்திகபூசைசெய்த
தக்கோர்களுக்கேஎனும்உத்தரம்தந்தஆறும். (௬௧)

நிறைகின்றஞானநெறிஆகமநீதிகூர
செறிகின்றஅன்பினொடுபூசனைசெய்துளோர்க்கும்
நறைதுன்றுகொன்றைமதுமாலைநலம்கொள்வேணி
இறைவன்கொடுக்கும்பதம்அத்திரம்என்றஆறும் (௬௨)

திரம்உற்றிலகும்புவிஆதிசிவாந்தம்ஆக
வருதத்துவம்முப்பத்தொடாறெனவைக்கும்ஆறும்
அரனுக்கருவோடுருமிச்சிரம்ஆகவொன்பான்
உருஉண்டெனல்வைத்திகம்அன்றெனஓதும்ஆறும் (௬௩)

வீறாகியசீர்உடல்தத்துவம்மேயதொண்ணூற்
றாறேஅலவைதிகம்தன்னில்அனேகம்என்ன
பேறாகியபிண்டஉற்பத்தியில்பேசும்ஆறும்
தேறாதவரும்தெளிகைக்குணாகெய்தஆறும் (௬௪)

நீங்காதநீலமணிகண்டனைநீதிகூர
பாங்கானபூசைபுரிகின்றவர்பஞ்சசுத்திக்
காங்காகமத்தில்அடைவேஎடுத்தஞ்செழுத்துக்
கோங்காரயுத்தம்உறஉச்சரித்தோதும்ஆறும் (௬௫)

அத்தன்மைஆம்அப்பணவத்தினைஆரணத்தோ
டெத்தன்மைநூலும்அரியின்மயம்என்றஆறும்
உத்துங்கம்ஆனதிருஎட்டெழுத்தோட.தொன்று
மெய்த்தன்மைஆனபுவிமீதுவிளங்கும்ஆறும். (௬௬)

மயம்முந்துவேதம்உணர்மாயையின்வாதசந்நா
சியரும்பரிந்துதிருஎட்டெழுத்தோதுமாபோல்
அயல்ஒன்றும்ஓதாமையினுமேலஅஞ்சக்கரங்கள்
இயல்கின்றசாமானியமந்திரம்என்றஆறும் (௬௭)

திரம்உற்றஈசன்நிருமாலியம்தீண்டுகைக்கும்
அருகத்தஅல்லஎனும்வாய்மையும்ஆன்மலிங்க
தரணத்தைஆறுவிதமுத்திரைதம்மைமிக்க
பரதத்துவம்அல்லஎனும்வைதிகப்பண்புதானும் (௬௮)

பொற்புற்றபுராணத்திலும்வேதட்பொருட்கொவ்வாமல்
நிற்புற்றுவீறுபுனைதாமதநீதிதோன்ற
சொற்பெற்றபாவங்களும்முத்திலயத்தூரம்ஆக்க
கற்பித்தமாமோகனம்என்றுகழித்தஆறும் (௬௯)

மேலோர்கள்கீழ்மையவராகடைமேன்மைஆக
பூலோகமீதுகலிகாலம்பொருந்தும்ஆறும்
ஆலாலநாகஅணையானிடத்தன்பிலாதார்
ஏலோகநீதிபுனைபாடண்டர்என்றஆறும். (௭௰)

நிகழ்கின்றவேதநெறிசேர்தலின்நேமிமாலை
பகரும்புராணம்வுயர்சாத்திகபாகம்என்றும்
திகழ்சங்கொடாழிதிருமண்குறிதீட்டல்வேதம்
புகழ்கின்றமுத்தர்இயல்பென்னப்புகன்றஆறும் (௭௧)

பார்த்தற்குயர்சாரதியார்பொற்பதம்விளக்கும்
தீர்த்தப்பிரசாதம்நுகர்ந்திடும்செய்கைஎல்லாம்
ஏத்தற்கரிதாகியமுத்தியின்ஏதுஎன்று
வாய்த்திட்டசெழும்பிரமாணம்வழங்குஆறும் (௭௨)

சதுமாமறையால்இசைவாகியசாத்திரத்தால்
பிதம்ஆகியபல்பிரமாணம்விளங்கஓதி
மதுவார்கமலம்திருஉந்திமலர்ந்தமாயன்
பதமேபரமப்பதம்என்றுபகர்தஆறும் (௭௩)

தருமார்த்தகாமமொடுமுத்திஅச்சார்ங்கபாணி
திரமாக்கொடுப்பன்எனும்ஆறும்அத்தேவதேவன்
அருளால்பொருந்தும்அதுஅன்றிஅகண்டமுத்திக்
கொருமார்க்கமும்இல்அயல்யென்னஉணர்த்தஆறும் (௭௪)

இயல்நக்கனைவந்தனை பாத்திரன் என்றுபண்பால்
உயர் மெய்ப்புவியிற்சிலர் எண்ணிஉரைப்பதெல்லாம்
பயபுத்தியினும் அவன்காமியபாகம்யெல்லாம்
தயைஉற்றருள்தன்மையினும்எனசாற்றும்ஆறும். (௭௫)

பரம்ஆகியதேஅவனேஎனும்பத்தியாலும்
அரிதாகியமுத்தியைஎய்திடும் ஆசையாலும்
கருதாதரவால்பணிவந்தனைகைக்கொளும்சீர்
வரபாத்திரன்மால்என ஓதியவாறுதானும். (௭௬)

பாலத்துவிழிச்சிவனைப்பகவான்எனும்பேர்
கோலச்சசிசூரியர்தங்களைக்கூறுமாபோல்
ஓலக்கடல்சூழ்புவியோர்உபசாரம்ஆக
சீலத்துடன் ஓதுவர் என்றுரைசெய்தஆறும். (௭௭)

குளிர்பொற்றுளவத்தரிஆறுகுணங்களாலும்
அளவற்றவன் என்றருமாமறை ஆனஎல்லாம்
வெளிஇட்டுரைசெய்தலினால்அவ்விளங்குமாலே
தெளியப்பகவான்எனநிச்சயம்செய்தஆறும் (௭௮)

நாராயணோபநிடம்மைவிழிநாரிபங்கன்
ஆராதனைசொல்லியதென்றதின்கருத்தை
ஓராதுசத்தச்சலத்திற்பொருள் ஓதலால்ஓர்
சாராககூறிஉளதென்றிடும்தன்மைதானும். (௭௯)

மெய்ந்தான்மறையைத்தொகைசெய்துவிளம்புகின்ற
அந்நாரணோபநிடம்தன் னில்அங்கைகட்ஆக
நன்றாரணனைப்பரன்என்றுநவின்றுநாட்டி
அன்றேனதுபாசனைசொல்லி அமைத்தஆறும். (௮௰)

சீராகியஇம்மறைசொன்னதிறப்பதனைப்போல்
ஏரார்பலநூற்பிரமாணத்தியற்கையாலும்
நாராயணனுக்கிமவான்மடநாரிபாகன்
ஆராதகன்என்பதுசொல்லிஅமைத்தஆறும் (௮௧)

மொய்ம்பார்கரமும்மதவெங்கரிமூலம்என்ன
கம்பார்கமலக்கரம்மாயவன்காத்தமேல்நாள்
அம்போருகன்ஐம்முகன்ஆதியர்அத்தலம்போந்
தெம்பேர்அலறங்கிலைஎன்னஇருந்தஆறும், (௮௨)

அரன்தான் உபாசித்தமை அன்றியும் அன்றுமைக்கும்
வரமாமிருகண்டுவின்மாமகனுக்கும்வாய்மை
திரம்ஆகியமாலின் உபாசனைசெப்பிசெய்வித்
துரம்ஆகியநீடுலகத்தில்உவந்தஆறும். (௮௩)

மாலாராதுபாசனைநிற்கஅம்மாலின்மார்பத்
தேலார்குழலாள்தன் உபாசனையேஇயற்றி
பாலார் உமையாள்பதியேமுதல்பற்பலோரும்
நாலாவிதம்ஆகியதம்பதம்நண்ணும்ஆறும். (௮௪)

கள்ளார்மலர்மேலுறைவோனொடுகண்ணுதற்கு
நள்ளாவருதோற்றமொடுக்கமும்நாரணன்பால்
உள்ளாகும்அன்றிஅவன்அன்னவைஒன்றும்என்றான்
எள்ளாதுநிற்பன்நிலைஆய்எனஎன்றஆறும். (௮௫)

அரியில்துயிலும்பெருமான் அவதாரம்எல்லாம்
தருமத்தைஆக்கமிகுதுட்டர்கள்தம்மைநீக்க
கருதிற்சுருதித்தொகைதங்களைக்காக்கஎன்றே
பருதிப்பொருளில்தெளிவாகபகர்ந்தஆறும். (௮௬)

உதயக்கதிர்மண்டலத்துள் ஒளிஆகிஎல்லார்
இதயத்தினையும்முயல்விப்பவன்என்றும்வேணி
மதிவைத்திடும்சங்கரன்என்னவகுத்ததானும்
முதுசொற்சலமேளனும்மாற்றம்மொழிந்தஆறும் (௮௭)

அனைவோர்அகத்தின்உறைவானும்அருக்கன்வட்டம்
தனில்வாழ்பவனும்இருகஞ்சத்தடங்கண் உள்ளான்
எனமாமறையும்பலநூலும்இயம்பலால்அக்
கனகாம்பரமால்எனநிச்சயம்கண்டஆறும். (௮௮)

அரனைச்சுரர்வேள்வியின்அப்புறம்ஆக்கலாலும்
வனாவுற்றவனுக்கவிமிச்சிலவழங்கலாலும்
கருதிற்பசுவின்பதிஆம்பெயர்கண்ணுதற்கு
பரிவுற்றிமையோர்வரம்ஈயப்பலித்ததாலும். (௮௯)

மதிஒன்றியசெஞ்சடைவானவன்வாய்த்தவேள்விப்
பதிஅல்அவனும்பலதேவரும்பாருளோரும்
எதிர்இன்றியவேள்விகள்தம்மில்எசிக்கநின்றான்
பதுமம்திகழ்உந்தியனேஎனும்பான்மைதானும். (௯௰)

ஏர்க்கும்படிகூறியபின்பிருவோர்கள் ஆம்இவ்
வார்க்குங்குமமென்முலைமங்கையர் வாய்மைஆக
பார்க்கும்பொருளாபரவத்துவைப்பாரின்மீதே
ஆர்க்கும்தெரியும்படிபேசுவதாயினேன்ஆல். (௧௧)

௩-வது-விடயத்திறப்படலம்முற்றும். ஆகதிருவிருத்தம் [௱௩

அரிதாசர்திருவடிகளேசரணம்.



## ௪-வது-புராணவிவேகப்படலம்.

அரிசங்கரர் அந்தர் அந்தரம் ஆய்ந்த நூலால்
தெரிகின்றதனால்பயன் ஏதெனில்சிற்பரத்தின்
சொருபம்தெரியாதவர்முத்திதொடர்ந்திடார்என்
றுரைத்திடும்நான்மறைஆதலின் ஓதல்உற்றேன். (௧)

வளம்ஒன்றியஅப்பரவத்துவைவாய்மையாலே
அளவின்றிடுதற்கெளிதோ எனில்ஆடகச்சீர்
நளினம்திகழ்வாணொடுமாமறைநாலுகாண
எளிதன்றதனால்உலகத்தவர்யாவர்காண்பார்! (௨)

அரிதென்னினும்அப்பரவத்துவுக்கந்தவேத
புருடன்பிரமாமுதலோர்செழும் பொற்பிதென்றும்
சொருபம்இது நாமமும்ஈதெனச்சொன்னசொன்ன
உரையின்படியே தமியேனும்உரைப்பதானேன் (௩)

அன்றுன்முகனேமுதலோருடன் ஆரணங்கள்
இன்றுன் உலகில்பரதேவதைஎன்பதெல்லாம்
சொன்னால்முதலே அது நிற்க அச்சொற்கள்தம்மை
பின்னேமொழியப்பணிஎன்பது பேசவேண்டில். (௪)

அகல்வேதநூலைமனமாச்சரம்அற்றுணர்ந்தோர்
மிகுசிற்பரத்தைவெளிகாண்பர் அவ்வேதநல்நூல்
சகலாதிகாரம்அல் ஆதலில்தண்தமிழ்ப்பா
தொகையால்உலகர்க்கிதமா இது சொல்லல்உற்றேன் (௫)

மைவாரிகுழல்எழில்கொண்டுயர்மாநிலத்தில்
மெய்வாய்மைஆனமறைநாலின்விரிந்தசெஞ்சொல்
தவ்வாதஇந்தப்பெருநூல்சகலாதிகாரம்
எவ்வாறுபெற்றதெனும்தன்மைஇயம்பவேண்டில். (௬)

அல்லார்மிடற்றன் உடன் அச்சுதன் தன்னை எத்தும்
சொல்லான இந்தத் தொகைநூல் மிகும் தொல்லைநூல்கள்
எல்லாம் உணர்ந்த பெரியோர் செவிக்கேற்கும் ஒன்றும்
கல்லாதவர்க்கும் பொருள் செய்யக் கருத்ததாமா (௭)

மென்கன்றுமென்றதனைமுகோதியவிருபோல
புன்கல்வி கொண்டு பெரியோரைப் பொருள் செயாமல்
வன்கண்மைம் பசும்மனமாச்சரமாக்கள் அந்த
நன்கஞ்சமேவும் அயன்வாய்மையும் நப்பலார் ஆல் (௮)

நற்பாரில் மூடர்சிலபேர் நயவார்களேனும்
பொற்பாயின இப்பனுவற்கொரு புன்மை ஆகா
கற்பூர ரசிவிலைதன்னைக் கடைக்குள் உப்பு
விற்பான் ஒருத்தன் அறியான் அதில் வீறு போமோ. (௯)

மாகத்தொடு பானாவிழுங்கு மகாந்தகாரம்
போகக்கதிரோன் உதயஞ்செயும் போக்குதோற்றம்
சாகைத்தருவின் பெரும் பொந்துதனில் பதுங்கும்
கூகைக்கிதம் அன்றதனால் ஒரு குற்றம் உண்டோ. (௧௦

உலகத்தியற்கை இது ஆதலில் ஓடை நெற்றி
மலைசெற்ற தேவன் நெடு நாரணன் வல்லமையெல்லாம்
பலபட்ட நூலின் பிரமாணம் பகர்ந்து காட்டி
நிலைநிற்கும் ஆறுபுவி மீது நிகழ்த்துவேன் ஆல். (௧௧)

வன்பாய்ச்சல் பாயப்பதுங்கும் வரிவேங்கை பொங்கி
மென்பாய்ச்சல் அன்றி அறியாது வெள்ளாடடக்கம்
நன்பாக்கள் வல்லோர் நவின்றார் அது நானிலத்து
புன்பாக்கருதும் தமியேன் புகலாதொழிந்தேன். (௧௨)

௪-வது-புராணவிவேகப்படலம் முற்றும்-ஆ திருவிருத்தம் [௱௧௮

அரிதாசர் திருவடிகளே சரணம்.



## ௫-வது-நகரப்படலம்.

மருவார் துளவத் தொடைமால் ஒரு மச்சம் ஆகி
பெருவாரிதயில் புகு சோமுகன் பேரமாள்வித்
திருவாகிய மாமறை யக்கமலாதயற்கு
திருவாய்மலர்ந்தால் ஒருசீதனஞ் செய்யருள் தில். (௧)

விரியும்தடங்குன்றதுநாள்முதல்மின்னுவேத
கிரிஎன்றுதன்பேர்கிளக்கின்றதுகீழ்நிவந்த
புரியும்சுரமும்புனலஆறும்அப்புண்ணியப்பேர்
தெரியும்படியேனிகழ்கின்றஇத்தேசம்யென்றும் (௨)

தோயம்புகுந்தம்புவியைச்சுடர்ஆழிமாயன்
சாயம்புவிக்குப்பரிந்தீந்ததுவும்சாலநெஞ்சில்
நேயம்பொருந்துமுகற்பூசையைநீதிவேதம்
ஆயும்புலவோர்செயநின்றதும்அந்தஊரில் (௩)

அம்மாநகர்நீடரிவாசபுரப்பெரும்பேர்
இம்மாநிலத்தில்இலகித்தழைத்தேடுலாவும்
செம்மாமலராள்திகழ்வைபவம்சேர்ந்துதிங்கள்
மும்மாரிபொழிந்திடநற்செகம்மூன்றும்எத்த (௪)

பொன்னின்மடம்எங்கணும்வேதபுராணம்ஆர்ப்ப
மின்னும்மணிஆலயம்யாவும்விழாஅலம்ப
பன்னும்மனைஆனவைமங்கலவாணிபம்ப
துன்னும்தெருவில்படகங்கள்துவைத்துலாவ (௫)

வளப்பார்புகழும்படிவாழும்இம்மாநகர்க்கன்
பிளப்பாஒருதூணினில்வந்துபிறந்துளானுக்
குளப்பாவனைகூர்அரிதாதன்என்றோதும்நாமக்
களப்பாளன்தானைத்தளங்கள்களைகண்டநாளில் (௬)

௫-வது, நகரப்படலம்முற்றும். ஆ திருவிருத்தம். [௱௨௪]

அரிதாசர்திருவடிக்களேசரணம்



௬-வது. நதிப்படலம்.

சிகரக்கனகக்கிரிசூழ்ந்திடுசெய்யபானு
மகரத்தினைநண்ணியபுண்ணியமாதம்மேவ
பகரற்கருஅந்நகர்மைந்தரும்பாவைமாரும்
முகரக்கடல்போல்நதிஆடமுயன்றுசென்றார் (௧)

செல்லும்திரளில்திருஆழியும்சங்குமென்தோள்
புல்லும்குறியும்திருநாமமும்பொற்புலாவும்
வல்லன்னகொங்கைவனமாலையும்ஆகவாயில்
பல்லென்றுமுல்லைநிரைகொண்டொருபாவைசென்றாள் (௨)

வில்லார் நுதலில் திரிபுண்டர வெள்ளை நீறும்
அல்லார் குழல்மேல் அணிகொன்றையும் அக்குமாலை
புல்லார் வளர்பொன் முலையும் பொலிவாக இன்பச்
சொல்லார் அமுதன்னவள் மற்றும் ஓர் தோகைபோலுள் (௩)

இம்மான் அனையார் இருவோர்களும் மேவியான் முன்
அம்மால் அரனைப் புகழ்கின்றவர் ஆகநாட்டும்
செம்மா தளைநேர் நகை ஆரணச் செல்வமாதும்
மைம்மா முகில்நேர் குழல் ஆகமவல்லி தானும் (௪)

காதைப்படியுங் கடைப்பார்வை கொள் காமவேதம்
ஓதப்படிவம் உயிர்மேவி உலாய என்ன
சீதப்படிகத் தொளிர் ஆரணி தீர்த்தம் ஆட
வேதப்படிவாய் அணைந்தார் இவர் மின்கள்போல (௫)

௬-வது. நதிப்படலம் முற்றும் ஆக திருவித்தம். [௱உக]

அரிதாசர் திருவடிகளே சரணம்

---

## எ-வது. தோத்திரப்படலம்!

வேறு.

அனையவர் நான்முகன் அவ்வழி வேள்வி செய்தவ விருதம் படி
புனித மகாநதி சகலமும் இவ்வழி போதுக என்றருளா [வான்
தனதுகை மேவிய ஆரணி கோடி மிகுதர மிசை கீறுதலால்
கனமலி ஆரணி ஆனநதிப் புனல் கண்டு மகிழ்ந்தனரே (க)

களிமயில் மேல் திகழ் அனையவர் ஆரணி கண்டு களித்தளவே
இளமதி நேர் நுதல் ஆகமவல்லி எனும் பெயருக்கிசைவாள் [வியும்
குளிர்புனலின் துறை மையநடந்து ஒளிர் கொன்றையும் அம்பு
வளர்சடை வானவர் தம்பெருமானை மகிழ்ந்து துதித்திடுவாள் (உ)

ஆலமரத்தை அடக்கிய வித்தென அண்டம் எலாம் எளிதில்
சால அடக்கி அளிப்பவனே திகழ் சந்திரசேகரனே
மாலயனுக்கும் அனந்த மறைக்கும் நல்வானவருக்கும் எலாம்
மூலம் எனத்தகு காரணனே நமமுக்கணனே நமவே [சேர் (௩)

மெய்ப்புனலில் குளிரும் கிளர்வன்னியில் வெம்மையும் மென்மலர்
ஒப்பறு நன்மணமும் மணியில் திகழ்கின்ற ஒளியும் எனல் ஆய்
செப்பு சராசரம் எங்கும் நிறைந்த திகம்பரனே அடையார்
முப்புரம் வேக நகைத்தவனே நமமுக்கணனே நமவே (௪)

அச்சகளத்தயன் ஆய் அகிலங்கள் அளித்திடு அவ் அவத்தனையும்
பச்சுரு அச்சுதன் ஆம் உருவம் கொடு பாலனை செய் குதிபின்
நிச்சயம் ஆகிய நின் வடிவால் வெறு நீறுபடுத்துதி நீள்
முச்சிகை ஆயுதனே சிவனே நம முக்கணனே நமவே (ரு)

ஆதிபரப்பிரமத்தொளி ஆய் அதில் ஆகிய மூஉரு ஆய்
வேதவிழுப்பொருள் ஆய் அனல் கால் புனல் விண் புவி ஆம் வித
ஓது சராசரம் ஆய் உடல் ஆய் உயிர் ஆகியும் யோகியரால்(ம்ஆய்
மூதுணரப்படும் அற்புதனே நம முக்கணனே நமவே (சு)

எண்டிசையும் புயம் அங்கி திவாகரன் இந்து விலோசனம் நீ
டண்டகடாமுகடே முடி பன்னகர் ஆலயமே அடியா
கொண்ட பெருந்திருமேனியனே ஒளிர் கொண்டல் நிறத்தவனும்
மூண்டகனும் தெளிதற்கரியாய் நம முக்கணனே நமவே (எ)

என்று துதித்த சிவாகமவல்லி எழுந்து புனல் ஆடியபின்
சென்று நதிக்கரை ஏறும் அன்புள சேடியர் வந்தணுகா
மின்திகழ் பட்டணிவித்து மணம் கமழ் மேனி புலர்த்தி நிறம்
துன்றிய பல் பணி பெய்து மகிழ்ந்து அருகிக்க இருந்தனுமே (அ)

அன்னவருக்கெதிரே இருதாளில் அலம்பு சிலம்புடையாள்
மன்னும் மணிப்பணி மேகலை ஆரணவல்லி எனும் பெயராள்
தன்னதி புக்கு மகிழ்ந்து அளி பம்பு நறுந்தொடை சேர் அளகச்
சென்னி முகிழ்ந்த கரத்தினள் அப்பொழுதே தானைப் புகழ்வாள்(

நாரணனே நம நீ உதவும் படி இருவகைப் புவன
பாரணனே நம சங்கரனைத் தரு பங்கயனை பெறு நால்
ஆரணனே நம அற்புதனே நம அண்டம் எலாம் உதவும்
பூரணனே நம நீ அருள்வாய் இருபுத்தியும் முத்தியுமே (ய)

பண்ணமர் வேதமும் எட்டரிதாகிய பாவன நின் உருவத்
தென்னும் உரோமமொழுக்கில் அரும்பி இலக்கம் இலாதன ஆய்
நண்ணிய அண்டசமூகம் வளர்ச்சியும் நாசமும் நின் வயின் ஆம்
புண்ணிய லீலையனே அரியே பரிபூரணனே நமவே (யக)

அத்தியின் இன்கனி உள் உறைசில் உயிர் அத்தரு நேர் அறியும்
சத்தியிலா அதுபோல் உனதாகிய தத்துவம் உன்னிடை உற்
பத்திய அண்டம் எல்லாம் உறை சங்கரர் பல் பிரமாதிகளால்
புத்திசெயற்கரியாய் அரியே பரிபூரணனே நமவே (யஉ)

பால்விரவும்புனல்போல்முடிவுன்ஞெடுபயில்புவனங்களிலே
நால்விதவேதனும்முக்கணனும்தனிநாயகர்என்றிதயம் [வன்
மால்விளையச்செய்துநின்அருளால்வரும் மற்றவரோடொரு
போல்விளையாடுபரம்பரனேபரிபூரணனேநமவே (௰௩)

அந்தமும்ஆதியும்ஆகியபேர்ஒளிஆம்உன்மாமறையால்
முந்துணர்வோர்சிலர்அல்லதுமாறுகொள்மோகனநூல்ழிநீ
தந்தபெருஞ்சமயங்களையேபாதத்துவம்என்றுணர
புந்திமயக்கிடும்அச்சுதனேபரிபூரணனேநமவே (௰௪)

இன்னனஆகியநாரணநாமம்இயம்பிவழுத்தியபின்
தன்னுளம்ஒத்துநிறைந்துதெளிந்ததடம்புனலில்படிய
பொன்னிபகீரதிகன்னிஎனத்தகுபூரணஆரணிஆம்
அனனதியின்கரைநின்மெல்லெனஆரணவல்லியுமே (௰௫)

பொற்புளபட்டணிவித்தொளிர்மேனிபுலர்த்தியகேடியர்தாம்
நற்படிமக்கலம்உய்த்திடஆிருநாமமும்இட்டழகார்
பற்பலபூண்வனமாலைஅணிந்துபசுந்துளவம்புனையும்
தற்பரனேஎனஅன்பொடுகண்டஒர்தவிசில்இருக்கலுமே(௰௬)

எ-வது. தோத்திரப்படலம்முற்றும். ஆ திருவிருத்தம் (௱௪௫)

அரிதாசர்திருவடிகளேசரணம்.



அ-வது- கடாவிடைப்படலம்

ஆரணவல்லியைஆகமவல்லிஅரும்பியகொங்கைநல்லாய்
நாரணனைப்பரதத்துவன்என்னவும்நண்அகிலங்கள்தரும்
காரணன்என்னவும்ஈசனையும்தருகாவலன்என்னவும்நீள்
பூரணன்என்னவும்என்னெதிர்சொல்லினைபுதுமைஇவ்என்றனுமே

ஒவியம்ஒப்பவள்அவ்வுரைதன்னைஉகந்துநகைத்தனள்ஆய்
பூவைநிலப்படியேசிவனைக்சிலபொய்ம்மைமொழிந்தனைநீ
தேவர்துதிக்கும்முகுந்தன்மிகும்புகழ்செப்புதல்ஆயிரம்ஆம்
நாவுளவற்கும்அரீதஅதுஇன்றுநமக்கெளிதோஎனவே (உ)

பூரைஇனிப்பலசொல்லுமதென்னபுராந்தகனுக் கெழில்மால்
நேரோனஆரணவல்லிநிகழ்த்தினையில்எவர்க்கும்முகம்
சேரிமையிற்குறைகண்களில்வந்துதெரிந்திடுமோதெளிநின்
பேர்அறிவுக்கும்வரற்கவரற்கபிறங்குதல்என்றலுமே (௩)

சீரிதறிந்திலைஆகமவல்லிசிவன்பரம்என்றனைமா
மேருவின்நேர்அறியாதவர்மற்றொருவெற்பைவியப்பது போல்
ஓரொருபூமியில்ஓர்ஓர்உகங்களில் ஓர்ஒருநூல்விரிவாம்
பேரறிவாளர்அலாதவருக்கதுபெருமையதாம்எனலும் (௪)

இப்படிநீசிலசொல்லுமவென்னஇரண்டுபெரும்சமயத்
தொப்பறுநூல்களும்மண்மிசைஇந்தஉகத்தும்வழங்கிலவோ
அப்பெருநூல்களில்அச்சமயங்களில்ஆகியதெய்விகமும்
செப்பிடவேபெருமைச்சிறுமைச்செயல்தெரிதரும்என்றலுமே ௫

வேறு,

திங்கள்நேர்திருமுகத்துச்சிவாகமவல்லிகேள்என்
றங்கயல்அனையசெங்கண்ஆரணவல்லிசொல்வாள்
உங்கள்தம்சமயநூலைஒன்றுநூறுகமுன்னோர்
சங்கமுத்தமிழால்செய்தார்தழைத்தஅப்பனுவல்எங்கும் (௬)

தீதறும்இந்தநாடுதிராவிடம்ஆகையாலே
வாதனைஉங்கள்நூல்மேல்வளர்ந்ததுமாயோன்கேழ்மை
பூதனேமுதலோர்ஆழ்வார்புகன்றவைசிலஉண்டந்நூல்
வேதநூல்உணர்ந்தோர்க்கல்லால்விரித்திடும்பொருள்விளங்கா (௭)

ஆதலால்மாயோன்மேன்மைஅறிவதற்கரியதென்ன
காதுலாவிழியாள்சைவாகமப்பெயர்கலாபமஞ்ஞை
தாதுலாம்தொடைஇராமசரிதைபாரதங்கள்தென்னூல்
தீதிலாப்பாஅன்றேமால்திறம்தெரியாதோஎன்றாள் (௮)

ஆயதுசொல்லக்கேட்டஆரணவல்லியெங்கள்
நாயவன்அனந்தலீலைமகிமையால்ஆயஇந்த
பாயிரபுராணம்தன்னைந்தமிழ்ச்செய்தார்செய்த
தாயிரத்தொன்றும்இல்லைஅதிலும்நீஅறிந்ததற்பம் (௯)

என்றலும்பொருதாள்ஆகிஎழிற்சிவாகமத்துவல்லி
தென்றமிழ்த்தொடையால்மாலைச்செப்பியதற்பம்ஆகில்
நின்றஎப்பனுவலாலேநிரம்பஓதியதேஎன்ன
நன்றிதுகேட்டிஎன்றுநான்மறைவல்லிசொல்வாள் (௰)

ஈரிருமறைகள்ஆனஇருக்கெசுச்சாமாதற்வம்
பேரியல்தயித்திரீயம்பிரகதாரணியம்லிங்கம்
சாரிரம்நாரசிங்கம்சதபதப்பிராமணம்சொல்
காருடம்கெற்பம்சாந்தோக்கியம்கடவல்லிமுண்டம் (௰௧)

முற்கலோபநிடம்மேலோர்மொழிந்திடும்பிரமவிந்து
சொற்குலாம்தாபனீயம்சுவாபனுபநிடம்ஞான
வற்கமோடியாச்சவற்கம்மயித்திராவருணம்மன்னும்
சிற்குணலயம்தான்மந்திரவுபநிடம்மாணடுபம் (௰௨)

இளர்மகோபநிடம்காலாக்கினியுருத்திரம்சாபாலம்
துளவநாரணம்சுவேதாச்சுவதரம்சுபாலம்சொல்லால்
அளவிலாப்பாரமாற்பம்அதருவற்சிரம்என்றெண்ணி
தளமலரவன்சொல்வேதாந்தங்கள்முப்பத்திரண்டும் (௰௩)

ஆறுசீர்வாசிட்டம்ஆரிதம்வியாதநல்நூல்
காசிபம்பாரத்துவாசம்கணபராசரியம்என்ன
பேசியசாத்திகத்தின்பெரும்பிரமாணம்தன்னை
சாசுதம்ஆகக்காட்டும்தருமசாத்திரங்கள்ஆறும் (௰௪)

ஆனதாக்கியம்நீள்காத்தியாயனம்ஆத்திரேயம்
மானவம்யாச்சவற்கம்வைட்டிணவம்தான்என்றும்
மோனமாதவர்களாலேமொழிவதற்குரித்தாய்ப்பாரில்
ஏனையோர்புகழும்ஓர்ஆறிராசததருமநூலும் (௰௫

வாருகற்பத்தியம்சாம்வர்த்தம்ஔசனசம்சாத்தம்
நேரறுகோதமம்யாமிகம்எனநிகழ்த்தும்தன்மைப்
பேரிணஆய்மெஞ்ஞானப்பெருந்தவமுனிவர்பேச
தாரணிவிரும்பும்ஆறுதாமததருமநூலும் (௰௬)

கந்தம்ஆக்கினேயம்சைவம்கமடம்மச்சியம்இலிங்கம்
தந்தபேர்நிகழும்தொல்லைத்தாமதபுராணம்ஆறும்
வந்தபாகவதம்பற்பம்வராகம்வைணவத்தினோடு
சிந்தைகூர்கருடம்நாரதீயம்சாத்திகங்கள்ஆறும் (௰௭)

பேசுசீர்ப்பிரமாண்டம்சொல்பிரமகைவர்த்தம்பேர்போம்
மாசிலாமார்க்கண்டேயம்வாமனம்பிராமம்மண்மேல்
வீசியகல்விச்செல்வம்மிகுபவுடிகம்என்றேன்
றேசறுமுனிவோர்செய்தஇராசதபுராணம்ஆறும் (௰௮)

பார்க்கவம்சோமம்சாம்பம்பரவுசீர்வருணம்ஆர்க்கும்
ஏற்கும்மானவம்நற்காந்தம்இலங்குவாயவியம்செஞ்சொல்
தீற்கம்ஆய்நிகழுகின்றசெழுந்திருவாசம்தேங்கும்
நாற்கடற்புவிக்குஞ்ஞானநயனம்ஆம்நாரசிங்கம் (௰௯)

நன்பராசரம்மாரீசம்நார்தம்காபிலம்சொல்
இன்பஆத்தியம்கௌசிகபுராணம்வாசிட்டம்
மூன்பதாம்பிரமாண்டம்சீர்மொழிசிவதருமம்பென்ன
ஒன்பதோடொன்பதானஉபபுராணங்கள்தாமும் (உ௰)

அங்கிராவியாதனூர்கற்பாலனூர்ஆபத்தம்பர்
தங்குசீர்வருணனூர்போதாயனமுனிசாபாலர்
துங்கஆரீதர்தாக்கர்சுமந்தமனூர்சுபோதர்
பொங்குலோகாக்கியார்வெம்புலிப்பெயர்புனிதரென்பார் ()

பிரமசம்பவர்பன்னீதிபெறும்சமதங்கியார்நீள்
இருநிலம்புகழ்ந்திடும்காரிடினியாசினன்படீனன்
சரமொன்றபெயராஉள்ளார்சாண்டிலமுனிவர்வாக்கால்
விரவிசுர்ஒன்பதாகிவீறுபமிருதிதானும் (உஉ)

பரத்துவாசன்வாசிட்டன்பராசரன்சவுனகன்சீர்த்
திரத்துநாரணன்அகிர்ப்புத்தினிமுனிநாற்பத்தெண்ணு
யிரத்துள்எண்ணியகும்பத்தான்இரணிய கெற்பன்யென்பார்
உரைத்துமாநிலத்துநாட்டஒங்குசங்கிதைகள்தாமும் (உங)

பரவியற்பம்பற்போற்பவமொடுவைபவம்புட்
கரம்மிகுநாரதீயம்காட்சிசேர்சனற்குமாரம்
வரநளகூபரம்சீர்வாசிட்டம்சனகம்மாஐந்
திரம்மிகுசத்துவாக்கியம்திலகம்நற்புவனமோகம் (உச)

துன்னியபரமம்மாயேச்சுரம்செயம்பரமநீதி
மன்னுசாத்துவிதஞானம்வாய்த்தபவுரிடம்எனப்பேர்
பன்னுசங்கிதைநூற்றெட்டாம்பஞ்சராத்திரமும்அன்பால்
நன்நிலம்மதித்தவைகானசம்எனுநாமநூலும் (உரு)

சிரணிகமரத்தண்ணல்திருஅருள்பெறுவான்மீகர்
எரமர்வாக்கால்ஓதும்இராகவகாதையென்றும்
பாரதகாதைஆனபஞ்சமவேதம்என்றும்
தாரணிமுழுதும்போற்றத்தகும்இதிகாசம்தாமும் உசு

போதிடங்கொண்டஉந்திப்புராதனன்பூவைபங்கன்
ஆதரங்கூரமுன்னாள்ஆடியபரதநல்நூல்
மாதிடம்ஆனபாரோர்மதித்தவாகடநூல்நீடும்
சோதிடம்முதலஆகச்சொல்லியநூல்கள்தாமும் (உஎ)

காண்டகுவையாசிகம்காபிலம்கவுதமீயம்
நீண்டசைமினியம்பாணினீயம்நன்நீதிஓத
மூண்டகாணாதம்என்றுமுனிவரால்மொழியப்பட்ட
மாண்டகுதெரிசனத்தின்வருக்கம்ஓர்மூன்றும்மூன்றும் (௨௮)

யாதவம்மாயாவாதம்இரணியகெற்பம்பாரில்
வாதியர்க்கிடங்கொடாராமானுசமதம்நால்வேத
சாதனப்பார்க்கரம்சொல்தத்துவவாதம்என்ன
மேதையோர்ஆவோர்சொன்னமிகுமதம்அஞ்சும்ஒன்று. (௨௯)

பஞ்சராத்திரம்நீள்சைவம்பவுத்தம்ஆருகதம்பாரில்
விஞ்சுசொற்சாருவாகம்மிகுபசுபதம்ஆம்போர
நெஞ்சுவந்துவரிசூழும்நெடுநிலமாந்ததந்தம்
தஞ்சம்என்றனுசரிக்கும்சமயம்நாலுடன்இரண்டும் (௩௰)

மற்றுடசமயநூலும்வரம்பறஇரும்பைக்காந்தம்
பற்றியதென்னநெஞ்சில்பணிந்திடப்பணிவேறின்றி
கற்றுமெய்ப்பொருள்ஆராய்ந்துகருத்தில்மாச்சரியம்தீரச்
செற்றவர்கன்றேதோன்றும்சீதரன்மகிமைஎல்லாம் (௩௧)

என்னஆகமமடந்தைஎயிற்றரும்பிலங்கநக்கு
சொன்னஇந்நூல்கள்எல்லாம்துளவமால்மகிமைஅன்றி
பின்னுசெஞ்சடையினான்தன்பெருமைபேசாதோஎன்ன
மின்னிகர்வேதவல்லிமீளவும்விளம்பலுற்றாள் (௩௨)

இப்பெருநூல்கள்எல்லாம்ஈசன்மால்பெருமைதோன்ற
செப்புகையாலேஅன்றேசிறுமையும்பெருமைதாமும்
கைப்பதுவானநெல்லிக்கனிஎனக்கண்டதென்றாள்
அப்பொருள்சிந்தைசெய்யாதாகமவல்லிசொல்வாள் (௩௩)

அழகிதேசொன்னாய்மின்னேஆரணவல்லியேயிப்
பழமறைநாலும்மூன்றுபத்துடன்புராணம்ஆறும்
வழுவில்வேதாந்தம்என்றுவகுத்தமுப்பத்திரண்டு
தழையும்நால்ஒன்பதானதருமசாத்திரங்கள்தாமும் (௩௪)

தோமில்சங்கிதைகள்ஆதிசொன்னஇந்நூலும்அன்றி
காமிகம்யோகசம்சொல்காரணம்அசிதம்தீத்தம்
தீமைதீர்சூக்குமம்பிம்பம்சிந்தியம்விசயம்வீரம்
மாலயசேர்கிரணம்சித்தம்வாதுளம்சுப்பிரபேதம் (௩௫)

தஞ்சம் ஆம் சர்திரஞானம் சகத்திரயகுடம் பாரில்
விஞ்சு சந்தானம் பாரமேச்சுரம் விமலஞான
புஞ்ச நிச்சுவாசம் சாயம்புவம் புரோற்கீதம் நீடும்
அஞ்சுமான் சர்வஉக்தமனலம் லளிதம் ரௌரவம். (௧௬)

என்னும் இவ் ஆகமங்கள் இருபதும் எட்டும் பாரில்
அன்னிய வீரமாயேச்சுரம் பாரமாத்தம் ஆகி
மன்னிய சிவசாயுச்சமந்திர கோப்பியம் சீர்
தன்னிகர் இல்லா அட்டோத்தரச்சத உருத்திரியம். (௧௭)

அரிகர பாடணம் பேருணதத்துவசாரம் சொல்
பரமமாரகச்சியம் சீர்ப்பவுடிகம் சைவதன் மோத்
தரம் சிவதருமம் பேதசைவசித்தாந்தஞான
வரசொருபப்பிரவேசம் வச்சிரகுசிமற்றும். (௧௮)

ஏனைய பிரமாணங்கள் எண்இல எமக்கும் உண்டு
மீனிசர் தடங்கண் நல்லாய் வேதசாத்திரபுராணத்
தான உத்தரம் நீ சொன்னால் அதற்கும் உத்தரித்து வெல்வேன்
நான் உனக்கிடையேன் என்ன தான் மறைவல்லி சொல்வாள் (௧௯)

ஓறிமம் அனையாய் நீ இங்குரைத்த ஆகமங்கள் எல்லாம்
வேதசாத்திரபுராண விருத்தம் அற்றிருக்கில் அன்றே
நீதி சேர் தத்துவத்தை நிருபணம் செய்யல் ஆம் என்
றுதவுடனே மீண்டும் அருமறைவல்லி சொல்வாள். (௨௰)

விரைமலர்க் குழல் மானே நீ வெகுவிதம் ஆக்கூறும்
பெரிய ஆகமங்கள் போலப் பிறை அணி சடையினானை
பரம் என வேதத்தானும் பகரும் என் றிருத்தி பாலும்
உரிய அச்சுருதி எல்லாம் உரைத்திடும் பரமார்த்தம் கேள். (௨௧)

மன்னு சாமந்தர் தானு வகைப்படைத் தலைவர் மேல்கீழ்
உன்னும் மந்திரிகள் என்பார் ஓர் ஒருத்தரையே பார்த்து
பன்னு சொற்புலிமை ஆறும் பட்டபுத்திரா என்று சொல்லி
அவ்வவர்க்கிறைவன் என்றூர் அரசனைப் புகழ்வார் போல (௨௨)

ஈசன் அக்கினி பதங்கன் இந்திராதியரை வேதம்
ஆசறத் துதிக்கும் காலத்தவர் அவர் அதிகர் போலப்
பேசும் அவ் வேதந்தன்னைப் பின்புமுன் போக்கிப் பார்க்கில்
ஏகிலா இவருக்கெல்லாம் இறைவநாரணனே என்னும். (௨௩)

வேதமெய்ப்பொருள்கொள்வார்க்கு வியாதசூத்திரமாந்தத்தால்
ஏதொருபொருட்குமுன்பின் இசைந்ததென்றுணர்தல்வேண்டும்
ஓதுசாத்திரபுராணத்துறுபொருள்கொள்ளுவார்க்கு
பேதம்அற்றவ்வேதத்தைப்பின்செலப்பெறுதல்வேண்டும், (சச)

அப்படிஅன்றிமுக்கணன்பெயர்ஆரணத்தில்
வைப்புறஇருந்ததென்றேவனுவுடன்வழக்கும்வாதும்
செப்புதல்திறமையாகாச்சிறந்தசாத்திரபுராணம்
ஒப்பவேதத்துக்கேற்கஉரைப்பதுத்தரமதாகும், (சரு)

சாத்திரம்வேதம்என்பதரணிமேல்மாந்தர்க்கெல்லாம்
நேத்திரம்இரண்டும்ஆகும்நிகழ்த்தியஇரண்டில்ஒன்று
மாத்திரம்இலாதார்காணார்மற்றதுஉம்இலர்எதுக்கும்
பாத்திரர்அல்லர்அந்தர்என்றிவைபலவும்சொன்னாள், (சசா)
அ-வது,கடரவிடைப்படலம்முற்றும் ஆகதிருவிருத்தம்[ாசுக]
அரிதாசர்திருவடிகளேசரணம்,

---

## கூவது-அந்தணர்சந்நிதிப்படலம்.

ஈதுரைசெய்யக்கேட்டஎழிற்சிவாகமமடந்தை
ஓதியஉலகுக்கெல்லாம்ஒருவன்என்றுரைக்கும்நாதன்
ஆதிமாயனேஆகஅன்றிஈசனத்தன்ஆக
வேதசாத்திரபுராணவிளக்கினால்காண்டும்என்றாள் (க)

மெல்லியல்இணையசொல்லவேதமாமடந்தையார்மேல்
எல்லைஇல்கல்விஉள்ளாள்இவளுடன்யாவதொன்றும்
சொல்லவும்தருமேசொன்னால்சொன்னஉத்தரத்தைஒப்ப
வல்லளும்ஆகும்என்றுமனமகிழ்ந்தினிதிருந்தாள். (உ)

வேறு-

நேரிழைமாணூர்இன்னனசொல்லாநிகழ்காலத்
தாரணிஆருடித்தமதானஅனுட்டானம்
சீரியஆகச்செய்துமுடித்துத்திகழ்வேதம்
பாரில்அனேகம்மெய்யொடுலாவும்படிஎன்ன, (ங)

நெற்றிப்புண்டார்பொற்புளநன்மேனியர்சென்னி
சுற்றிப்போர்த்துதரித்தவர்காவித்துகிலாளர்
பற்றைச்செற்றவர்மென்கலையின்தோல்பயில்யோகத்
தொற்றைத்தண்டினர்முத்தண்டினர்அங்கொருசாரார் (ச)

கவித்தநிழற்குடையார்குண்டிகையார்கழையார்நீள்
பவித்திரம்ஆனதருப்பைசமித்துபயில்கையார்
தவத்தொழில்அல்லதுமற்றொருதன்மைச்சரிதத்தால்
உவத்தல்இலாதெஞ்சந்தணர்மற்றங்கொருசாரார் (௫)

வாகுவில்வெள்வளைஆழிதரிப்பார்வனமாலைக்
கோகனகத்தவர்பன்னிருநாமக்குறிஉள்ளார்
மேகநிறத்திருமால்கழல்அல்லால்வியவாதார்
யோகியர்ஞானப்பாகவதப்பேர்ஒருசாரார் (௬)

பூதியின்நீள்முப்புண்டரர்மார்பில்புரிநூலார்
சோதியதாகச்சூழ்சடையார்நற்சுவலம்தாலார்
வேதபுராணதாகமநூலின்விரிவெல்லாம்
ஓதியமேலதப்பாசுபதத்தார்ஒருசாரார் (௭)

ஆதாரத்தெய்வத்திருமால்பொன்அடிதாழ
போதாநிற்பார்வேதபுராணப்பொருள்கேளா
வேதாராமத்தெய்துசனும்தேன்மிகும்வரித்
தாதார்ஓதித்தையலர்நின்றஞ்சலிசெய்தார். (௮)

அஞ்சலிசெய்தவருக்கருள்செய்தங்கனைவோரும்
பஞ்சியல்மெல்லடிஇருவீர்என்பகர்கின்றீர்
எஞ்சல்இல்வேதபுராணவழக்கென்இவண்என்ன
கொஞ்சுகிளிப்போல்இன்சொல்உரைப்பார்கொடிஅன்னார் (௯)

எல்லைஇல்ஞானச்செல்வம்உளீர்யாம்இருவோம்எம்
புல்லறிவால்அச்சங்கரர்மாலைப்புகழ்கின்றேம்
வல்லிகொள்சோலைக்கண்சிறுபோதுவசித்துப்பின்
நல்லதுதீதென்றும்மயில்மகிழ்ந்துநடப்பீர்ஆல் (௰)

என்றுபணிந்தனவில்தவ்வேதியர்எல்லோரும்
மின்திகழ்பூண்முலையார்நினைவுக்குவியப்பெய்தா
நன்றிரும்என்றவரோடும்இருந்தனர்நல்வாசம்
குன்றுதல்இன்றிவிளங்கியவேதக்குளிர்காவில் (௧௧)

௯-வது. அந்தணர்சந்நிதிப்படலம்முற்றும்.

ஆக திருவிருத்தம். [உ௱உ].

பாயிரகாண்டம்-க௫-படலம்-௯௫. கூடியதிருவிருத்தம்-உ௱உ.

அரிதாசர்திருவடிகளேசரணம்.

## அரிதாசர் திருவடிகளேசரணம்

# உ-வது. பூர்வகாண்டம்,

## முதலாவது-உலகவழக்கப்படலம்

### முதலாவது. அறுபத்துமூவர்பரிச்சேதம்.

ஆரநகையாகமமாமடந்தையப்போ
தாரணவல்லியைநோக்கியணங்கேயெங்கள்
ஏர்மருவுசிவசமயமகிமைநூலால்
எடுத்திசைவித்திடவேண்டியிருக்குமோயிப்
பாரறியகலியுகதிட்டாந்தமாகப்
பரமனடிபோற்றியறுபத்துமூவர்
சீரியவாகியபதங்கள்பெற்றவாறும்
தெய்விகமும்போதாவோதெளிவார்க்கென்றாள், (க)

அவ்வுரையாரணவல்லியமையக்கேளா
ஆகமவல்லியைநோக்கியாலகால
மைவளர்கண்டத்தானுக்கிவைபோல்கொண்டோர்
மகிமைவிரித்துரைக்கின்றாய்வழிப்பட்டோர்க்கு
எவ்வகையில்தேவர்களும்பதமும்பேறும்
ஈவதற்குச்சத்தியில்லாதிருக்கின்றாரோ
தெய்விகமும்அவரவர்தம்சமயத்தோறும்
திட்டாந்தமாயுலகிற்சிறவாதுண்டோ (உ)

இங்கிவைகள்நிற்கவரிசமயத்தாழ்வார்
ஈரைவருடனெழுநூற்றெழுபதின்மர்
பொங்கியசீர்த்தத்துவவாதியர்களெல்லாம்
பூதலத்தில்முத்தியினைப்பொருந்தப்பெற்றார்
மங்கைநல்லாய்சங்கரனேமுதலாந்தேவர்
மகிழ்ந்துதவும்பதங்களுக்கும்மணிகூராழி
அங்கைநெடுமாலுதவும்பதந்தனக்கும்
ஆயுங்கால்அந்தராந்தரமுமுண்டே, (ஙு)

மேலவைசொல்வேனிங்கேசொலில்பரப்பாம்
வெங்காளவிடமுண்டான்வெண்ணெயுண்டான்
சீலமிகுமகிமைதனையுணர்க்கும்நாமம்
திகழ்வேதநூலொடுசாத்திரங்களென்னும்

பாலிருக்கநீரருந்தும்படியேபோலப்
    பார்வழக்கைப்பாராட்டிப்பகர்வதனால்
ஏதுமுணருடையார்கண்மனத்துக்கெல்லாம்
    இசைத்திடுமாறன்னவிரித்திவணிதுசொன்னாள்; (௩)

உ-வது-சிற்பசாத்திரப்பரிச்சேதம்.

ஆயிழையாகமவல்லியதற்கென்று
    ஆரணவல்லியைநோக்கியங்கைதன்னில்
மேயபொருள்காண்பதற்கேன்மிகுகண்ணாடி
    விடையவமேறுபுள்ளவனேவிளங்குமூரூர்
கோயில்தொறும்பிரமத்தானத்துவாழ்வார்
    குளிர்சடையோன்கோயில்குடதிசையிலுங்கல்
மாயவனேபரிவாரதெய்வமானான்
    மற்றிதனால்தெரியாதோமகிமையென்றாள். (௧)

அன்னதுகேட்டாகமமெல்லியலுக்கத்த
    ஆரணமெல்லியலுரைப்பாளானால்நீஅத்
தொன்னெறியாம்வித்தாரச்சிற்பநூலின்
    துணிபொருளோர்த்திலைபோலுந்துலங்கும் அந்நூல்
மின்னியவிச்சுவதருமம்விச்சுவேசம்
    விச்சுவசாரம்விருத்தம்பிருதாவட்டம்
மன்னுநளமயமனுமான்வித்துப்பானு
    மானசற்பாரியஞ்சிருட்டமானசாரம் (௨)

வத்துவித்தியாபதிபாராசரீயம்
    மாரீடகஞ்சயித்தக்கம்வாத்துப்போதம்
வித்தாரமயிந்திரமால்வச்சிரஞ்சௌமம்
    விச்சுவகாசிபமகதந்திரம்விசாலம்
சித்திரங்காபிலங்காலயூபம்பாரித்
    நிகழ்தர்மசங்கிதைசாத்திகஞ்சீராக
வைத்துளவிச்சுவபோதமாதிசாரம்
    மதிப்பானவெகுச்சுருதமானபோதம் (௩)

இத்தகையவாகியசிற்பங்கள்முப்பத்
    திரண்டுளவன்னவைநியமித்தியாதோருக்கு
மத்திமமாம்பிரமதானத்துச்செங்கண்
    மாயவனேப்பதிட்டித்துமற்றுளோரை

ஏழுமவர்சயனத்தானங்களான
இருநாலுமூர்த்திக்குமியல்பால்மிக்க
சிலயிருமவுத்துவங்கள்தனக்குமந்தத்
திசைமுகத்தான்பிரதிட்டைசெய்யுமாதோ (௮)

ஈறுபிரமத்தானத்தியற்கையின்னே
எழிற்பரிவாரத்தியற்கையினிக்கேளுங்கள்
மாதுறைபாகஞ்சிற்பவாக்கினுல்தாம்
மால்கோயில்மருவுபரிவாரமென்றும்
காதலுறுமித்திரனும்நாமுஞ்சேயும்
கணபதியும்துவாரங்கள்காப்போமென்றும்
ஓதியதுபோல்சிவனாலயத்திலேதாம்
உயர்திசைத்தேவதையெனமாலுரைத்தனன்டோ, (௯)

அன்னதலாற்பிராமியத்திலிரண்டுமூன்றும்
ஆகியவத்தியாயத்தானத்திரேநு
மன்னியதாரகமானதிருமாலுக்கு
மதிவளருஞ்சடையானைமலருளானைக்
கின்னரைக்கிம்புருடர்தம்மைமற்றைக்
கெருடரைக்கந்தற்பரைக்கோரையினைப்
பன்னகரைத்தும்புருநாரதரையெல்லாம்
பரிவாரகணமாகப்பகருமன்றே, (௰)

சக்கரக்கைநெடுமாலையல்லாத்தேவர்
சகலரும்தம்மாலயங்கள்தன்னிலன்றி
மிக்கபெருஞ்செல்வம்விளைவிக்கமாட்டார்
வேதாந்தப்பொருளானவிண்டுமூர்த்தி
எக்கடவுளாலயத்துமிருக்குமேனும்
இனியபெருஞ் செல்வம்விளைவித்திடு மென்றோதும்
தக்கபராசரசிற்பமதனுல்பின்னே
தாரணியிலார்செல்வந்தனைவேண்டாதார் (௰௧)

பாவையொருபாகத்தானுடனேலிங்கோத்
பவமூர்த்திசெயவீரபத்திரதேவன்
மேவியதக்கணாமூர்த்தியென்னுமிந்த
மேன்மையுடைவிக்கிரகவிதத்தையெல்லாம்
காவிவிழியாகமமாமடந்தைநல்லாய்
கண்ணனுக்குப்பரிவாரகணமென்றோதும்

தாவுபாசரசமயச்சிற்பமத்தை
சாத்திரமன்றென்றினிநாம்தள்ளலாமோ (௰௨)

ஆரணவாகியமானசயினன்புத்தன்
ஆலயத்துக்கிலக்கணமூட்மலர்தலால்சங்
கிரணநூலேசிற்பமானபோதும்
கேசவனேமேன்மையளித்தாநிற்கும்
தாரணியிற்மற்றுமூளவிசேடநூல்கள்
சங்கபூரிகதைவடிவாள்சார்ங்கமேந்தும்
நாரணனூர்கோயிலுக்குப்பரிவாரங்கள்
நாலுவிதந்தானுரைநிதுமன்றோ (௩௨)

தன்னையரனைப்பிரமன்தனைமற்றோரைச்
சாத்துவிதராசததாமதச்சங்கிரணர்
என்னவகுத்தவதாரத்தெய்வம்பத்தும்
இதிற்சொத்தபரிவாரமென்கையாலே
அன்னவரையாலயங்களெங்குஞ்சூழ
அருச்சிப்பார்அரன்பிரமனதியாகப்
பன்னியமத்திமமதமமாம்பரிவாரத்தைப்
பலஇடத்துமேவிரும்பிப்பதிட்டைசெய்யார். (௰௪)

வைப்புளசாத்திகத்தெய்வம்தன்னைபுத்தா
மதருணராசதகுணமாம்தெய்வமாகச்
செப்பிடினும்பெருப்பேறுபெற்றோமென்று
சிவசமயத்தோர்மாலைத்திருமேனிக்கொண்
டிப்புவியிற்பதிட்டிப்பாரெம்மன்றோரும்
இதிற்பழுதேதுக்கெனவோரிடங்கள்தம்மில்
அப்பெரியமகிமையுளசிற்பநூலே
அம்புவியிற்பிரமாணமாக்கவேண்டி (௰௫)

பணியணியுஞ்சங்கரனைத்திருமால்கோயிற்
பரிவாரதேவதையாப்பதிட்டித்தற்கு
மணிநகையாட்கிட்டாந்தம்வேண்டிநம்பி
மருவுதிருக்குறுங்குடியாமகத்தானத்தும்
இனிநெற்வேய்ப்பிகள்தோட்பங்கயத்துச்
செல்விசிந்தைபிரியாதவொருதேவன்வாழும்
அணிதிகழ்வெள்ளறைதனிலுமாதியான
அரிவாசபுரத்திலும்பார்த்தறியலாமே. (௰௬)

பரவிநின்றவனையும்பார்வையாலுபசரித்
தருளிவானவர்களோடையவென்பால்வரும்
கருமமேதிவர்மனக்கவலையேதெனவினு
வரனுடன்மறைகடோர்ந்தணன்பகருவான் (௰)

காலனைச்சாடினுய்காளகூடத்தையன்
றேலவுண்டிமையவர்க்கிடர்கெடுத்துதவினுய்
கோலமாமேருவிற்கோலினுயுலகெலாம்
சாலநின்வெருளியாற்சங்கரித்திடுவலாய் (௰௧)

நின்னருட்பெருமையானீடுசீருலகினுக்
கின்னல்வந்தணவதேயில்லையென்றாலுமென்
மன்னுசேர்புகழினுய்வந்தகாரணமுநான்
இன்னதென்றுரைசெய்வேனிதுமனங்கோடியால்.()

தேமருமலரினுள்சேர்புயத்தெம்பிரான்
நாமெலாமுய்யவேநாரசிங்கத்திருப்
பூமிமேலெய்தியெப்புவனமுங்குலையுமவ்
வேமமேனியனைமெய்யிருபிளப்பாக்கினுன் (௰௩)

அன்னவன்சேனையாமவுணர்பல்கோடியேர்
துன்னுவெஞ்செருவிடைத்துகள்படுத்தருளினுன்
பின்னையும்பின்னையும்பெருகுகோபானலம்
முன்னையின்பொழுதினுமும்மடங்காயதால் (௰௪)

வடவையைத்தின்றிடும்வலகுலக்கிரிகளைப்
பொடிபடப்பிசையுமம்புதிகளைப்பருகும்வான்
வெடிபடக்குரல்விடும்விழிநெருப்பெரியுமக்
கடையுகத்திடியெனக்கடியபற்கதுவுமால் (௰௫)

ஆசருங்கோலநீடகிலசங்காரமேல்
நீசெயுஞ்செயல்களந்நியமமும்பழுதறப்
பூசல்செய்கின்றவப்புருடகண்டீரவத்
தேசுறுஞ்சினமொழித்தெம்மையாளென்றலும்(௰௬)

வல்லிபுல்லத்தகும்வாமதேவன்சொல்வான்
எல்லையில்லாவரத்திரணியாசுரனையும்
கொல்லவல்லபமுறுங்கொடியகோளரியைநாம்
வெல்லவல்லோமெனுமேன்மைதானெளியதோ (௰௭

நீதரும்புதல்வனுனின்னையுந்தந்தமு
தாதையங்கவனவன்றனதுபோரணையே
நீதிகூருலகெலாநிகழுகின்றதுநிலைத்
தாதலாலவனமக்கரியனன்றல்லவே (௰௮)

என்றபின்றிருவுளத்தெண்ணமொன்றெண்ணிய
மன்றலஞ்சடையினுன்வயினன்வாளரவினைத் [ம்
தின்றிடுமியானையைச்சிங்கம்வெல்லுந்திறல்
குன்றியேமெலிவுறுங்கூகையிற்காகமே (௰௯)

தகரினுன்மற்றடந்தகருமதத்தன்மையை
நிகரவெஞ்சரபமாய்நின்றவொன்றுக்குநீர்
பகருமச்சிங்கமும்பாருமென்றிரசதச்
சிகரம்வாழ்சங்கரன்செய்தனன்சரபமே (௨௰)



ரு-வது சரபசங்காரப்பரிச்சேதம்

இனையவெஞ்சரபமேல்யாமெலாநண்ணியே
புனைகுவம்புகழெனப்புவனமேழுடையவன்
கனகுலக்கிரிகளைக்கால்களாய்வைத்துநீ
டினனுடன்றிங்கள்பொங்கிருகணுகச்செய்தே (௧)

வாயுவன்சிறைகளாய்மலரவன்முதுகினில்
தோயவெங்கொலைமுகத்துண்டமேதானுமாய்
ஏயதோரளவிலேயிலகுபொற்கிரியெனப்
போயதச்சுடுசினப்பொருதிறற்சரபமே (௨)

சரபமேகுஞ்சிறைச்சண்டவெங்காலினல்
வரைகளுங்கடல்களுமண்ணும்விண்ணுஞ்சுழன்
றொருபெருங்கோடமாயுலகெலாநிலைகுலைந்
தரவுடன்றிசையிலெட்டானைகம்பிக்கவே (௩)

நின்றுவேகித்திடுநிமிர்சினச்சிங்கமும்
சென்றுகூடியதிறற்சிவமயச்சரபமும் [தொத்
குன்றமுங் குன்றமுங்கொடியபோர்பொருவ
தொறின்மேலொன்றுசென்றுங்கரித்துற்றவே ()

அண்டகோளங்கிழிந்தாரவாரப்படச்
சண்டவேகப்பெருஞ்சரபமுஞ்சிங்கமும்
மண்டுபோர்புரிதலால்வானநாடர்க்கெலாம்
பண்டுபோலன்றியுப்பயமிரட்டித்ததே (௫)

அச்செருத்தொடர்விடத்தழல்விழிச்சரபமங்
கெய்ச்சிரைத்திடவெடுத்தெற்றியெற்றிப்பெரு
வச்சிரத்துகிர்களான்மருவவங்கந்தொறும்
பச்சிரத்தம்படப்பரிபவம்பண்ணியே (சு)

ஈண்டுமாளரிவெகுண்டிரணியன்றனதுடல்
கீண்டவாகீண்டுமெய்க்கிளர்கையாயிரமுறப்
பூண்டுசிற்றிப்பெரும்பொன்வரைப்புறனுறத்
தூண்டினனென்புடன்றேனும்வேறுகவே (எ)

கரமுறிந்தேகுதிண்காண்முறிந்தெரிமுகச்
சிரமுரிந்திருவகைச்சிறைகளின்றிறமுறிந்
தாரமுறிந்துடன்முறிந்துக்கதாலண்டமுப்
புரமுறிந்தெரிபுகப்பொருதவன்சரபமே (அ)

அன்னகாலையில்விரைந்தவணருமுனிவரும்
கின்னராதியர்களுங்கெருடகந்தர்ப்பரும்[பமே
பொன்னின்மால்வரையிடைப் போய்விழுஞ்சர
சின்னபின்னப்படுஞ்செய்கைகண்டஞ்சினர்.(கூ

அஞ்சிநின்றவர்களிவ்வரியினலின்னமும்
எஞ்சில்சிருலகினுக்கிவையதேதோவெனத்
தஞ்சமாமலர்மடந்தையையிரந்திடவுமவ்
வஞ்சிநேரிடையினுள்வந்துமுன்னெய்தினுள் ()

ஆயகாலத்திலாளரிமகிழ்ந்தாடகன்
சேயையுஞ்சிரமுறத்திருமுடிச்சூடிவித்
தேயகோபந்தவிர்ந்திமையவர்க்கபயமும்
நேயமோடுதவியந்நிலைமறைந்தேகினன் (௰க)

இத்திறத்தால்விரித்தியானிசைத்தனவெலாம்
மைத்தடங்கண்ணிருய்வாமனீயத்துமா
தித்தியந்தன்னிலுந்தெளிவுறச்செப்பிடும்
பத்தியாலின்னமும்பகர்புராணங்கள்கேள் (௰உ)

ஒத்தகாருடமிரண்டென்னுநூறுயசீர்
அத்தியாயத்திலேயவையுமாக்கினீயமும்
சுத்தமாநாற்பதிற்சொல்லுநீணரசிங்
கத்துடன்பற்பபாகவதமும்பகருமே (௰௩)

௬-வது இரணியசமூகசங்காரப்பரிச்சேதம்.

பரிபுரஞ்செறிபதப்பங்கயத்தாகமத்
தெரிவையேமானிடச்சிங்கவிக்கிரகநீ
டிருநிலத்திறிலாதுறைவதற்கின்னமோர்
உரியவுத்தரமுனக்கோதுவன்கேட்டியால். (௧)

மருவுமாளிதனுண்மாண்டவாடகனுடற்
குருதியாலுதிரூந்குவலயநனைவுறு
உரகலோகத்திலுற்றுகுதுளிக்கணமெலாம்
திரமதாமிரணியத்திரள்களாயெழுதலும். (௨)

விண்ணுளோரஞ்சிமேல்விளைவதேதோவென
எண்ணிவைகுந்தநாடெய்தினாரங்குவாழ்
திண்ணிதாமானிடச்சிங்கவிக்கிரகர்தாள்
நண்ணினாருற்றகாரணமெலாநவிலலும். (௩)

செஞ்சொல்வானோனாயச்சிங்கவிக்கிரகனார் [ல்
அஞ்சலென்றருளிவெவ்வழல்விழிக்கருடன்மே
மிஞ்சுவெண்மேகமேருவில்வரும்பரிசுபோல்
தஞ்மாமுரகர்பாதாளநாடெய்தியே (௪)

அத்தலந்தன்னில்வாழவுணர்தங்களையுமூத்
தத்தினிற்படவதைத்தத்தைநீடுபிரமாண்
டத்தினும்பகருமிவ்வளவையேயன்றியே
வித்தகத்தெரிவையேவேறுமொன்றினிதுகேள்(

௭-வது தெளிசிங்கர்வயிரவற்கருள்செய்தபரிச்சே

இத்தராவலயமேலெய்துமெவ்வுயிரையும் [தம்
சத்திசாலங்கண்முன்சங்கரித்திடுதலும்
பைத்தலைப்பல்பணிப்பயிரவன்வெருவியே [ன்
அத்தனாஞ்சிவனொடவ்வடைவெலாமுரைசெய்தா

பன்னுசங்கரனுமப்பயிரவற்குரை செய்வான்
அன்னசத்திகளெலாமரிமயைத்தவர்களே
உன்னுமவ்வரியுநீடுரகலோகத்திலே
மன்னுகின்றனனவன்வயினினீமருவியே (௨)

இனையதன்மையையிசைத்திடுதியாலெனவவன்
புனிதமாமுரகர்வாழ்புவனமூடேய்தியே
சினமிகுமானிடச்சிங்கவிக்கிரகனைத் [ன்
தனியிருந்தொருமையாற்றகுதியானஞ்செய்தா

மானிடச்சிங்கமவ்வயினின்வந்தருளலும்
தூநிறப்பயிரவன்றொழுதுநின்றன்பினுல்
தானவப்பகைஞனேசத்திசாலங்களால்
மானிலத்துயிரொலாமங்குமின்றென்னவே. (௪)

தங்குமாளரியுமச்சகலசத்திகளையும்
அங்குவம்மெனவழைத்தவர்களுக் கிரமெலாம்
பொங்குசீர்வயிரவப்புனிதனுக்கருளினன்
துங்கவச்சுனகமாதுரகனுந்துதிசெய்தே. (௫)

நின்றவாளரியினுனீடுபேரொளியினூ
டொன்றினனையகண்டும்பருமுனிவரும்
மன்றலந்துளவினன்மதுமலர்க்கழல்பணிந்
தின்றுநீபுதுமைஈதிசையெமக்கென்னவே. (௬)

அன்னவாளரியுநீடகிலகாரணனுமியான்
முன்னுசத்துவரசத்தமமெனுமுக்குணம்
தன்னைநான்மன்னியேசகலலோகத்தையும்
பன்னுகாவற்படைப்பழிப்பினைப்பண்ணுவேன்

மற்றெனைத்தவிரவோர்வத்துவந்தரமிலைப்
பற்றெனும்பாசசம்பந்தமற்றூர்க்குமேல்
முற்றுபாசனையலான்முத்தியின்மார்க்கமும்
நற்றவேறிலையெனுநம்புமாறுரைசெய்தான். (௮)

எண்ணுமிப்பொருளெலா மிலகுகூருமமெனு
நண்ணுபேர்பெறுபுராணத்திலீரெட்டதாம்
திண்ணமாமத்தியாயத்தினிற்றெளியவே
வண்ணவாராழிசூழ்வையகத்தோதுமே. (௯)



அ-வது திரிபுரசங்காரப்பரிச்சேதம்.

வேறு.

என்றாரணவல்லியிதித்தனையும்
குன்றாமல்வியப்பொடுகூறுதலும்
நன்றாகுகவென்றுநகைத்தனளாய்
ஒன்றாகமவல்லியுரைத்திடுவாள். (௧)

சார்ங்கச்சிலைமாதவனப்படியே
பாங்குற்றபராபரனேயெனிலத்
தீங்குற்றசிவன்றனையோர்விடையாய்த்
தாங்கப்பணிமேவுதலத்தெனலும் (௨)

இவ்வாறுபகர்ந்திடுமிந்துநுதல்
சைவாகமவல்லிதனக்கெதுரோ
அவ்வாரணவல்லியருத்தியினல்
மெய்வாய்மைவிரித்துவிளம்பிடுவாள். (ரு)

பூதாதிபன்முப்புரிதீயிடுநாள்
மாதாரணிமாமறைமாவிரதம்
பாதாளமுறைப்படியச்சுரராங்
காதாரமிலாதபடக்குரலாய். (சு)

வானிற்குலையும்பொழுதின்வளமால்
மேனிப்பிரிவாகிவிளங்கியிடும்
ஞானக்கபிலப்பெலநன்முனிவன்
தானுற்றவனேர்தறுகண்விடையாய். (எ)

சோரும்புவியைச்சுளியாதுசுமந்
தேராற்றயல்லையிழைத்தலனேல்
போரும்பொருதப்புரவைரியெனும்
பேரும்பெறுமோபிறைசேர்சடையான். (அ)

என்றுவிதுரைத்திடமற்றவளும்
சொன்னேர்புவிமீதுசுமப்பதுவோ
அன்னீர்பரனுக்கடையாளமதாம்
என்னேயிதுநன்றிதுநன்றெனவும். (௯)

இலையானமருங்கிணையின்னல்செயும்
முலையாரணவல்லிமொழிந்திடுவாள்
சிலையார்புருவத்திருவேயவனே
பலவாறுலகின்பதியாகையினல். (௧௰)

ஆமைப்பெயராயரவாயிலதும்
தாமப்புயமீதுதரித்திடுமிப்
பூமிக்குளலாதுபுறத்துளனே
ஏமக்கிரிவில்லையெடுத்தபிரான். (௧௧)

தானேயுலகிற்றனிநாயகனே
ஆனால்விடைவுற்றவாபரணன்
மேனாளின்மறித்துவிழும்புவியைப்
பானேர்மொழியாய்பரியாதிடுமோ. (௧௨)

(௰)

என்னப்பகர்கின்றவளோடிவளொன்
றுன்னிப்பதினுலகுக்கொருவன்
சென்னிப்பிறைச்சேர்சிவனன்றெனின்மால்
வன்னச்சரமாய்வருமோவெனவே. (௰௧)



கூ-வது. திரிபுரதகன முயற்சிப்பரிச்சேதம்.

வாளொன்றுகண்ணாரணவல்லியுமுத்
தூளஞ்செறிமேனியர்துட்டபுரம்
மூன்றுந்தழலிட்டமுயற்சியை நீ
மேமென்றவளோடுகிளத்திடுவாள். (௧)

வாரத்தான்மிகமிஞ்சியவஞ்சகர்முப்
பரத்தாலிடையூறுபுகுந்திடவச்
சிரத்தான்முதலாகியதேவர்திகம்
பரத்தானுவைவர்துபணிந்தனரால். (௨)

பணிந்தார்மனதிற்படர்துன்பமெலாம்
தணிந்தேநெடிதன்பதனழக்கவரா
அணிந்தாரவர்தங்களையஞ்சலெனாத்
துணிந்தோர்பெருவேள்விதொடங்குதலும். (௩)

உமைத்தேவியிடத்தவனெண்சடையைச்
சமித்தாகவரிந்துதழற்கிடையிட்
டமைத்தானுயர்வேள்வியதிர்ந்திடுதற்
றமித்தானவமந்திரிசுக்கிரனே. (௪)

திட்டிச்சனல்சேர்சிவனப்பொழுதில்
திட்டைப்பெருவேள்வியினின்றுமெழும்
துட்டப்புயகங்கடுவன்றிறசக்
கட்டிக்கறையேறியகண்டனுமாய். (௫)

வம்மின்சுரரோமருவாரைவெலற்
கும்மொய்ம்பினிலேயொருபாதியுமப்
பம்மின்பசுவின்பதியாம்வரமும்
தம்மென்றுபிரார்த்தனைசெய்திடலும். (௬)

வரம்வானவர்நல்கினர்வன்பகைமேல்
விரவாயெனவிண்ணவரோயெனிலும்
டெரியாவொருசாரதியைப்பெறின்முப்
புரநூறுவனப்பொழுதேயெனலும். (௭)

திடம்பற்றியொழிந்திடுதேவர்களால்
உடன்பட்டொளிரொண்மலர்மேலுறைவான்
விடம்பற்றியகந்தரன்மேவியதோர்
தடம்பொற்புளமேதர்தனையுந்தினனால். (௯)

தளத்தாமரையான்றடந்தேர்விடமைக்
களத்தானெடிதாகியகாலமெலாம்
விளைத்தான்மிகுபோர்விளைத்தாலுமெலிந்
திளைத்தாரிலையேயெயில்வாழ்பவரோ. (௧௦)

அவ்வேலையினெஞ்சழிவுற்றநெடும்
செவ்வார்சடிலச்சிவனின்றமைகண்
டெவ்வானவருந்தொழவேமதிறப்
பைவாளரவிற்றுயிலும்பரமன். (௧௧)

ஒப்பற்றபவுத்தவுருக்கொடுபோய்
முப்பொற்புரர்தம்மொடுமோகனமே
செப்பித்தவமேன்மைசிதைத்துமனம்
மைப்பற்றுதல்செய்துமயக்கியபின். (௧௨)

குன்றாதநிறக்குணமற்பசுவாய்
நின்றானதுகண்டுநெடும்புவியில்
துன்றாதரவோடுதொடர்ந்துசெலும்
கன்றாயினனக்கமலத்தவனே. (௧௩)

ஆவுஞ்சிறுகன்றுமடைந்தடையார்
மேவும்புரிபுக்கபின்வெவ்வினையோர்
சீவன்சமமாகியதெள்ளமுதின்
கூவந்தனைநண்ணியகொள்கையினால். (௧௪)

அச்சேடமதாமமுதத்தையெலாம்
நிச்சேடமதாகநினைந்துநுகர்ந்
துச்சாகமதாகியவொண்பசுவும்
பொய்ச்சார்வுளகன்றொடுபோகியதால். (௧௫)

அதுபோதிலனைத்தறிவுள்ளசிவன்
சதுராலிடுஞ்சாமந்திரமுண்
விதியாருபதேசவிதிப்படியே
மதியான்மகிழ்வுற்றுவளைந்தனனால். (௧௬)

அரிபஞ்சரமிட்டரிசத்திகொடே
கிரியென்றுளசொற்கிரர்வில்லுமெடுத்
தெரியுங்கணைதொட்டிகலானவர்முப்
புரிவென்றனனீள்புகழ்சூடியநாள். (௰சு)

―――✻―――

௰-வது. விஷ்ணு சிவன்முன்னிலையில் திரிபுரத்தையெரித்தப்பரிச்சேதம்.

சரமாய்மிகுபஞ்சரமாயுலகின்
பரமாமெருதம்பசுவென்பதுமாய்
உரமாயரனுக்குயிராயழிமுப்
புரமாகியநூல்புகழ்புத்தனுமாய். (க)

நின்றென்றுமாலெனுநிச்சயநூல்
ஒன்றல்லவேயுரைசெய்வதுநான்
மின்றென்னவேமிளிர்பூணணிபொற்
குன்றுமுலையாய்குறிகொள்ளுதியால். (உ)

சோதிப்புகழ்சேர்சுரர்பாலவர்தம்
பாதிப்பெலமும்பசுவின்பதியாய்
ஓதிப்புவிமேலுயரும்வரமும்
தீதற்றிமைச்சிவன்பெற்றமைதான். (௩)

ஈறேதுமிலாவெசுமாமறைநூ
டாறாகியகாண்டமதிற்பொருளாய்
வீறாமிரண்டாம்பருச்சம்மிகவே
தேறாதவருந்தெளியப்பகரும். (௪)

அரிபஞ்சரமென்றகிலம்புகழத்
திருமந்திரமச்சிவனுக்கயனுர்
உருகும்பரிவாலுபதேசமளித்
தருளுங்கதைநாரதியந்தனிலும். (௫)

சீரொன்றியமந்திரசாலமெனும்
பேரொண்ணரிதாம்பிரபஞ்சமெலாம்
சாருஞ்செய்தநூறனிலுந்தெளியப்
பாரிங்கறியும்படியேபகரும். (௬)

உருகிச்சடைகொண்டியரோமமுகம்
புரிவுற்றதுமுப்புரிபுக்கமுதம்
பருகப்பசுவானபழம்பொருளும்
கருதிற்றிகழ்பாகவதத்துளதே. (௭)

வாரித் துயில்வார்மதிமேவுசடர்
தாரற்கொளிரத்தரியாமியுமாய்
மேருச்சிலைகொள்ளமிறக்குமளித்
தாரொன்றுசொலுந்தருவான்மிகமே. (௮)

எருதேறிறைமுன்பெணிலும்பெரியான்
ஒருசாரதிதம்மெனவும்பலாம்
பிரமாவையமர்த்தியபீடுறுசொல்
பரியான்மொழிகின்றதுபாரதமே. (௯)

அரிபுத்தவுருக்கொடகன்புரியார்
விரதத்தையழித்தவியன்கதையைப்
பரவப்புவியிற்பதுமத்துடனே
உரைபெற்றறிவமுசமுரைத்திடுமே. (௰)

௧௰-வது-விருத்திரன்கதையை-திரிபுரதகனத்துக்கு வுதாரணப்பரிச் [சேதம்

(வேறு.)

அன்னநடையார்மாருனையடையார்புரிசெற்றனனால் [கதைகேள்
பொன்னின்சடையான்முன்னிலையாய்ப்பொரவென்னெண்ணியொரு
துன்னுந்திறல்சேர்சிரமூன்றாய்த்துலங்குபுகழ்விச்சுவரூபன்
பின்னருந்தத்தோன்றலவிருத்திரனென்றுளனோர்பரவுணன். (௧)

தந்தைவரத்தாற்றினமோரோர்சரபாதங்கடடித்துயர்ந்து
மூந்துமுலகங்களுமண்டமுகடுமெட்டவளர்தலுமே
சிந்தைதிகைத்துவானவர்கோன்றிருமாறன்னைத்தியானிக்க
வந்துவிழிக்குமுன்னின்றான்மலரின்மடந்தைமணவாளன். (௨)

நின்றநெடுமாலடிபணிந்துநேமிப்புயலேயென்பகையாம்
வென்றிபுனைவேல்விருத்திரனும்வெய்யோனொருவனொன்றுக்
கோன்றிங்கோரோர்சரபாதமுயராநின்றனவன்றன்னை
இன்றுவதைப்பதொழிந்திடிலிவ்வுலகம்போதாதிடமென்றான். (௩)

அன்றான்வளர்ச்சியுலகுக்குடனைத்தாமுயிர்க்குமமரர்க்கும்
இன்றுந்தன்பதறிந்தருளியெழில்சேர்மாலுமிமையோர்க்கு
மன்றுவந்தவிக்கிரமவடிவேலவுணன்வாணனை
உன்றுயின்றண்முடிக்கின்றேனொருமித்ததனுக்குபாயங்கேள். (௪)

இந்திரன்முன்னிலையில் ஸ்ரீஹரிப்பதியானஈஸ்வரன்
விருத்திரனைவென்றகதை.

ஓங்கித்தறித்தால்வாட்மடியுமுயர்வச்சிரத்திலொருகூறும்
பூங்கற்பகத்தார்பொருந்திய்நின்புயபூதரத்திலொருகூறும்
வீங்கற்புதம்மருவைநிகர்க்கும்விருத்திரன்மெய்விழும்பொழுது
தாங்கப்புவியிலொருகூறுமாகநானேதரிக்கின்றேன். (௫)

வெல்வாயவனைவிரைந்தென்றான்வெண்கோட்டயிராபதத்தானும்
நல்வாரிதியிற்றுயின்மேவுநாராயணனைவிடைகொடுபோய்ப்
புல்வாய்கண்டவரிவேங்கைப்புலிபோலிருகலைபொறிசிதற
வல்வாய்வயிரப்படைதன்னால் வதைத்தான்மாண்டான் வல்லவுணன்.

அன்னபடியேபொன்மன்றலளிசேரோதியாரணங்கே
பொன்னின்வரையேசிலையாகப்புரமூன்றெரியப்பொருதாற்கு
மன்னுநெடுமால்வெருவிதமாம்வடிவாய்நின்றங்கருள்செய்தான்
என்னுமுலகிலிவைதமையுத்தரவான்மீகமுரைத்திடுமால். (எ)

௰௨-வது-உருத்திரனானபாத்திரத்தில் பெருமாள்
காளகூடவிஷபாரணப் பரிச்சேதம்.
(வேறு.)

என்னவாரணவிளங்கொடியிவையெலாமிசைப்பப்
புன்னைவார்குழலாகமவல்லியும்புகல்வாள்
அன்னமேயரியத்தனைசத்திமானானால்
மன்னுபாற்கடன்மந்தரத்தாற்கடைந்திடுநாள். (க)

செங்கரங்குலைந்திமையவர்திசைதொறுமோடப்
பொங்கிமேல்வருங்காளகூடத்தினைப்பொருநீர்க்
கங்கைவேணியன்கந்தரத்தடக்கியகாலத்
தெங்கிருந்தனன்றெளியநீயியம்புதியென்றாள். (உ)

மறுவிலாகமவல்லியிவ்வாசகமுரைப்ப
நிறைகொளாரணப்பாவையும்வேலைசூழ்நிலமேல்
இறைவனாலகாலத்தினைநுகர்ந்தமையெல்லாம்
உறுதியாகநீகேளெனவுரைசெயலுற்றாள். (௩)

முத்தைவென்றிடுமுகிணைக்கண்ணன்மாமொழியாய்
இத்தலம்புகழ்ந்திடவிளங்கிருக்குவேதத்தில்
அத்தியாயமெட்டாவதிலடைவுகுன்றாமல்
வைத்தசீரிருபத்தின்மூன்றானவர்க்கத்தில். (௪)

தேங்குசீர்புனையுருத்திரனானபாத்திரத்தால்
ஓங்குநாரணனுகர்ந்தனன்விடத்தையென்றோதும்
ஈங்கிவ்வாறுரைத்திட்டவேதப்பொருட்கிசையப்
பாங்குசேர்புராணங்களும்பகர்ந்திடும்படிகேள். (௫)

பகவத்ஸ்ரூபானுபவத்திலரனுக்குக்கிடைத்த
விஷசமர்ப்பணமென்றறிக.

நத்துவேலைவாய்விடமெழக்கலங்கிவிண்ணவர்கள்
உத்தமாசலமொன்றினில்யோகசிந்தையனாய்

மூத்தியாகையாற்றவஞ்செயுமுக்கண்வானவனைப்
பத்தியாலடிபணிந்தனர்தங்குறைபகர்வார். (சு)

தேவர்தோத்திரஞ்செய்யலுஞ்சிகரமாலிமயப்
பாவைவான்முகப்பங்கயந்தனையரன்பார்த்துக்
காவியங்கணாய்கலங்கியவிவர்க்குபகாரம்
மேவுமன்பினால்யாமினிச்செய்தலேவேண்டும். (எ)

உலகின்மேலுபகாரங்களொருவருக்கொருவர்
இலகுமன்பினாற்செய்வனசெய்வனவெல்லாம்
சொலினவர்க்கவர்க்கேயலவொன்றுபல்லுயிர்க்கும்
அலகிலந்தரியாமியாமானுகந்தருளும். (அ)

ஆதலாலறவாழியானுக்குகப்பாகத்
தீதிலாதவித்தேவருக்கின்னலைத்தீர்த்துப்
போதவெம்மையாய்ப்புகைபரந்தங்கியிற்பொங்கும்
ஓதைவேலைநஞ்சுண்பனென்றருகணத்தென்றான், (கூ)

இத்துணேர்நுதல்வல்லியேயிந்தவாறெல்லாம்
உத்துதெண்டிரைமேலைசூழுலகுளோருவப்ப
முந்துபாவதத்தினிலஞ்சுடன்மூன்றும்
கந்தமேமழுதாமத்தியாயத்தினிற்கழறும். (ய)

பட்டவாணுதல்வல்லிகேளின்னமும்பயிலும்
திட்டிமூன்றினுஞ்கருடவாகனத்தியானத்தால்
வட்டவாரிதிநஞ்சையுண்டேனென்றுமகிழ்வால்
கட்டுரைத்தவாறுரைசெயுங்காருடகவசம். (யக)

அன்னமென்னடையாயிழையேயிவையன்றித்
தன்னைநேரிலாநாமமூன்றினையுமுச்சரித்து
நன்னிலம்புகழ்கருடவாகனத்தியானத்தால்
கன்னிமேவியபங்கினன்காளகூடத்தை (யஉ)

பருகினேனெனப்பகர்ந்தனமைபதுமமாபுராணத்
துரைசெயுத்தரகாண்டத்திலோங்கத்தியாயம்
நிரைகொண்முப்பதோடேழதாய்நிகழ்வதுநெடுநீர்த்
தரையின்மாந்தர்களுக்கெலாம்வெளிபெறச்சாற்றும் (யங)

அடருமாமலர்க்குழலினாயாதலினாலே
சுடிதுநெற்றியங்கண்ணினாற்காமனைக்காய்ந்த

இடபவாகனற்கந்தரியாமியாயிருந்து
விடநுகர்ந்தருள்பரம்பரன்விண்டுவேயென்றாள். (௰௬)

௫-வது சர்வசங்காரவத்து நிருணயப்படல முற்றும்.

ஆக படலம் ௨௮-௫-திருவிருத்தம்-௫௱௮.

அரிதாசர்திருவடிகளேசரணம்.

## ௬-வது, வரபாலனப்படலம்.



### ௧-வது, கைலாயயாத்திரைப் பரிச்சேதம்.

(வேறு.)

என்னமறைவல்லியிதுகூறவுயராகமவிளங்கொடிசொல்வாள்
அன்னநடையாயரவணைத்துயிலுமாதிபரனுமிலவன்றான்
மன்னனெனவசுதேவன்மகனானவவதாரமதின்மைந்தனருளென்
றின்னருளரன்றனையிரந்ததரிவமுசமியல்பாய்மொழிபுமே (௧)

என்றனுமிபற்சுருதிவல்லிநகைசெய்தொளிருமிந்துநுதலாய்
மன்றல்புனைசெஞ்சடிலமௌலிமகதேவனைமகற்றருதியென்
றன்றுமலர்மங்கைபதிசென்றதுவுருள்ளததனுக்கயமெனுடம்
பின்றவழ்மணிச்சிகரவெள்ளிமலைநாதனும்வியந்தருளியே. (௨)

பேசுமலராசனனுநானுமுதலும்மிடைபிறந்ததுகொடே
கேசவனெனும்பெயர்கிளைத்தனைசெகத்ததுகிடக்கமறைநூல்
சாசுவதமாகவளர்நீமருவுமிந்தவவதாரமதிலும்
ஓசைபெறுநாரணகுமாரர்களனேகனாயுகந்துதவினாய். (௩)

அப்படியிருக்கவுமகன்றபுவியிற்புதல்வரற்றவர்கள்போல்
இப்பொழுதுநாட்கநடித்தபடி நன்றெனவிசைத்தருளியே
செப்பமிகுகைப்மலர்புழக்கிநிறைதாடமொடுதீபமுமளித்
தொப்பரியமாயனைமகிழ்ந்துபசரித்தகதையோடைநுதலாய். (௪)

அற்பவிடையாகமமடந்தையுவியப்புடனதற்குரைசெய்வாள்
சற்பவனையானுமைபதிக்கநியனும்பரவுசந்தையுமெனில்
சொற்பெறுபக்ந்துளவமாலையணியந்தமதருந்தனன்முன்னாள்
நற்பரசுபாணிவரராமவவதாரமதினாட்டியவே. (௫)

எங்கள்சிவன்மெய்ப்பிரிவதானசமதக்கினியிடத்தவதரித்
துங்கயிலைவெற்பனுகியந்தவரமேனகுருவுமாகநெடுநாள்
இங்கிதமுணர்ந்தனுசரித்துவரிவிற்றொழிலியற்றியிடுமோ
மங்கலம்கும்புவனமீதெனவுமச்சுருதிவல்லிமொழிவாள். (௬)

எய்த்திடாவாசகமிருக்கினுயரட்டகமதேழிலொருநால்
அத்தியாயத்தினுடனின்றிடுசமாமறையிலாரணமதின்
மொய்த்தசீர்முந்தியபரிச்சமதிலெட்டினொடுமூன்றனடவிலே
வைத்தஞானத்தவர்வடித்தநலமேவுமனுவாகமதிலும். (௬)

உத்திகூர்சாமமதினுத்தரவிருக்கினிடைவொன்பதெனநீ
டத்தியாயத்தினுள்விளங்கதருவத்துமிவையன்றிநிலமேல்
வத்துவாகும்பிருகதாரணியம்விஞ்சுகடவல்லிதனினும்
சுத்திகூராழிதனைவேறுமறைசொல்லியதுறைத்துறைதொறும். (௭)

அந்தவறவாழியரவிந்தவிழிமாலெனவனாதியெனவும்
சந்ததமவன்றனதுமுந்துடைமையாயனுசரிக்குமெனவும்
எந்தவுலகத்தினும்வியாபகமதாகியவனைவல்லாழியே
நிந்தைபுனைதுட்டர்களைநீறுசெயுமென்னவுநிகழ்த்திடுமால். (௮)

வைத்தசீர்மாமறையுரைத்தவதனுக்கிசையவுஞ்சிறந்திடவே
பத்திசேர்விண்டுவின்புராணமுதலங்கிசமிருபதிருந்தத்
தத்தியாயத்தினொடுபாகவதநூலிருபதஞ்சினுடனே
சித்திகூரும்பஞ்சதித்துவவிதத்தினதிதேவதையதாய். (௯)

திருந்தியபிராகிருதமன்றியொளிருன்றிமிகுதிவ்வியமுமாய்
வருந்திகரியாதிகளைநீடுலகழிந்திடுமகப்பிரளயம்
பொருந்தியிடுமூழிகளினுங்கிளர்சுருப்பிணிபொங்கியமணஞ்
சருந்துளபமாலையரிதஞ்சமுறவன்பொடுதரிக்குமெனவும். (௰)

அந்தவொளிசேருமணியாழியவனுள்ளிலனைத்துலகமும்
சிந்தியிடுமூழிதொறுமென்னவும்விளங்குமவைகைசெய்திடுமால்
உந்திடபவாகனனுமந்தவறவாழியையுபாசனைசெய்தே
மூந்துதிரிசூலவயில்பெற்றிலங்கினனெனமொழிந்தருளினான். (௰௧)

இன்னபயனைச்சுருதிநாலினுடனெஞ்செனவிசைத்துரைசெயும்
பன்னரியபாரதகதைக்குளியல்கண்ணனுயர்பருவமொழியும்
அன்னநடையாய்பொருளிதாதலினரன்றனதுதேவதையதாம்
பின்னிலகுமாழிதனைமால்பெறவழங்கியதுமெய்ம்மையலவே. (௰௨)

## ௯-வது, மோகனநூலுற்பத்திப் பரிச்சேதம்.

என்றுசுருதிக்கொடியிசைப்பவியலாகமமெனுந்தெரிவையும்
நன்றுணர்செய்தாயிமயநங்கையொருபங்கனிடைநாகவணையான்
வென்றிகொள்சுடர்த்திகிரிபெற்றதிலையாகிலவன்மெய்ம்மைபெறவே
சென்றுமகபூசைதனையேன்மகிதலத்திடைசெயக்கருமமே. (௧)

வேறு.

என்றுகட்டுரைத்தவைகூறவெழிலாரணக்கோதையும்
மன்றுசூழ்த்தொகைமேயிதோர்பொருளாய்வகுத்தோதினாய்
என்றதுணைமேருநிகரற்றிக்காதண்டகுருநாகவன்
தன்றலைதாய்சொன்னமொழிபாலனஞ்செய்தகலைநாளிலே. (௨)

வரமெத்திரத்தெய்வமுனிவோர்கடாம்வைகிவாழ்கின்றவாச்
சிரமந்தொறும்புக்கருச்சித்துமப்போதிதீரத்திலே
உரமுறந்துவருணன்றனைச்சென்றுபாசித்துமொன்றுசெய்தான்
அரமன்னுகண்ணனைப்சொல்லவருப்பரந்தாமமாவார்களோ. (௩)

இதுநிற்கவாராகமென்னும்புராணத்திலெழுபானுடைஞ்
சுதவத்தியாயத்துருத்திரப்பெருங்கதையுள்ளாகவே
மதுவுற்றபொற்கொன்றைமாலைச்சடாதாரமகதேவனிப் [ன்றிகேள்
பொதியத்துமுனியோடுமுன்சொன்னகதையொன்றுபொருள்கொ-

மருவுள்ளகமலாசனன்றனைப்பெற்றுமகிழ்நாளிலே
பெருவெள்ளமேயன்றிவேறொன்றுதானைப்பெறுத்தநாள்
விரிவுள்ளவெள்ளத்தினிற்கண்டுகொண்டேன்வியப்பாகவே
உருவுள்ளநீலத்தடங்கொண்டலொப்பானவொருவத்துவை. (௪)

பேரின்னதிவனுக்கெனுந்தன்மையறிகின்றபேராசையால்
ஆரிங்குநீயென்றுவினவப்பரந்தாமமாய்நின்றவன்
சீரொன்றுபுவனங்களீரேழினுக்குஞ்செழுஞ்சோதிநான்
ஓரொன்றுதிருநாமநாராயணன்காணெனக்கென்னவே. (௫)

ஆதிவராகபுராணத்தில் ஆதிநாராயணர் அம்பிகாபதிக்கு
விஸ்வரூபதரிசனம்கொடுத்துதனது ஈஸ்வரத்வமும்சங்காரத்வமும்
வரம்அனுக்கிரகித்தகதை.

அந்நாமதேயத்தைநெடுநாளுகந்தோதியதிவுற்றபின்
நன்னாகசயனப்பரந்தாமனேயிங்குநன்றாகநின் [வம்
பொன்னானதிருமேனிதெரிகின்றதிலையென்றோர்பொருள்சொல்ல
மின்னுமணியாழிமாலீந்தனன்றானவிந்திதன்னனமே. (௭)

மாசற்றஞானத்தடங்கண்களாலந்தமணிவண்ணனார்
தேசுற்றவுருவத்தில்வெகுகோடியண்டங்கழல்கின்றதும்
ஆசற்றமலருந்திதனினான்முகத்தேவனவதாரமும்
ஏசற்றவந்நான்முகத்தேவனிடைநானிருக்கின்றதும். (௮)

போராதரங்கூர்தரக்கண்டுதுதிசெய்தபின்னாகவே
கூராழிநெடுமாயனருள்பொங்கிவரமின்றுகொள்கென்றலும்
சீரானவீசத்துவத்தோடுசர்வஞ்ஞசீலத்துவமும்
ஏராருமூவர்க்குமொருமூர்த்தியாமாறுமீகென்னவே. (௯)

அதனுலியானேமெயனைப்போற்றியாராதனம்பண்ணினேன்
இதுநான்கெடார்மயிருந்தாலபகிபாலவெள்ளமெனிபாம்
மதிவேணியன்றன்னைமற்றோர்களர்ச்சிக்கநிசெய்வரோ
கதிர்சூழ்முலருக்கயர்ந்தேசெய்தேதெஞ்சம்மைக்கண்டல்லவோ. (௪)

உரந்தாவுபுயவீரவிதுவன்றிமெட்டீம்மிக்கவொருதெய்வமும்
வரந்தாவெனக்கென்னவெண்பாலிலாவைபவமுமில்லையால்
பொருந்தாதரத்தாலுனக்கிந்தவுண்மைப்பொருள்கூறினேன்
தெரிந்தேகொள்ளென்றுனிதன்றேவன்மாடைசெய்வண்ணமே.

எனவிச்சொன்மறைவல்லிசொலவாகமப்பாவையின்றேயானைமால்
மன்முற்றவரபாலனப்பூசைசெயவங்குவந்தானெனில்
கணமிக்கபிரமத்தியார்சன்னிதிக்கேகழித்தானெனத்
தனுவொத்தநுதலந்தமன்றவல்லியொருவாசகங்கூறுவாள். (௬)

பிரமத்தியாகின்றபிரசங்கமந்தப்பெருங்கூர்மமாம்
வரமாபுராணத்துமில்லையன்மிகத்தும்மழங்காததாற்
றிரமுற்றவன்மைப்புராணத்தின்மன்னுந்திறஞ்செப்பவந்
துமைமாட்சியாளீயிடத்தச்சொல்சொன்றலதொப்பாருமோ (௭)

அல்லாமலன்றேவகுபாவச்சொல்லன்றென்னிலருமாமறைக்
கெல்லாமவிருத்தந்தருஞ்சூத்தசாத்திரமென்றேறுதிடும்
சொல்லார்விசாலப்புராணப்பொருட்கேற்றுவைக்கில்லையால்
வில்லார்நுதற்கோதையேபுண்டரீகத்தின்னப்பிபாரங்களே. (௮)

உடைமைப்பெற்றார்நீதிவின்மேல்வந்தோர்பணிவந்துவலிசெய்யினும்
கடாரிமிக்கத்தமக்கவைநெறிபால்லைபத்திகடைதொடவல்லதோ
மடலூற்றமலரோர்நியர்யாகமச்சீர்மடந்தாயதற்
கடைவொத்தபிரமாணமுளவோதுகின்றெனதன்போடுகேள். (௯)

### ௫-வது, கண்டாகன்றன் பரிச்சேதம்.

#### வேறு.

வண்டார்செம்பொன்மயப்பெறுகொன்றைத்
தண்டாமப்புனைசங்கரனார்மேல்
உண்டாகும்பரிவாலுயர்ஞானக்
கண்டாகன்றனெனுங்கதிர்வேலான். (௧)

புவியிற்பாசமெனும்பொறிசேரும்
நவையற்றோர்புகழ்நாரணநாமம்
எவிதத்தாலுறுமேயெனவெண்ணிச்
செவியிற்கண்டைதெழிப்பநடட்டான். (௨)

அருந்திவசங்களநேககூடம்பு
வருந்திநிரந்தரமான்மழுவெய்தி
இருந்தகரத்தனிரங்கிடுமாறு
திருந்துதவங்கள்சிறப்பொடுசெய்தான். (௩)

ஒழிவிறவத்தையுகந்துகரத்தோர்
மழுவமரீசன்வரங்கொளெனத்தோள்
எழுவைநிகர்க்குமியக்கர்கள்கோமான்
அழிவறுமுத்தியையருளுதியென்றான், (௪)

முத்தியையருளுதியென்னலுமுன்னோர்
அத்தியுரித்தவனப்பொருளேனின்
புத்தியிலிட்டமெனிற்புகழ்மாலைப்
பத்திசெய்வந்துபலித்திடுமென்றான். (௫)

ஈதுரைசெய்யவியக்கனிதிங்கே
நீதரிலென்னெனநின்றுபிணங்கக்
கோதறுமுத்திகொடுப்பவன்மால்வே
றோதுபதங்களிலுய்த்திடுவோம்நாம். (௬)

என்றலுமாலையிகழ்ந்திதுகாறும்
புன்றொழில்செய்தனமென்றுபுலம்பா
வன்திறலங்கவன்வன்செவியிற்சேர்
மி[illegible]கல்லடையைவீசியெறிந்தே, (௭)

[illegible]ப்பெருமுத்தியளித்தருள்கூரும்
[illegible]ப்புயன்மேனிவலம்புரிமாயன்
[illegible]தன்கணைதிர்ப்படுமென்றே
ஒப்பற[illegible]ளிலுறைந்திடுநாளில். (௮)

அந்தவனந்தனிலங்கொருநாண்மைக்
கந்தரன்வாழ்கயிலைக்குநடப்பான்
வந்துதரித்தனன்மாதுலன்வாணாள்
சிந்தியமால்வசுதேவகுமாரன். (௯)

பேரருளாளன்கண்டாகன்றனுக்குலிங்கபக்திவிட்டபிறகு
அவனதுபிரமஹத்திதீர்த்ததுக்காகஉதகரித்தஇக்கதை.

ஆணிப்பொற்கலையானருளாளன்
மாணுற்றவ்வழிவந்தனனென்னப்
பேணிச்செய்திடருந்தவனொன்றும்
காணிக்கைப்பொருள்கண்டிலனாகி. (௰)

மெய்த்தவர்தம்மொடுவேள்விசெயுஞ்சீர்
உத்தமவேதனொருத்தனையன்றான்
குத்திவதைத்தகொடும்பிணமுன்னே
வைத்திருபாதம்வணங்கினன்மாதோ. (௰௧)

மன்றலர்பாதம்வணங்கிடுவானோ
டின்றிதுசெய்ததெனிப்படியென்றே
வென்றிகொண்மால்சொலமேதகுகண்டா
கன்றன்மகிழ்ந்திதுகட்டுரைசெய்வான். (௰௨)

விதிப்படிநான்முறைவேள்வியநேகம்
மதிப்பொடுசெய்தமகத்தவனாவி
பதைப்பவதைத்ததுமின்றுபழிப்பில்
புதைப்பிணமென்றிருபொன்னடிதாழ, (௰௩)

கண்ணனவன்செயல்கண்டுநகைத்திங்
கெண்ணமுனக்கினியேதெனலோடும்
புண்ணியமிக்கபுராதனனுக்கு
நண்ணருமுத்தியைநல்குதியென்றான். (௰௪)

கண்டைசெவிப்புடைகட்டினனும்
உண்டுமனத்தினுமொண்பெயரின்றும்
தண்டலில்பத்திதழைக்கையினாலே
கொண்டனைமுத்திகொடுத்தனனென்றான். (௰௫)

கா-வது, நிர்ஹேதுகவைபவப்பரிச்சேதம்.

அப்படிமுத்தியளித்தனனென்று
இப்புவனங்களோரேழுளமாயன்
செப்பமகிழ்ந்துசெருக்குமியக்கன்
ஒப்பறுவாசகமொன்றுரைசெய்தான். (௧)

பொன்னார்நேமிபொருந்துகையாய்கேள்
உன்னாலின்னமுமோருபகாரம்
இன்னாளிங்குளதேதெனிலென்றன்
பின்னோனுண்டோர்பெருந்திறல்வீரன். (௨)

அன்னவனுக்குமளித்தருள்வாய்நீ
என்றொடுமுத்தியெனத்தொழுவானின்
பின்னவன்முத்திபெறும்படியென்மேல்
உன்னிகர்பத்தியனோவெனவோத, (௩)

நின்மேலன்புளநீர்மையிலானீ
என்மேலன்புகொடுதியெனப்பின்
உன்மேலன்பினையேவெனவேவாத
என்மேனும்பரிவில்லையென்றான். (௪)

அன்பானமாலுமவன்றனைவீரா
என்பாலன்பிலனென்னருளைச்சேர்
உன்பாலன்பிலனுற்றவனென்னை
நன்பான்முத்திதரும்படியென்றான். (௫)

ஆனவியக்கனுமச்சுதவென்மேல்
தானவமானசதஞ்செயுமேனும்
நானவன்மேன்மிகநண்பினைவைத்தேன்
ஆனமையாலருளத்தருமென்றான், (௬)

ஏரணிமாயனுமெய்ம்மைவிரும்பும்
பேரொழினின்னருள்பெற்றவனன்றோ
ஆரொவனாகிலுமாகுகவின்பம்
கூரியமுத்திகொடுத்தனனென்றான், (௭)

எத்தாவன்பிலனுக்குமிவன்றன்
புத்திரனுக்குநன்முத்தியளித்தே
நீத்தார்நின்மலனெஞ்சில்விளங்கும்
பூத்தாமப்புயபூதரமாலும், (௮)

சொன்றவனின்றுகொணர்ந்தசரீரத்
தொன்றியசீவனுமொண்புவிதின்றும்
சென்றுயர்முத்திசெறிந்திடுமாறே
நன்றியினல்வரநல்கினன்யாதோ. (௯)

ஈதறிவஞ்சமியம்புமனைங்கே
ஆகலின்மாலடியார்சடமக்கும்
பாதகமென்பதுபற்றுதலுண்டோ
ஓதினவாகமமொண்ணுதல்சொல்வாள், (௰)

வன்புகழ்மாலிடைவல்வினைசேரா
தென்பவள்போலரனெஞ்சலில்பத்தர்க்
கன்பொடுமுத்தியளித்திலனென்றாய்
மின்பொலிவாணகைவேதமடந்தாய். (௰௧)

அந்தமிலாதவனைத் துயிருக்கும்
முந்தியகாசியின் முத்தியளிப்பான்
இந்துமுடித்தருளீசனன்றே
பைந்திரைசூழ்தருபாரினிலென்றாள். (௰௨)

௭-வது, சைலயாளிக்குப்பிரமத்திதீர்த்தபரிச்சேதம்.

வேறு.

வாசிபெறுமாகமமடந்தையினுகூறமறைமாதுமொழிவாள்
காசணிதனைத்துமயிலையனையதாகிநிகழ்காசிவளமும்
பேசுமதிசூடிசிவனங்குறையுமாலினருள்பெற்றமையுமப்
பாசுபதமுத்தியருடன்மையுமுரைப்பனதுபண்பினொடுகேள், (௧)

சீதவனமாநதிசெழுஞ்சடிலமேவியதிகம்பரன்முன்னாள்
வேதனொருசென்னியையறுத்தமகபாதகமிகத்தொடர்கையான்
மாதவனதாகியவளம்பெரியகாசியினைவந்தணுகினன்
ஆதவனையஞ்சுமிருள்போலகலநின்றதிபாதகமரோ. (௨)

தொடர்ந்துவருபாதகமகன்றபடிகண்டுமதிசூடிசடையான்
மடந்தைவளர்மார்பனைவணங்கிமதுசூதனநின்மாநகரையான்
அடைந்தளவின்முன்னையதிபாதகமகன்றதவனித்தலமெலாம்
நடந்தகழறேய்வறவளர்ந்திலகினேனெனநவின்றருளவே. (௩)

காசிநகர்மாதவனுநேயமுறவேகரளகந்தரனுடன்
தேசுறுசுவாகதமுரைத்துவெகுமானமவைசெய்தருளிநின்
மாசறுமணிச்சிகரவெள்ளிமலைமேன்மருவிவாழமதியால்
வீசுதிலவார்சடையினாயகநியென்னவிடைகொண்டருளியே (௪)

தாண்டுவிடையேறியுயர்காசிநிலமாகியதலத்தையகலத்
தூண்டியிடவேகமொடுதொல்லைவினையானதுதொடர்ந்துகொளவு
மீண்டடிபணிந்தருளிவெள்ளிமலைநாயகன்விசும்புமுழுதும் [ம்
நீண்டுலகளந்தமுதல்வாவினையகேளெனநிகழ்த்தியிடுவான். (௫)

௮-வது, காசியைகபாலிக்குப்ரசாதித்தபரிச்சேதம்,

முப்புவனமெங்குமுழல்போழ்துமகலாமலெனைமொய்த்துவருமச்
செப்பரியபாதகமுன்னெல்லைபுகவஞ்சியயல்சேமமுறநின்
றப்புறமகன்றளவில்வந்துதொடர்கின்றவதனாலலசினேன்
இப்பெரியகாசிதனில்யானினிதிருக்கவரமீதியெனவே, (௧)

கன்னல்மகிழ்வுற்றிலகுகாசிநகரைப்பெருகுகங்கையெனுமப்
பெண்ணையடர்வித்தசடையற்குதவிநீடுபிரயாகைதனிலே
நண்ணினையெனப்பகருநாரதியமச்சிவனுநாரதனுமுதல்
புல்லியமிருத்துவளர்காசிதனதாயெழில்பொருந்தினனரோ, (௨)

## ௯ வது. ஸ்ரீராமதாரகப்பிரமமந்திர உபதேசப்பரிச்சேதம்.

கன்றுதலெனுங்கடவுள்கங்கையுமையாகுபதிகத்தனுடனே
நன்னலம்புரிகாசியிலிருந்துசகலர்க்கும்வரநல்குவனுங்கேட்
டென்னரியயோகிகருஞானியருமெய்த்தவமிழைத்துவளரும்
புண்ணியருமப்பதியோடாறிடமுறும்படிபுகுந்தனுகினார். (௧)

பூசியிடுபூதியர்புனைந்தசெபமாலையர்பொறுத்தசடையர்
ஆசையறுசிந்தையினரைவகையெழுத்தினையெடுத்துமுரவோர்
தூசிலருமுற்சலையர்நெற்றிதிமிருப்புருவர்சோர்வொழியவே
நாசியுனைவைத்தநயனத்தருயர்முத்திதனைநச்சுதலுமே. (௨)

இத்தகையமாதவமிருந்தவர்கள்காமியமெமக்கரியதாம்
முத்தியெனிலாங்கதனையெப்படிகொடுத்திடினுமுடிக்குவமெனு
அத்திலையபுரித்தருளுமற்புதனனைத்துலகுமாளுடையவன்
புத்திசெயுமவ்வளவில்வந்தனன்வளங்குலவுபுண்டரிகனே (௩)

வந்தமலராசனனையீசன்மகபூசைவழிபட்டருளியென்
புந்தியிலிருந்தகுறைபோயதெனநின்றெதிர்புகழ்ந்திடுதலும்
சிந்தையினினைந்தபொருள்யாவதெனநின்னருள்சிறந்துளவெனக்
கெந்தையர்தானபொருளில்லையெனவோதியிதிசைத்தனனரோ (௪)

செப்பரியமுத்திதருதெய்வமெனவெண்ணையிவர்சிந்தனைசெய்தே
இப்பெரியமாதவமிழைக்குனர்கண்மற்றிவருநின்னருளினால்
ஒப்பரியபேறுபெறநாளுதவவேதினியுபாயமெனவும்
மெய்ப்பயிலிடற்றமலனுக்குயர்கிராணமதிவாசமலரோன், (௫)

உண்மைபெறுதாரகமகப்பிரமமானதிருமந்திரமுகந்
தண்மையுடதேசமுறவோதியிதுகங்கைநதியொண்கரையிலே
திண்மைபெறுகாயம்விடுவார்செவியினியுரைதிருந்தவரும்
நுண்மைபெறுமுத்தியுறுவாரெனமறைந்தனனெழிற்பொழுதிலே (௬)

அவ்வளவுபதேசவரமந்திரமெலாமினிதறிந்தருளியே
மவ்வனுயிரனைத்தினையுமுத்தியுறுவித்தரன்மகிழ்ச்சிபெறுமால்
இன்னசொலகத்தியவிராமவரசங்கிதையியப்புமிதுவும்
பன்னியுரைசெய்யினவக்கண்டவுலகத்தின்மிகுபாடமெனவே (௭)

௯-வது-வரபாலனப்படலமுற்றும்- ஆக திருவிருத்தம்-அ௫,

அரிதாசர் திருவடிகளேசரணம்.

## க-வது-திருநீற்றுப்பஞ்சாட்சரப் பரிச்சேதம்.

### வேறு.

அன்னவாசகங்கேட்டாகமக்கொடியுமறைகுவாளாரணமடந்தாய் ப
ன்னகாபரணனிராமமந்திரத்தாற்பாரின்மேன் முத்தியீகின்றான், எ
ன்னவேயுணர்த்தாயாகமப்படியாலெழிற்சிவதீக்கைபெற்றுயர்மேலோர்
தன்னைநேரில்லாமுத்திசேர்வதற்குச்சந்தயந் தான்சிறிதுளதோ. (க)

தெய்வவெண்ணீற்றின்மகிமையுமறையிற் றெரிந்தபஞ்சாக்கரச்சிற
ப்பும், மெய்வருமுருத்தி ராக்கதாரணமு மிகுசிவபூசையின் விதி
யும், கைவருஞ்சரியைகிரியையோகமுடன்காட்சிசேர்ஞானத்தினியல்
பும், சைவசித்தாந்ததத்துவபேதத்தன்மைதொன்னூன்முறைமாறும்

பரிவுடன்பஞ்சப்பிரமமுன்னுணர்ந்துபரசிவன்றனையருபண்பும்
விரவியதிருமாலியவிசேடணமும்வீரமாயேச்சுரசமய
தருமமாமிலிங்கதாரணத்தியல்புந்தகுசிவபுராணமேன்மையுநீள்
சுருதியின்சமானமானவாகமத்தின்சொலும்பரமார்த்த நிச்சயமும்.

தெரிந்தபோதன்றிச்சிவனருமகிமைதெளியுமோசெவ்வரிபரந்த
கருந்தடங்கண்ணாயெவரொருவர்க்குந்தாங்கண்டதேகாட்சியாயிராதோ
விரிந்தவிப்பொருளைச்சுருக்கியொன்றொன்றாய் வெளிபெறவிளம்
பியுன்மனத்தைப், பொருந்துவிக்கின்றேன்கேட்டியாலென்று புல
ப்படப்புகலுவதானான். (ச)

சிந்துரநுதலாய்தொல்லைநாள்விளங்குந்தெய்வலோகத்திடை நின்று
மிந்தலோகத்தைப்பவித்திரமாக்கவிழிந்தனபசுக்களினினங்கள், அ
ந்தமேன்மையுளபசுக்களுக்கண்பாலருந்துதற்குரியனபசும்புல், தந்
துமுன்வைத்தங்கவைபொசித்ததற்பின்சுகமும்புனலினூற்றணித்து

சத்தியோசாதமந்திரத்தாற்கோமயந்தனைத்தரைவிழாதேற்றுச், சித்
திடாம்வாமதேவமந்திரத்தாற்றிரளைசெய் தகோரமந்திரத்தால், வை
த்துலர்த்தித்தற்புருடமந்திரத்தால்வளர்பெருங்கனலிடை விளைவித்
துத்தலப்புகழீசானமந்திரத்தாலெழில்பெறவிளைந்தபின்னெடுத்து

பன்மலர்சுகந்தப்பற்றுவித்தந்தப்பவித்திரநீற்றினைப்புனலின்
முன்முழுகிப்பின் முழுதுமுத்தூளமுறைமுழுகுதல் விதியென்று
ம் -இன்மலர்ப்புனலின்மூழ்குவதரிதாயிருந்துளவிடத்தினி லெழி
ற்சேர்-நின்மலநீறேயாம்தல்சுத்தநெறிநிலமாந்தருக்கென்றும். (எ)

இங்குநீறுத்தூளஞ்செய்புமிடத்தீசானமந்திரத்தினாற்சிரமும்
பொலியுமானனந்தற்புருடமந்திரத்தும்பொங்ககோரத்தினான்மார்
புலமிகுவாமதேவமந்திரத்தாலுபியுமவ்வயவமுழுதும் [பும்
[illegible]லுஞ்செஞ்சொற்சத்தியோசாதமானமாமந்திரத்தாலும். (அ)

முறைபிறழாமற்றரிப்பதுதானேமுக்கியமாந்தருக்கென்றும்
நிறையுமுத்தூளமியன்றிலதாகினீடிரிபுண்டரந்தனையே
அறிவுடன்றரிப்பசமைந்திடுமென்றுமந்தமுப்புண்டரந்தரிப்ப [ம்
துறுவதற்சனிமத்திமையநாமிகையென்றோதுமங்குலிகளாலென்று

மொழியமத்திரிபுண்டரக்குறிதான்மும்மூர்த்திகண்முழுமைய மென்
றும்-அழகுசேர்திருவெண்ணீற்றினைச்சிரமெயாதியா வடைவுகுன்
றுமல்-வழுவறுபாதம்பெருவிரலீறுவளமைகூராகமத்தடைவே
எழுதடம்மென்னுன்கெண்ணிரண்டிருநாலிரண்டேகமென் றிசை
[த்தும்.(௰)

சிரத்தினிலயனுநெற்றியிற்குகனுந்திசழ்கழுத்தினிற்கணபதியும்
நிறைத்தடந்தோளினீடுகேசவனுநிறைந்திடுமார்பிலீசனும்
சுரித்தவுந்தியிற்பிரசாபதிதானுந்தொடைகளிலச்சுவினிகளும்
உரைத்தபாதத்துரகருமிவர்களுபரதிதேவதையென்றும். (௰௧)

தாழ்விலாவிந்தநீற்றினையணிவார்சகலதீர்த்தம்படிபலனும் [ன்றும்
வேள்வியாயிரஞ்செய்துள்ளபுண்ணியமுமேவுவர் புவியின்மேலெ
சூழ்விசாலச்செஞ்சொல்லினால்விளங்குஞ் சுப்பிரபேதவாகமத்தில்
வாழ்வுகூராறும் படலம்வெண்ணீற்றின் மகிமையைப்பகர்ந்திடலா
[லும்.(௰௨)

...சற்கிசையவதருவசிரத்திலெண்ணுமஞ்சானகாண்டத்தில்
...பாசுபதவிரததீக்கையினைச்சாற்றியதகைமைசேர்தீக்கைக்
...மாநீற்றுத்தூளனவிதியுமதற்குமந்திரங்களுமமைத்துப்
...க்குமந்நீற்றுத்தூளனமுத்தி பொருந்துவித்திடுமெனலாலும்;

...வெண்ணீறொப்பதொருபொருளில்லைத் தெரிந்தபஞ்சாக்கரச்
...ப்பு-கீசருங்குழலாய்சொல்லுவேனதுதான் றூலபஞ்சாக்கர
...மென்றும்-வீரவுருக்குமபஞ்சாக்கரமென்றும்வேதவேதாந்தவேரா
...பிரணவமூறுபஞ்சாக்கரமென்றும்பேதமூவேழதாய்ப்பிறக்கும்

...சாறுமீர்த்திருவெழுத்தைத்துஞ்சிவன்றிரு முகங்களைந் தினிலு
...மாசறத்துதோன்றியாகமத்திம்மெளம்பெறவளர்ந்துவாய்த் துள
...ல்-காசிபன்கௌசிகன்பரத்துவாசன்கௌதமனத்திரியென்போர்
...சமுமந்தம்...மூன்றொடாஞ்சிற்குமடைவிலேயிருடிகளாகும்.(௰௩)

...பெருஞ்சீரனுட்டுப்புத்திருட்டுப்புப்பிருகதிசெகதிமாசெகதிவிரவு
...பஞ்சாக்கரங்களுக்கடைவேமிக்கசந்தங்களின்விகற்பம்- பொரு
...ருங்கறுட்டுப்புச் செவட்பநீள்பச்சை பொன்மைவெண்மைகணிறம்
பொலிவாம்-தரைபுனலங்கிவாயுவாகாயந்தகுதியாம் பூததத்துவங்கள்

சத்தியோசாதன்வாமனகோரன்றனைத்தற்புருடனீசானன்
சித்தியாமதிதெய்வதங்கண்மற்றந்தத் திருவெழுத் தைந்தொடோங்
காரம்-வைத்துவேதியர்க்குச்செவிட்டதுவிதிதமற்றுள பேர்க்குமங்
கையர்க்கும்-சுத்தமாம்பஞ்சாக்கரத்தையேசெவிக்கத்தொல்லையாக
மம்விதித்துளதால். (௰௭)

இன்னவஞ்செழுத்தின்மந்திரசெபத்தாலிகபரசித்தியாமென்று
சொன்னதுமாறாகியபடலத்திற்குப்பிரபேதாகமத்துளதால் [த்
அன்னதற்கெல்லாம்புவனதிட்டாந்தமாகவஞ்செழுத்தையுச்சரித்து
தன்னிகரில்லாச்சிவபதமடைந்தோர் தங்களுக்கெண்ணிலக்குளரோ.

## உ-வது-உருத்திராக்கப்பரிச்சேதம்.

அன்னவாகமத்திலறைந்தவப்படலத்தஞ்சுகச்செஞ்சொலாரணங்கே
தன்னைமேதரில்லாவுருத்திராக்கத்தின்றகுதிப்பும்பகரந்தான்கேள்
இன்னரியக்கர்சுராசுரர்முனிவர்கேசரர்செருடர்கந்தர்ப்பர்
மன்னினிற்றூயமலரடிபொற்றவண்கயிலாயமால்வரையில் (௧)

வளர்பெருந்தெய்வருடமாயிரங்கண் மணங்கமழ்மலரினமயங்கி
அளியினமிசைறமேற் கருவுசெஞ்சடையானனையிடராயனனுயிருக்
கு-அளிகொரவன்றன்கண்களீர்மல்கிப்புதுபுனற்றுளிகள்பன் மணியாய்
விளைவுபெற்றதுமற்றந்தமாமணியேவிளங்குசீருருத்திராக்கமதால்

மற்றவைதம்மிலொருமுகமுடையமணிசிவனிரண்டுமாமுகத்தைப்
பெற்றதுசத்திமும்முகநாதம்பிறங்குநான்முகத்ததுவிந்து
முற்றுமைம்முகத்தசதாசிவமாறுமுகத்ததீசரனெழுமுகத்தை
உற்றதுருத்திரனெண்முகத்ததுவிண்டொன்பதுமுகத்ததுபிரமன்,

தெய்வமாமணியின்சிறப்பிதிம்மணியைச்சிகையினிற்காதினிற்கழுத்
தில்-கையினிற்றரித்தலிற்சிகைமீதுகருத்துறத்தரித்தல்கோடிபலம்
[illegible]பகாதணியில்நூறுகோடிபலந்துலங்குகண்டத்தினிற்றெருமிக்கில்
[illegible]இருநூறுகோடிநற்பலங்கைக்கணிந்திடிலனந்தகோடிபலம் (௬)

## ௩-வது-சிவபூசைப்பரிச்சேதம்.

[illegible]தெய்வவுருத்திராக்கத்தினடையெலாமறிந்தவாறுரைத்தேன்
[illegible]மேன்மூலாகமத்தியல்பான்மிகுசிவபூசையின்விதிகேள்
[illegible]சரிதைநீள்கிரியையோகஞானங்களால்விருப்பம்
[illegible]திப்பரிந்நாலுமடைவிலொன்றொன்றுநால்விதமாம்,ந
[illegible]யிற்சரிதைசரிதையிற்கிரியைசரிதையில் யோகமெய்ஞ்ஞான
உ[illegible]மையுமோங்கியசரிதையாவதுதான் [ம்
திரமிகும்[illegible]ந்தவனஞ்செயதிருமாலைகள்சேர்த்தல்
மருவியுதிபத்திருமெழுக்கிடுதன்மற்றுமிப்படிவழிபடுதல். (௨)

கிரியையாப்பதத்திலருமறைபுகலுங்கிருத்திவாசன்மகபூசை
இருவகையாகுமாத்துமார்த்தமுடனெழிற்புனைபரார்த்தமுமென்று
ஒருவழிலிங்கந்தண்டிலங்கனிகங்குளிர்புனன்மண்டிலமென்ன[ன்
உளமெய்யுமைந்துமாத்துமார்த்தப்பேருகந்துபூசனைசெயுந் தலங்க

இங்கிவிற்கணிகலிங்கமீராறுண்டேவையவையெனிலெழின் மணலு
ம்-கொங்கலர்பூவுஞ்சந்தனமுஞ்சற்கோமயந்தானுமோதனமும்,தங்
கியமாவுமக்காரமும்பழமுந்தடினிபின் மண்ணும் வெண்ணெயுஞ்
சேர்,பொங்கியவுருத்திராக்கமாமணியுமபுல்லுமென்றுகடம்புடனும்

எழின்மணன்மூர்த்திசந்தனஞ்செல்வமிலங்கியமலர்பிணியின்மை
அழகியநற்கோமயம்பிணிநாசமன்னமண்ணுதிகாமங்கள்
பழமொடக்காரம்பிரியப்புற்றுனேபகர்மண்ணுகரமுருத்திராக்கம்
தகுமழபலபலமாவெண்ணெயிட்டார்த்தந்தடினிமன்சப்புசாரூபம்.

சொலுமிநுநிற்கச்சகன்றுமீடேறும்படிதொல்பதிதோறும்
நலமிகுதேவிருடிகண்மனிதர்நாமநூலகமப்படியே
அலகறுபதிட்டைசெய்தவுஞ்சுயம்புவானவுமாகியவிலிங்கம்
பலவையும்பூசைபண்ணியிச்சித்தபலம்பெறுகின்றதுபரார்த்தம்,

இனையனவானவிலிங்கபூசனைசெய்திடுவதற்கருகமாயேற்கும்
துனிபறுபஞ்சசுத்தியாகமத்திற்சொல்லுமச்சுத்திகளேந்தில்
புனிதநீர்தன்னைவிதிமுறையாடல்பொலிவுகூர்தேகசுத்தியதாம்
அனையநீராடிவடதிசைநோக்கியதன்கணாமேபறியங்கிருந்து. (எ)

பரவுமத்திரமந்திரத்தினாற்றிக்கைப்பந்தனைசெய்தநாமிகையாம்
விரலினால்வாமநாசியைநெருக்கிமெய்யிலவாழ்வாயுவைவலத்தும்
மருவுநாசியினாலிரேசகஞ்செய்துமற்றதனைப்பெருவிரலால்
புனைவறநெருக்கிவாமநாசியினாற்புலப்படப்பூரகம்பண்ணி. (அ)

நாசியினிரண்டுபுறத்தையும்வாயுநடையறவிரல்களானெருக்கிப்,பே.
[illegible]பகஞ்செய்திவ்வகைப்பிராணயாமமூன்றினைத்திடம் பெற்றுத்
[illegible]றுபொன்மைவெண்மைமாசெவப்புச்செறிகறுப்புப்புகைநிற
மாய் - ஆசறுசதுரப்பிறைதிரிகோணமாறுகோணுழிமண்டிலமாம்-

ஒழிவறும்பிரமாவாதியாம்பஞ்சமூர்த்தியேயூர்த்துவமுதலாய்
விழுமியமேவாய்மிதலகராதிவிளப்புவீசாகசரமுடைத்தாய்
எழில்புனைபார்நீர்தீயளிவானென்றெண்ணுமைப்பூதத்தினிடமாம்
செழுமுழந்தாளுந்திகந்தரநெற்றிசிரமெனச்சிறந்தமேகத்தை. (௯)

அலகறுநிலமேயாதியாய்விசாக்கரங்களையடைவுறநிறுத்தி
நிலைபெறுமிதயஞ்சிரஞ்சிகைகவசநேத்திரமந்திரங்களுடன்
தலைமையாமேயாதிச்சிவமயமாகித்தழைத்தபாசுபதவத்திரத்தால், இல
மூறும்படியேயமூர்த்தியேபஞ்சாக்கிராந்தியைச்சேதனஞ்செய்து

அங்கிவீசத்தாலாக்கையைத்தகனமாக்கியவ்வாக்கையினுள்ளே
தங்குமாவிலைச்சங்காரமூர்த்தியாயாற்றகவுறவறிவினால்வாங்கித்- தங்
கமாஞ்சிகையில்வியோமகனுதித்துலங்கியசைவதத்துவத்தில்- தங்க
வொண்ணுக்கிவெற்றிடப்புரியின்றன்மையாட்பொலியுமிவ்வுடலில்.

பேணியவமுதப்பிலாவனஞ்செய்துபிரணவயோகபீடமுமாய் - மா
னுறுபிரமரந்திரத்தினில்வெள்வனசத்தையதோமுகமாக்கிச். சே
னுஅமந்தவமுதிலான்மாவைத்திரம்பெறநினைத்ததாய் நினைத்து பூ
ஊனுமுடலிற்பொருத்திலச்சரீரப்புகழ்ச்சிவசரீரமாய்ப்பொலியும்

சிட்டிசங்காரந்திதியெனுநியாசத்திறங்களின்விகற்பமோர் மூட்பத்
தெட்டையுஞ்செய்து தன்னையந்நிலையிலெழிற்சிவனுகவேயெண்ணி
த்-தொட்டநாபியினில்வன்னிமண்டிலமுமிதயத்திற்சோமமண்டில
மும் - வட்டமாம்புருவநடுவினிலிரவிமண்டிலந்தானுமாய்வகுத்து.

இதயமாந்தலத்திற் பூசைசெய்துந்தியிடத்திலோமத்தினைவளர்த்து
முகனுவாகத்தியானமுஞ்செய்து நுண்ணியநெறியினுலிதய
மும்மனுவுறையும்பராபரன்றன்னைப்பண்புமேசராகமப்பகரும்
விதியினுலாராதனைசெயுந்திறனேவிளங்கியவாத்துமசுத்தி. (௰௫)

தேசிகன்சிவன்சந்நிதியினிலிருந்துதிரம்பெற வொருகைநீளத்தால்
ஆசறவிளங்குமண்டிலமெழுதியதிலலங்காரவாபரணக்
காசினிதனையாவாகனஞ்செய்துசருதியவிதயமந்திரத்தால்
பூசனைசெய்துதிக்கையும்பந்தப்புரிவதுதானசுத்தியதாம், (௰௬)

மருவியசராவங்கரகநற்படிக்கம்வலம்புரிமஞ்சனகும்பம்
விரைமலர்த்தட்டமருக்கியகலசம்வேறுமாமுபகரணமெலாம்
இருமையத்திரமந்திரத்தினுல்விளக்கியிதயமந்திரத்தினுற் பார்த்து
மூரண்மிகுகவசமந்திரத்தாலேமூடியப்முறைகளாற்றிறந்து. (௰௭)

சங்கையுங்கரகந்தன்னையுஞ்சுத்தசலத்தினுற்பூரிதமாக்கி
அங்கதிற்பிரமமஞ்சையுஞ்சடங்கமந்தனையுநியாசமாயமைத்துத்
தங்குசீரலக்கைத்தலத்தினுமேலவிசாக்கரநியாசமும்பண்ணி
மங்கலலிங்கமூர்த்தியாயுடனேவனசமூத்திரையையும்வருத்து (௰௮

ளாப்த்தசங்கத்திற்பூரிதமாக்கிவைத்தமந்திரப்புனலாலே
பாத்திரமனைத்துப்புரோக்கணைசெய்துடன்புடனிருத்தியபின்னைச்
சூத்திரந்தவறுச்சந்தனம்புட்பந்தூபதீபங்களுங்கொடுத்துச்
சாத்திரப்படிப்பாரிப்பதுதானேதகைமைசேர்திரவியசுத்தி. (௰௯)

சங்கராலயத்தைத்தேசிகனணைந்துசந்நிதித்தலத்தூவந்தித்து
மங்கலக்கோயில்வாயின்மேலாகவலத்திடந்தினிலுமத்திமத்தும்
பொங்குமைங்கரவெண்கலைமகள்கமலப்பூமகளென்னுமிவளையும்
துங்கமானமனப்பூசனையாகச்சோடசோபசாரணைசெய்து. (௨௰)

வாயிலின்வலத்தும்வாமபார்சுவத்துமங்கலக்கங்கைநந்திசன்
னயசிர்புனையும்யமுனன்மாகாளனென்பவர்தம்மையர்ச்சித்துக்
காயும்வேல்விமலன்சுவாகுவென்போரைக்கதவினிற்பூசனைபுரிந்து
தூயசந்நிதியிலிடபவாகனத்தைத்துலங்கவாராதனைசெய்து. (௨௧)

நாமவத்திரமந்திரத்தினாற்கண்டாநாதமுஞ்செய்துபின்னிதயச்
சேமமந்திரத்தாற்றிருத்தினைநீக்கித்திரம்பெறக்கெற்பமந்திரத்தில்
வழுறவணுகிமுன்னைநாட்சாத்தியிருந்தநின்மாலியங்கழித்துத்
தோமறுபுதியநாண்மலரொன்றுதுலங்கியமுடியினிற்சாத்தி (௨௨)

களைந்தனவெல்லாஞ்சண்டன்மேற்சாத்திக்கைகளையிலிங்கமந்திரத்
[illegible]ளங்கவேகழுவியிலிங்கபீடத்தைவிமலபாசுபதமந்திரத்தால்
[illegible]கூரநீடபிடேகமொருமையாற்செய்வதுதானே [ம்
[illegible]மலர்சேர்கருங்குழன்மயிலேலமகிமைசேரிலிங்கசுத்தியதா

[illegible]பூசாவேளையிற்சகலமந்திரத்தையுநமவந்தம்
[illegible]யாகவுச்சரிக்கப்பெறுவதேமந்திரசுத்தி
திரமதாமிந்தப்பஞ்சசுத்தியையுந்தெளிந்தவனேசிவபூசைக்
கருகனுஞ்சோமசூர்யசரத்திலானபூசனைசெயலாகா. (௨௪)

நாசிகளிரண்டுஞ்சமமுறவாயுநடந்திடும்போதுசங்கரனைப்
பூசனைசெய்யிற்சபலமப்படியேபூசனைதான்செயுமிடத்தில்
ஏசறுசத்திசிவமெனுமிரண்டிலிங்கமும்பீடமுமாகித் [போல்
தேசொடுவிளங்கும் பூவொடுமணமும் தேகமுஞ்சிறந்த சீவனும்

புனிதமாயொன்றுக்கொன்றுமேலாகப்பொருந்தனந்தாசனஞ் சிங்
சனமுட்டனேயோகாசனப்பதுமாசனம்விமலாசனமென்ன [கா
வினியவாசனங்களைஞ்சுளவதன்மேலிறையையாவாகனஞ்செய்து
தினமுமாகமநூன்முறையினர்ச்சிப்பார்சேர்வர்சாமீபமாம்பதமே

இத்திறமெல்லாங்காரணாகமத்திலிருபதோடுத்துநாலான
அத்தியாயத்திலருச்சனைப்படலத்தடைவுறவேபகர்ந்திடுமால்
மத்தவாரணத்தின்மருப்பெனத்திகிரிவாகமாம்புள்ளெனக்கனகச்
சித்திரகலசத்துணையெனவளருஞ்சிகரகுங்குமத்தனத்திருவே (௨௭

## ௨ வது, சிவதீட்சைப்பரிச்சேதம்.

சரியையேகிரியையோகஞானமெனுஞ்சதுவிதபாதசித்திக்கும்- அ
ருகமாந்தீக்கைமகிமைகேளாசானங்கியைசிவாக்கினியாக்கி-உரியமா
ணாக்கர்தம்மையன்புடனேயுத்தரமுகமதாய்வைத்துப்-பொருவருங்
கரகந்தருப்பையைப்பதித்தப்புனலினாற் புரோக்கணைசெய்து. (௧)

மிக்கவத்திரமந்திரத்தினான்மெய்யில்வெண்பொடிதூளனஞ்செய்தி
டக்குசப்புல்லாற்றுடைத்துமேதருகாலாக்கினிமந்திரத்தாலே [ட்
முக்கியசரீரந்தனைத்தகித்துடனேமொய்சிலமுத்திரையாலும்
தக்கசீவனில்வீசாக்கரத்தாலுந்தகனமாமுடல்பரிசித்து. (௨)

இதயமந்திரத்தாலிதயமாதியதாமெண்ணுந்தானங்களைத்தொடுவித்-
துகொடச்சீவபதத்தையுங்கொடுத்தாசாரியன்வலக்கரந்தன்னை
இதமுறயோகபீடமாய்ப்பண்ணியிட்டுவித்தேசர்சூழ்ந்திடத்தின்
மதிமனோன்மணிவாழ்சதாசிவன்றன்னை மனங்கொடாவாகனம்பண்
[ணி. (௩)

மருவுதேசிகனச்செங்கையைமுக்கான்மகிழ்ந்துமாணாக்கன்மத்தகத்
தில்-பரிவுறவைத்துச்சதுரமண்டலத்தைப்பண்ணிநீடருப்பையும்ப
விரவுமீசானமந்திரநியாசமிக்கவெண்டிசையினும்பண்ணிக் [டுத்து
குருபரன்சிவன்சன்னிதியில்வைத் தகண்ட கோடிவத்திரத்தினாற்சூ
[ழ்ந்து. (௪)

அந்தணர்முதலாநாலுசாதிக்குமபிநவநாமமுஞ்சாத்தி
முந்தியகுருவினிழலுடன்றனக்குமூத்தவர்நிழலிங்கநிழல்கள்
வந்துழிகடவாமலுஞ்சிவதீக்கைமருவிடாமடமகள்புணர்ச்சி [யும்
பந்தியிலெண்ணாமையுஞ்சிவநூலைப்புறஞ்சொலிப்பழித்திடாதமை

தேசிகரைப்பின்செல்கையும்பத்தர்திறத்தைநிந்தனைசெயாதமையும்
ஈசுரநிருமாலியந்தொடாமையுமென்றெண்ணிய சமயமோரெட்டு
மாசறவுபதேசித்துநீடத்துவம்பதவருணமாபுவனம் [ம்
ஆசிலாதன்மந்திரங்கலையென்னுமத்துவாவாறறிவித்தும், (௬)

இலங்கியவித்தேசுரர்கணேசருலோகேசர்தேசாத்திரமொன்னும்
வலம்வளர்தேவர்தமைக்குறித்தவர்தம்மந்திரத்தாவுதிபண்ணி·
நலங்கிளர்பூசாக்கிரமமுந்திருத்திநற்குருநனிதுநீணிலத்தில்
வலஞ்செயும்படிமாணாக்கனுக்குபதேசிப்பதுமேசிவதீட்சை. (௭)

இன்னனவெல்லாஞ்சுப்பிரபேதமென்னுமாகமத்தினுலாகப்
பன்னியபடலத்துரைக்குமிப்படியேபசுபதி தீக்கைபெற்றவர்க்கே
மன்னியசரியைகிரியையோகமுடன்மருவியஞானசித்தியெலாம்
நன்னிலத்தெய்துமிதரருக்கெய்தாநயனமற்றெவர்வழிநடப்பார். அ

ரு-வது-பசுபதிபாசசிவயோகப்பரிச்சேதம்.

பஞ்சிமெல்லடியாய்பசுபதிபாசப்பண்புகேள்பராபரமபமாம்
எஞ்சலில்வித்தை தத்துவத்திடை நின் றெழில்பெறவாத்துமாத்தோ
ன்றும், விஞ்சுமவ்வான்மாசுத்தமாயொளியாய்விமலமாயணுதியாய்வி
ளங்கும்-வஞ்சமாயையினூழ் சூழ்ந்திடப்படலான்மற்றதுபசுவெனவ
[ழங்கும். (க)

ஆகியமாயைத்துவக்கிலான்மாவுக்காசையுமோகமுஞ்சுகமும்
சோகமுந்துயருங்கோபமுமிகுசந்தோடமுஞ்சகசமாய்த் தொடரு
நாகவல்குலினுயவைகளெண்பத்துநான்குநூறுயிரபேதப் [ம்
பாகுபாடானயோனியில்வந்துற்பவிப்பதுமரிப்பதுமாகும் (உ)

செப்புழிச்சீவன்சிவன்றரிசனத்தாற்றீட்சையாற்சிறந்தபூசனையால்
ஒப்பிலாயோகத்தாற்பெறுஞானவொளிவிளக்கைக்கொடஞ்ஞான
வைப்பதாமிருளைத்துடைத்துமாத்தாண்டன்மறைத்தன்மாசறவிள
ங்குவதும்-மெய்ப்படுகுடத்துட்டீபமக்குடந்தான்விண்டிடவெளி
[ர்வதும்போல. (ங)

ஈசனதருளாற்பாசம்விட்டேகியிவனதாஞ்சகலகன்மத்தின்
வாசனையுடலைப்பற்றியேயிருந்துமடிந்துடன்மாண்டநாண்மாளும்
ஆசறுபெருங்காயம்பொதிபரணியட்பெருங்காயமாண்டுந்தான்
நாசமாமளவும்வாசனைவிடாமைநசிக்குநாணசிப்பதேபோல. (ச)

இத்தகைமையினுற்சிவமயமெல்லாமியல்புறவறிந்துளசீவன், முத்தர்
கண்ஞானவிளைவினுலந்தமூர்த்தியையடைந்திடுமுறைகேள், பைத்த
லையரவைப்பழித்தபோல்குற்பவளவாய்க்குவளையந்தடங்கட்-கொத்
தலரோதிச்சித்திரக்கொங்கைக்கொடியிடைக்கோமளக்கொம்பே.

நற்செவிகண்மெய்நாசிநாவென்னுஞானவிந்திரியமோ ரைந்தும்
சொற்படம்பாணிபாயுருபத்தந்தொகுங்கருமேந்திரியமைந்தும் [த்
சிற்செறியுமனம்புத்தியாங்காரஞ்சித்தமென்றுரைத்திடுந் தெளிவை
தற்செயுமந்தக்கரணமீரிரண்டுந்தகுதியாம்பகுதிதானென்றும் (சா)

மருவியவன்னமயப்பிராணமயமனோமயம் விக்கானமயமே, பரவு
மானந்தமயமெனுங்கோசபஞ்சமந்தானுமெய்ப்பரத்தில், உரியதோ
லுதிரந்தசையுடனரம்புமூளைபெறுமூளைசுக்கிலமாய்த் - தனையின்
மேல்யோகசாத்திரமுணர்ந்தோர்தாஞ்சொலுந்தாதுசத்தகமும்(எ)

சொல்லியவிடையேபிங்கலையோடுசுழுமுனையத்திசிங்குவைசீர்
புல்லுகாந்தாரிமெய்யலம்புருடைபுருடனோடுத்தசங்கினியாப்
பல்லபேருணருநாடியீரைந்தும்வன்னியாதித்தியன்மதியென்
மறலையாமுலகிற்பல்லுயிர்க்கெல்லாமிசைந்திடுமண்டலமூன்றும்.

ஓர்வரும்பிராணனபானனேவியானனுதானனேசமானனீறாகன்
சீரியகூர்மன்கிருகரன்றேவதத்தனேதனஞ்சயன்றனழைக்கும்
பேரியலந்தரியாமிமுக்கியன்சீர்ப்பிரபஞ்சன்வயிரவனென்ன
வாரிதியுலகிலாரியோருணர்ந்துவகுத்துளவாயுவீரேழும். (௯)

அகமுறுமூலாதாரமேசுவாதிட்டானமாய்விளங்குமாதாரம்
மிகுமெழின்மணிபூரகமநாகதமேவிசுத்தியாக்கினையென விளம்பத்
தகைமையாகியவாதாரமோராறுஞ்சாக்கிரஞ்சொப்பனஞ்சுழுத்தி
திகழ்வுறுதுரியஞ்சிறந்திடுந்துரியாதீதமாமவத்தைகளைந்தும். (௰)

மருவுசாத்திகராசதமொடுதாமதங்களாகியகுணமூன்றும்
விரவுமாணவமேமாயைகாமியமாய்மேவியமும்மலவிகற்பும், திரமி
குவாதஞ்சேட்பமும்பித்தந்திறன்மிகுவியாதிகண்மூன்றும், இரு
நிதிபுதல்வருலகமென்றிசைக்குமேடணையிரண்டினோடொன்றும்.

காமமேகுரோதமுலோபமேமோகமதங்கருதுமாற்சரியநீடிராகம்
ஏமமாந்துவேடமெனவிரித்தியம்புமிராகமென்பகையிருநாலும்
தோமிலாத்தூலஞ்சூக்குமமென்னச்சொற்பெறுசரீரங்க ளிரண்டும்
நாமநேத்திரநாநாசிகன்னமுடனுடியதுவாரமொன்பதுவும். (௰௨)

௯-வது-சகளநிட்களப்பரிச்சேதம்.

இத்திறமுறையாலெண்ணுதொண்ணூற்றாறெனுமிச்சரீரதத்துவ
த்தில்-சித்தியையறிந்துசிவசொரூபத்தைத்தெளிந்திட வேண்டுமத்
திறத்தில்-சத்திதான்சிவன்றன்சொருபநிட்களமுஞ் சகளமுஞ் சகள
நிட்களமும்-ஒத்துமூவிதமாயிருக்குமங்கவற்றி னோதிய நிட்களமு
[னாக்கில், (௧)

நகைமணியனையாய்சாந்திசத்தியுடனுதமும்விந்துவுநாலாம்
சகளமுமீசனுருத்திரன்விண்டுசதுமுகனென்றுநால்விதமாம்
நிகரறுசகளநிட்களமிலிங்கநிருபணசதாக்கியதத்துவத்தில் [கும்
பகர்மனோன்மணியாஞ்சத்திசங்கதமாய்ப் பணைத்திடுஞ் சதாசிவமா

செப்பியவந்தச்சதாசிவனுக்குத்திருமுடியைந்துநாலுமுகம் [லும்
ஒப்பறுகண்பன்னிரண்டுநாய்வாசியொளிர் கழுத்துறுப்பொரு நா
மெய்ப்பல்செவியெட்டாக்கையொன்றிருதாள்விளங்கிய திருநிறம்
வெண்மை-இப்பெருஞ்சிவதத்துவங்களைமுறையா லெண்ணின்முப்
பத்திருமூன்று. (௫)

சாற்றியவவைதாமெவையெனிற்சிவன்றன்சத்திசொற்சதாசிவனீசன்
தோற்றியசுத்தவித்தியேச்சுரராஞ்சுத்ததத்துவங்களைந்தும்
ஏற்றமாமாயைகலையவியத்தமிராகமித்தியையெழிற்காலம்
போற்றியநியதியெனப்பகர்மாயாபுஞ்சதத்துவங்களோரேழும் (௪)

பூதமைந்துத்தன்மாத்திரையைந்து பொருந்துகன்மேந்திரியத் திற
மைந்-தேதமின்ஞானேந்திரியமைந்திதலாலெண்ணிய குணமகங்கா
சேதனம்புத்தியென்றொருநாலுஞ்சிறந்தவிவ்வகையினாற்பூமி [ரம்
ஆதியாஞானயோகியர்கணித்ததமைத்ததத்துவங்களுலாறும். (௫)

ஓதியவிந்தத்துவமெல்லாமுணர்ந்துநீள்யோகசாதனையால்
ஏதமில்பஞ்சப்பிரமமுன்னுணர்ந்தோர்க்கெய்துமானந்தமாமுத்தி
மாதுகேளிதெலாஞ்சுப்பிரபேதவாகமத்தாதியாம்படலத்
தாதினாயூன்பாலங்கரத்திருதாளானைபெற்றனுபதேசம். (௬)

## ௭-வது-வீரமகேச்சுரப்பரிச்சேதம்.

வித்தகமயிலேயீதெலாநிற்கவீரமாமகேச்சுரசித்தாந்
தத்தினிற்பரமரகச்சியத்துமைக்குச்சங்கரன்சொன்னவா சகங்கேள்
உத்தமவிலிங்கதாரணத்தாலேயுயிருமவ்விலிங்கத்தினுருவாம் [ல்
அத்திறமெவ்வாறென்னிலம்மிடாநீரங்கியால் வெம்மையாவதுபோ

இணையனவிலிங்கசொருபமேன்மையெலா மியல்புறவறிந்தி லிங்கத்
புனைபவன்றேகந்தனைத்துறந்தாவிபோயிடுமரணகாலத்தில் [தைப்
அணையலிங்கத்தின்மூர்த்தியுமேகுமாவியோடயிக்கமாகையினால் [ல்
பிணையவிலிங்கம்பிரேதலிங்கமெனப்பெரும்புவிமீதுபேர்பெறுமா

ஆவியினுடனேமூர்த்தியையிழந்தவாக்கையுமிலிங்கமுமாக
மேவியம்புவியையகழ்ந்துநற்சமாதிவிதிமுறைவைப்பதுமியல்பா
மாவடுவகிர்நேர்விழியினாயிதலால்வச்சிரசூசியினிடத்தும் [ன்
தாவரும்வீரசமயசித்தாந்தத்தன்மையின்பெருமைநீதான்கேள். (௩)

பேறுளசிவதத்துவங்களையறியப்பெற்றவனேபிராமணனும்
கூறியவருணச்சிரமதன்மத்தைக்கொண்டொருபயனுமிங்கில்லை
மாறியவுண்மைச்சிவன்சொல்வாக்கியத்தைவைதிகர்க் குரைப்பதக்கி
தேறியசோகம்பாவனைதானேசிறந்தசீவனுக்குநன்முத்தி.] [ரமம்

தாவரும்பிரமங்காரணத்துடனேசங்கமமாகையினாலே
சீவபாவனையையடைந்ததத்தனையேதிரப்பெறத் தெளிந்துதான்று
மேவியபிரமமென்னுமிதறிந்தால்வீடதுவேயெனுமுண்மை [னே
தூய்யோதிமமேநீடனுபோகச்சூத்திரத்தினுமிதுசொல்லும். (௫)

புரங்கெடுக்கமகமேருச்சிலைகொண்டானைப்
போலவெகுமகத்தாயபொலிவுபெற்ற
வரங்கொடுக்குந்தெய்வங்களுண்டோவென்ன
மறைவல்லியதற்குமறுமாற்றஞ்சொல்வாள். (௧)

நன்றுரைசெய்தாயிதனைநங்காயுங்கள்
நக்கனூர்தரும்வரத்தைநம்பிநம்பி
வன்றிறல்சேரிரணியன்றான்வாழ்ந்தானேயின்
வாலிசுகமேயிருந்துமண்ணாண்டானே
வென்றியிராவணன்பிழைத்துவிடுந்திட்டானே
வீறுபுனைவாணனும்போர்வென்றிட்டானே
என்றனுமேயவர்குராங்குமவுணர்தாமும்
இராக்கதருமன்றேவென்றிவளுஞ்சொன்னாள். (௨)

காலருகிற்குழன்மறைமானச்சொற்கேளாக்
கவிபுடனேயவுணரிராக்கதர்களான
வாலிசகோதரனன்றேசுக்கிரீபன்
வாளவுணன்மகனன்றேபிரகலாதன்
ஆலதிகரிராவணனுக்கிளையானன்றே
ஆண்மைபுனைவீடணன்மற்றனையோர்யாரும்
மாலினருளாலன்றேவிடையூறில்லா
வரம்பெற்றாரொன்றுரைத்துமற்றுஞ்சொல்வாள். (௩)

ஆலாலவரவணையானருளாலன்றே
அவுத்தானபாதனெனுமவனெல்லோர்க்கும்
மேலானபதம்பெற்றானனுமன்றானும்
விரிஞ்சனுலகாளவரம்வேண்டிப்பெற்றான்
பாலானமொழிமயிலேயென்னவந்தப்
பைந்தொடியும்பசுபதிதன்பரிவால்வேதம்
நாலாயுமார்க்கண்டன்பெற்றபேறு
நாடரியாவொளிபொருளோநங்காயென்றாள். (௪)

தேன்றருசொன்மறைமடமானதற்குச்சொல்வாள்
சிவனருட்டீர்க்காயுவினாற்சிறப்பேதென்று
தான்பிறவிதீரவரம்பெற்றானாக
சயனத்தான்பாலன்றேதகுமார்க்கண்டன்
கூன்பிறைநேரணிநுதலாயிதெலாதிற்கக்
கோதையொருபாகத்தான்கொடுப்பதான
வான்பதவியாவுநிலையில்லையென்னும்
வாய்மையுணாப்பேனதுநீமனத்துட்கொள்ளாய். (௫)

வேறு. பவுண்டரிகன்கதை.

முன்னமொருவாளவுணன்மோதுகடலுடையுடைமூதுலகமேல்
மன்னவர்க்குலத்திடைசனித்திலகுகாசிநகராதிபதியாய்
தன்னிலைமதித்திடுபவுண்டரிகனென்றுசொலுநாமமுடையான்
கன்னிமையொருபாகனைமனத்திடைநினைத்தொழுகுகங்கைநதிவாய்.(௬)

ஓதியதுவாபரயுகத்தினிலவிழ்த்தமெனுமண்டலமதில்
சீதமனறுக்கசுகமென்பவறலூறொடுசிறந்ததுயில்விட்
டாதரவுடன்வருடமாறினுடனுறிலகுமக்கரமொனைந்
தேதமறவோதியிருகண்மலர்கொடர்ச்சனையிழைத்திடலுமே (௭)

நெற்றியினெருப்புவிழிநின்மலன்விளங்கவெதிர்நின்றருளிநின்
நற்றவமுவர்தனைமனத்துநினைவேதுநவினல்குதுமெனச்
சற்றுறுகளிப்பினன்முகிழ்த்திடுதடக்கைகடரித்தமவுலிக்
கொற்றவன்மதிட்புடையகாசிவளநாடுடையகோளரிசொல்வான் (௮)

[வேறு.]

ஈசகேளரவிந்தமெனுங்கணும்மைவாடையுமெண்டிசையுங்கிளர்
தேசுகூர்முடியுந்தனுவுங்கதைசேமவாழிவலம்புரிகொண்டெழில்
வீசுநாலுகரங்களுநன்கொடிமீதுநீள்கருடன்றிகழங்கமும்
வாசுதேவனெனும்பெயருங்கொடுவாழுமாறுவரந்தருகென்றனன்

பகருநீள்வருடம்பனிரண்டிடைபகலிராவுமறந்துதிடங்கொடு
நிகரின்மேனிவருந்தவருந்தலின்நியமமானதவங்கள்புரிந்தவன்
மகிமையானபதங்களிரந்திலன்மருவிஞானிலவொன்றுமுணர்ந்திலன்
மிகைசெய்தானெனநெஞ்சினிலங்கவன்விபரீதமறிந்துமிரங்கியே

வரமளித்தனன்வானவர்நாயகன்வடிவமைபுயல்போலெழின்மேயது
கருடன்மெய்க்கொடியாயது நால்விதகரதலத்திடை வால்வளையாழி
புரியபற்பகதாயுதநீடியவுடையினிற்றுகில்பீதகமானது [மேயா
வரிசையிக்குயர்காசியடிபனும்மனமகிழ்ச்சியின்மாளிகைமேவினன்

வளைநீள்குறியாலரவிற்றுயிலேகநாயகனுன்மறையிற்பொருள்
ஆனபேரொளிநானிபமுற்சொலும்ஆதிமூலமுநானழிவற்றுயர்
வானுளோர்பதிநான்மகிமைப்பரவாசுதேவனுநானெனமற்றவன்
ஞானயோகியர்மாதருமூட்டபடஞாலமேலுறைவாரமயக்கமே (௰௨)

காசிராசனைநெஞ்சில்வியப்பொடுகாணநாரதன்வந்துபழித்துயர்
வாசுதேவனெனும்பெயர்பெற்றினிகாழ்வமனமுண்டெனின்மற்
றைய] தேசுகூருமுகுந்தனைமெய்ப்புகழ்சேர்துவாரகைசென்றுசெ
ருக்கொடு] பூசலாடிவிளாந்துசெயித்துப்போதிபோதிநீயென்றுமு
ழக்கவே]
(௰௩)

(௰௭)

ஆயதேர்நிரையாடன்மிகும்பரியானையாளணியாழிநெடும்புவி
தேயவீறுடனேசெலவிஞ்சையர்தேவர்தானவர்மாலுறவிந்திரா
நேயமாயன்விரும்பியமர்ந்திடுநீடுவாரகையூரினெடுங்கொடி
வாயின்மேயினனீடுபவுண்டரவாசுதேவமகிதலத்துங்கனே (௰௪)

வாசுதேவனெனத்திகழ்ப்பேர்விடுமார்பின்மேவகவுத்துவமேவிடு
தேசுகூர்கதைபற்பமுலாவிடுசேவால்வளைசக்கரமேவிடு
வீசுநீள்கருடக்கொடிநீவிடுவீறமிதகமுற்றெருளிதாவிய
தூசுதான்விடெனச்சொலவேயொருதூதனுனவனைக்கடிதேவவே

வாய்மைதூதனுரைக்கநகைத்தொளிர்மாலுநாலுவகைப்படைசொற்
படி] எமருதமருக்கொருமித்தனமீசநீயிதுசெப்பெனவிட்டுயர்
சேமமார்கருடப்புயமுற்றெழிலசேர்துவாரகையைப்பிறகிட்டொ
ளிர்]காமர்நாண்மலர்நொச்சிதரித்தடர்காசிராசனைமூட்டிநெருக்க
வே]
வாதுகூரமலைத்தபவுண்டரவாசுதேவனெடுத்தநெடுங்கதை
நாதவால்வளைசக்கரமப்புயம்நாலுதோளொடறக்கணைதொட்டபின்
நீதியாழிசுழற்றியெறிந்திடநேரிலாமகுடத்தலையும்பல
காதமோடிநிலத்தவன்முன்புறைகாசியாளிகைபுக்குமறிந்ததே (௰௭)

சாதனையோகஞ்செய்தசங்கரசிவன்கதை

வேறு.

தாரணியிலிதனையெலாந்தவறிலாமல்
தக்கபுகழ்பதுமத்துத்தரகாண்டத்துச்
சீரியவேதப்பொருளைத்தழுவுஞ்செஞ்சொல்
திகழைம்பத்தேழாமத்தியாயத்துள்ளும்
ஏரமர்பாகவதத்துமியம்பாநிற்கும்
இவ்வளவோவின்னமுமொன்றியம்பக்கேளாய்
வேரிமலராசனனைச்சிவனைமற்றும்
வெவ்வேறுபேர்பெறும்விண்ணவரையெல்லாம் (௰அ

தெரிந்துணருஞானியர்கள்சேவைசெய்யார்
செயத்தக்ககாலத்திற்றேவரெல்லாம்
பரிந்தன்பருக்குதவும்பலன்களெல்லாம்
பருமிதமன்றென்பதனைப்பகராநிற்கும்
செருந்திநிறைந்திலங்குகுழற்கலசக்கொங்கைத்
திங்கண்முகச்செவ்வாய்ச்சிற்றிடைப்பேரல்குல்
முருந்துநகையாயைந்தாம்வேதமென்ன
மொழிகின்றபாரதத்துண்மோக்கதன்மம் (௰௯)

ஆரமொடுநவமணியைக்கொழித்துவீசி
அதன்கரையையழகுசெய்யுமணித்தரங்க
வாரிதியினிடையெழுந்தவாலகால
மையளறுங்கண்டத்தான்மகிழ்ந்துநல்கும்
ஈரமரும்வரங்களெல்லாந்திரமன்றென்னும்
இயல்புதனைவிரித்துரைத்தேனினியவன்றன்
பேரியலாஞ்சிவபதமுமநித்தமென்னும்
பிரமாணம்பலவுளவும்பேசக்கேணீ (௨௰)

தூயமகரக்குழையைப்பொருதுசேலைச்
சுடர்வேலைவடுவகிரைத்துள்ளுமானைச்
சாயகங்கடமைநீலோற்பலத்தைவண்டைத்
தாமரைப்போதைப்பழித்ததடங்கண்மாதே
காயகர்வாதகர்நடவரிவர்கடங்கள்
கருத்தெல்லாமொருநிலையேகருதுமாப்போல்
ஐயபுலனைந்துமொருமைத்தாக
இருப்பதுவேயோகத்தினியற்கையென்றும் (௨௧)

அப்படியாகியயோகஞ்சித்தியானோர்
அம்புயத்தோனுலகத்துக்கப்பாலான
ஒப்பறுசீர்முத்திபதந்தன்னின்மேவி
ஓங்கியவானந்தம்பெற்றுறைவாரென்றும்
செப்பரியதாமந்தமாயோகந்தான்
சித்தியாமுனந்தேகஞ்சிதைந்ததானால்
மைப்பயிலுமணிமிடற்றன்பதத்தைமன்னி
மற்றவனுக்கனுசராய்வாழ்வரென்றும் (௨௨)

தெளிந்திடுமைப்பதமுதவும்பிரமத்தின்சீர்த்
திருமுகந்தோடொடைகமலச்செய்யதாளில்
துளங்கியவேதியரரசர்வணிகர்மற்றைச்
சூத்திராங்குலங்கட்குத்தோற்றமென்றும்
கிளர்ந்திடுஞ்சீர்புனையாச்சவற்கமூலக்
கிரந்தத்துமதனின்வியாக்கியானமாகி
வளர்ந்தபுகழ்விக்கியானேசுரத்தும்
மாநிலத்தோரறியவகுத்துரைக்குமாதோ (௨௩)

இவ்வகையாகியமிருதிப்பொருளுக்கேற்க
இன்னமொருத்தரந்தன்னையியம்பக்கேளாய்
தவ்வறுசீர்முத்தியையிச்சித்தியாக
சாதனையிலிருந்தவொருசன்னியாசி

அவ்வழியோகந்தவறிச்சிவலோகத்தை
அடைந்தனன்சங்கரசிவனென்றமைந்தபேரும்
மெய்வழியேபெற்றுலகிற்றான்முன்னாளில்
மெய்யெடுத்தவிதமெல்லாம்விவேகஞ்செய்தான் (௨௪)

அவனிமிசைதானெடுத்தகாயபேதம்
ஐம்பஞ்ஞேடம்பதுளதறிந்துமுந்து
றுவலருஞ்சன்னுசியருஞ்சசியும்வேத
நூலனுமன்னனுமுதலாநூறுபேதத்
துவமையிலவவரையெல்லாங்கருணைபாலே
உருத்திரராகுதிரொன்றுனுண்மையாகத்
தவலரியவவர்களும்போய்ச்சிவலோகத்தில்
தக்கசதவுருத்திரராயங்குவாழ்ந்தார் (௨௫)

மற்றிதெலாமிகுயோகவாசிட்டத்தும்
வையகத்தோரறியவுரைத்திடுகையாலே
குற்றமிலாச்சாதனையாம்யோகமார்க்கக்
கொள்கைநிறைவேறுமற்குறைந்தாரன்றே
கற்றைநறுஞ்சடைபெற்றுமுக்கண்பெற்றுக்
கறைக்கண்டம்பெற்றுக்கைக்கபாலமும்பெற்
றொற்றைவிடைப்பரிபெற்றுச்சிவலோகத்தை
உகந்துவாழுவொன்பதுண்மைதானே (௨௬)

சேலானவிழிமயிலேயிதெலாநிற்கச்
செங்கையிலக்கினியேந்துஞ்சிவனார்நல்கும்
நாலாயபதங்களுக்குமழிவுண்டத்தை
தான்சொல்லவேண்டுமோநவையொன்றில்லாச்
சாலோகசாமீபசாரூபங்கள்
தவறுவருமென்றுங்கடம்பிரானார்
மேலானதிருவாக்கான்முன்னேளாத
விளங்கியவாகமமெல்லாம்விளம்பாநிற்கும் (௨௭)

இந்திரசந்திரசூரியாதிதேவர்
யாவருஞ்சாயுச்சபதமீவொன்று
முந்துகடவல்லிமுதற்பருச்சந்தன்னில்
மொழிகையினான்மற்றந்தமுறைமைபோல

வந்தனைசெய்திடுமன்பர்தமக்குமுங்கள்
மகதேவன்றிருவுள்ளமகிழ்ந்துநல்கும்
அந்தமுள்ளபதம்நம்மால்பதத்தைப்போல
அச்சுதமாகியபதவியன்றுமன்றே (உஅ)

அத்திறத்திற்றேவர்களுமுபாசித்தாருக்
கிலங்கியசாயுச்சபதமீவரீய்ந்தால்
தத்தமதாமொடுக்கத்தினளவேயன்றித்
தாமிறந்தன்பனையிருத்துஞ்சத்தியாமோ
நித்தியன்சங்கரனென்றுநினைக்கின்றாயேல்
நீதிபெறுமுங்கள்சிவாகமத்தாலந்த
உத்தமமாஞ்சங்கரற்குத்தோற்றந்தானும்
ஒடுக்கமுமுத்தரிக்கின்றேனுகந்துநீகேள் (உகூ)

வைத்தபுவியாகியதத்துவமூவெட்டும்
மாயாதத்துவமேழும்வந்ததாமுற்
பத்தியடைவேயொடுங்கிச்சுத்தமாகப்
பகர்ந்திடுதத்துவபஞ்சப்பிரமந்தானும்
சுத்தவித்திமயச்சுரனீசுரனிற்கூடித்
துலங்குசதாசிவனிலீச்சுரனுங்கூடிச்
சத்தியிலச்சதாசிவனுமொடுங்கிச்சத்தி
தான்பரனோடொன்றாகிச்சாருமென்றும் (௩௰)

திரயிகுதத்துவமெல்லாமொடுங்கித்தன்னைச்
சேர்ந்ததற்பின்றனிநின்றுதிகழுஞ்சோதிச்
சுருவமொடுகுணநாமமில்லையென்றும்
உங்கள்சிவாகமமெல்லாமுரையாநிற்கும்
பிரசமலர்மருவுகருங்குழலாயந்தப்
பிரளயத்திற்றனியிருந்தபெம்மான்றன்னை
அருமறைநாரணனென்றேசொல்லுந்தன்மை
அறைகின்றேனீயுமதித்தறிகின்றாயால் (௩௧)

[வேறு]

மின்னனேரிடையாயின்னதன்மையுயில்
மிகுசிவபூசையினியல்பும்
அன்னவனல்கும்வரங்களானவெலாம்
அத்திரமென்பதுமவன்றன்

மன்னியபதங்களநித்தமென்பதுவும்
மகிமையாலுயர்த்திடுமவனுக்
குன்னுதோற்றமேவொடொடுக்கமுள்ளதுவும்
உன்மனந்தெளியுமாறுரைத்தேன் (௯௨)

## ௪-வது - சிவநின்மாலியமறுப்புப்பரிச்சேதம்.

சேயிழைநல்லாயிவையெலாநிற்கச்சிவனிர்மாலியந்தன்னை
ஏயசண்டேசன்கைக்கொளலாலுமிங்கிதுநுகருதற்குரியோர்
ஆயநின்மலர்வேதியாமையினாலுமருந்துதற்கடாததாமதலால்
தூயதாநிருமாலியம்பழுதாகத்துறந்திலருலகுளோரென்றாய் (௧)

ஒப்பறநீயிங்குரைத்தவாசகங்களொன்றினுக்கொன்றுதான்விரோதம்
எப்படியென்னிற்சிவபிரசாதமிலங்குசண்டேச்சுரனுகர்ந்து
வைப்பதுகொண்டேநுகர்ந்திடத்தகாதுமாநிலமாந்தருக்கென்றால்
அப்புகழ்ச்சண்டேச்சுரன்றனைச்சுத்தனல்லனென்றுரைத்திடவேண் [டும் (௨)

ஆனசண்டேசன்பவித்திரனென்னிலவன்பிரசாதமுந்திருமால்
சேனைகாவலன்றனிவேதனம்போலச்செகத்துளோர்க்கருகமாய்வே [ண்டும்
மானிலத்தந்தவழக்கமோவில்லைமற்றதுநிற்கமாதேவன்
தானுகர்ந்ததனைநுகருநின்மலரித்தரணிமேலில்லையென்பதற்கும் (௩

ஏதமிலாதவெண்வகைச்சிவதீட்சைத்திறமியல்புறப்பெற்றுக்
கோதிலாவனுட்டானங்களாசாரங்குறையிலாதுயர்பெரியோரும்
நீதியானின்மாலியம்பொசிப்பதற்குநின்மலரன்றெனிற்போகம்
தீதிலாச்சிவபூசனைசெயும்படிக்குத்திரமிகுஞ்சுத்தராவர்களோ (௪)

இங்கிவையன்றிக்கஞ்சனூராழ்வானிப்பிரசங்கம்வந்தவிடத்
தங்கயற்கண்ணுப்சங்கராற்பணமாமன்னபானாதிகளெல்லாம்
தங்குசீரவன்றன்றாசபுத்திரர்க்குத்தகுமெனத்தாற்பரியத்தால்
அங்குரைசெய்தானாதலாற்சிவனன்பர்க்கெலாமாகுமென்றனையேல்

சொல்லியபனுவறெளிந்திடுமுங்கள்சுப்பிரபேதவாகமத்தில்
நல்லியற்படலநாற்பதாமதனிலிரண்டாஞ்சமயத்தை
வல்லதேசிகன்மாணாக்கனுக்குரைக்கும்வரவுபதேசமார்க்கத்துப்
புல்லியசிவனின்மாலியந்தொடாமற்புத்திகற்பிக்கையினாலே (௫)

அரிவையேயந்தக்கஞ்சனூராழ்வானாகமந்தன்னையுமுன்பின்
தெரிவுறப்பார்த்துப்பரிகரித்திலனித்திறமிருக்கச்சிவனுகர்ந்த
பொருவிலாநின்மாலியஞ்சகலர்க்கும்பாச்சியமல்லதென்பதுவும்
விரவியநுகர்ந்தாலதோகதிதன்னில்வீழ்த்துமென்பதும்விளம்பக் [கேள் (௭)

வேறு. சிவாந்நம்பொசித்தமண்டூகத்தின்கதை.

காசியென்பதொருபட்டணத்திலுயர்கங்கையின்கரைமருங்கிலே
மாசில்சிந்தையளஞானி யங்கொருவன்மாதுபாகனையடிப்புடன்
பூசைசெய்தபரிகலம்விளக்கியிடுபோனகத்தவிழ்பொசிப்பினால்
விசுண்புனலிலூர்வதோர்தவளைமெள்ளவந்ததைவிழுங்கியே (௮)

அவ்விடைச்சிறிதுநாளிருந்தழியதற்குநாளிறுதியாகலும்
தெவ்வடார்சதமுனைவென்றிவேலமரர்சிந்தைசெய்துசிவபோனகம்
வெவ்வியிட்டதொருபாதகத்தவளைபருவமுத்தியருண்மகிமைசேர்
இவ்விடத்துயிர்மேவிடற்கருகமிலலையென்பதனையெண்ணியே (௯)

காகமென்றவுருவித்துவண்மைபுனைகாசியாமவனிகைகடந்
தேசவீசுமெச்சமுத்தியத்தவளைவெட்டிடாதவகைசெய்ததாய்ப்
பூதேசகமடந்தையேயவனிபுகழ்சடாதரபுராணமாம்
பாகுபாய்மடையகாசிகாண்டமதுடகருமீதுமுகபாடமே (௰)

வேறு.

பசுபதிநின்மாலியதரிசனத்தாற்பரிசனத்தால்வரும்பாவம் [னை
வசையறுபுனலிற்சசேலமாய்முழுகின் மாண்டிடுமென்றுமற்றித
இசைபெறுமெள்ளினிணையின்றூலுமெழிற்பயப்பான மாவிரதம்
சுசிபெறச்சரிக்க விதிமுறையென்றுஞ் சொலும்பிரமாண்டமாம்பு
[ராணம்(௰௧)

சங்கரனின்மாலியந்தனைப்பாமார்த்தத்தினாற்பொசித்தவனுக்குத்
திங்களொன்றளவும்பிரமகூர்ச்சத்தின்செலத்தினைவிதி முறைநுகர்ந்
தங்கியபாபவிநாசமாமென்றுசகலருஞ்சம்மதமாகத் [தால்
துங்கமாம்பஞ்சராத்திரந்தன்னிற்சுரசசங்கிதைதொகுத்துரைக்கும்

தகுசிவதீட்சைவிதிமுறையதனாற்சங்கரபூசைசெய்தவர்க்கும்
வகைமலர்சார்தமன்னபானுதிமற்றுநின்மாலியமெல்லாம் [டல்
நுகருதற்கடாதுமண்ணிடைப்புதைத்தனுண் மணற்றடங்களிற்போ
விகிதமென்பதனைக்கந்தமாபுராணம்வெளிபெறப்பாரின்மேல்விள
[ம்பும்(௰௩)

பன்னுமூவகையாமூர்த்திகடம்மிற்பாத்துவசோதனைபார்த்த
மன்னியபிருகுமுனிசிவனைத்தாமதனெனவறிந்துநீநுகர்ந்த
அன்னபானுதியாகியதெவர்க்குமருகமாகாதனமென்று
தன்னுயர்வேதவாக்கினாலிட்டசாபமுஞ்சம்பவித்திருக்கும் (௰௪)

இன்னதன்மையினாலிடபவாகனனுக்கின்புறநிவேதிதமான
அன்னபானுதியாகியதெல்லாமநருகமெவர்க்குமென்பதனை
முன்னியவுங்கள்சிவாகமமுழுதுமுனிவரந்தணர்களாதரித்து
பன்னியவேதபுராணசாத்திரமும்பலபலவிதத்தினும்பகரும் (௰௫)

உ-வது-சைவமோகனுகமமறுப்புப்படலம்முற்றும்.

ஆக திருவிருத்தம் ௭௫

அரிதாசர்திருவடிகளேசரணம்.

# ௩ வது வைதிகதிருவாராதனப்படலம்,



## க-வது-விட்டுணுபூசைவைபவப்பரிச்சேதம்.

ஆதலாற்சிவனின்மாலியமெவர்க்குமருகமன்றென்பதுஞ்சொன்னே
மேதகுவிண்டுபூசையேயுலகில்விசேடமாம்பூசையென்பதுவும் [ன்
ஓதுமங்கவனேசதுவிதபலமுமுதவுமென்பதுமவனுறையும்
பாதைகூர்பதமேநித்தமாம்பரமபதமெனப்பகர்ந்திடும்பண்பும் (க

அங்கவனுகர்ந்தநிவேதிதந்தானேயமரர்முதலினரெவர்க்கும்
துங்கமாமுத்திக்கேதுவதாகச்சுபோச்சியமென்னவுந்தொகுத்துத்
தங்குநான்மறையாற்பலபுராணத்தாற்றகைமைசேர்தருமசாத்திரத்
தால்,இங்குநான்பிரமாணங்களுன்மனத்துக்கியைந்திடும்படியியம்
[கேள் (உ)

எண்ணியவிருக்கிலட்டகமிரண்டிலிரண்டதாமத்தியாயத்தில்
நண்ணியவர்க்கமிருபதோடைந்தினலம்புனைநாரணனென [த்
புண்ணியன்றனக்காதரவினாற்செய்யும்பூசையேவிசேடபூசையென
திண்ணமாயுரைக்குமிதற்கிசைபுராணச்செஞ்சொலுமினிதுசெப்பு
வன்கேள் (௩)

பூவின்றான்முகனைப்படைத்தநாரணனைப்பூசனைவைதிகமெனவும்
மேவுதாந்திரிகமென்னவுமிரண்டுவிதம்பெறவுலகின்மேல்விளம்பும்
காவிநேர்விழியாய்வைதிகமேவைகானசாராதனைகருதும்
தாவிறாந்திரிகமென்பதுபஞ்சராத்திரவிதியருச்சனையாம் (௪)

விரவுவைகானசார்ச்சனையந்தவிகநசகுலத்துவேதியர்க்கே [ல்
அருகமாமற்றையந்தணர்க்கெல்லாமமைந்திடுந்தீட்சையின்விதியா
திரமதாம்வைதிகார்ச்சனைப்பூசைசெய்வதுதகைமையாற்சிறக்கும்
பிரமமாம்பஞ்சராத்திரபூசைகேவலமுத்திசாதனமாம் (௫)

எண்ணியவைதிகார்ச்சனைவிளாவாலிகம்பரமளிக்குமாகையினால்
நண்ணியகிராமாதிக்கெலாம்வைகானசவர்பூசனைவிசேடம்
வண்ணவார்குழலாயித்திறமெல்லாமச்சியபுராணநூல்கூறும் [க்கேள்
திண்ணமாம்விண்டுபூசையின்மகிமைதெளியவின்னமுமுரைசெய

கூருமபுராணத்துபரியாகத்திற்கோதறுவியாதகீதையினில்
பாருமோர்மதிக்கவத்திய யந்தான்பத்திஞேடெட்டதாமதனில்
சீரியவாராதனைக்கிரமங்கள் செப்பியபித்துணிற்றிகழும்
நாரணன்றிருவாராதனைதாமேனநவையிலாவைதீகமென்றும் (௭)

அந்தநீடாராதனைதனக்குவமையானதொன்றில்லைவேறென்றும் [அ
மூந்தியவாராதனையையாதரவின்முறைமையாற்செய்திடும் பொழு
பந்தமிலந்தவிண்டுவின்பதமேபரமமாம்பதமெனப்பகரும்
மந்திரம்புருடசூத்தமென்றிரண்டுவாய்த்தமந்திரமெனவகுத்து (௮)

உயர்மறைநாலினிந்தமந்திரங்கட்கொத்தமந்திரமில்லையென்றும்
அயர்விலாவந்தமந்திரத்தாலேயகண்டபூரணனெனுமனந்த [னத்
சயனனுக்காத்மசமர்ப்பணஞ்செய்தாரசாமரணத்தொடுசன [றும்
துயரொலாந் தீர்ந்துசச்சிதானந்தச்சொருபமாய்ச் சுகிப்பர்களென்

இந்தநற்பூசையியன்றிலதாகினெறிற்சிவபூசனைதன்னை
மந்திரமுறையாற்செய்தலாமென்றுமற்றதுமியன்றிலதாகின்
உந்துசூரியனையாகிலுமன்பாலுபூசனைசெய்வதாமென்றும் [லும்
புந்திமறையுமோராரானபேர்க்கெல்லாம்புலப்படும் வண்ணமேபுக

ஆதலாற்செங்கண்முகுந்தனார்திருவாராதனையேமிகுபரமம்
தீதிலாவைதீகமெனுந்தன்மைத்திறமதால்விசேடமென்பதுவும்
ஈதலாவாராதனையெலாமடைவேயியைந்தமத்திமாதமமென்னும்
நீதியுமுரைத்தேனந்தவர்ச்சனையினிலைமையுமுரைத்திடநீகேள் (௰௧

நற்பரவாசுதேவநாமத்துநாரணன்பரமமாம்பதத்தில்
அற்புதவியூகத்தினில்விபவத்திலந்தரியாமிமார்க்கத்தில் [ல்
சொற்பெறுமர்ச்சாவதாரவிப்பதத்திற்றொகைபெறவைந்துபேதத்தா
பொற்புடைப்புருடாராதனையுகந்துபுலப்படப்பகுத்தவைபுகலில்

அண்டகோடிகளுக்குள்ளுமப்புறமுமாகியேயகண்டபூரணமாய்
எண்டகும்வாசுதேவனார்நாமமெங்குமாய்வசிக்கையாயுடையோன்
தண்டலிலகிலாண்டங்களுக்கெல்லாந்தானுயர்பரமமாம்பதத்தில்
கண்டுநித்தியசூரியர்தியானிக்குங்காட்சியாராதனைகொள்ளும் (௰௩)

மற்றவனுவகைவியூகத்தில்வாசுதேவன்சங்கருடணன்
பெற்றசொற்பிரத்துயமன்னனுருத்தப்பெயர்பெறுமூர்த்திகளாகி
நற்றுமட்டாங்கயோகியர்சனகசனந்தசனக்குமாரர்களால்
உற்றிடுநித்தமுத்தராளுமுபாசனைதனையுகந்தருளும் (௰௪)

நுவலுமத்திருமால்விளங்கியலோகானுக்கிரகார்த்தமதாக
அவதரித்தருளுமிராமகிருட்டிணாதியாகியதெய்வவைபவத்தில்
பவமறுபிரகலாதனாதன்சொற்பராசரன்பரவுபுண்டரீகன் [ன்
உவமையில்வியாதனம்பரீடன்சிரோங்குசௌனகனுயர்பார்த்த (௰௫)

ஓங்குசீர்வசிட்டன்வீட்டுமன்றன்பண்ணுயர்சுகன்வீடணனுருக்கு
மாங்கதன்முதலாம்பரமபாகவதர்தாமன்னிடுங்காரணசன்ம [ரால்
பாங்கினர்தம்மாற்பெறவரான்றனம்படைத்துவாழ்ந்திடு தம்பாதன
பூங்கடல்சூழவிளங்கியவிந்தப்புவனமேற்பூசனைகொள்ளும் (௰௬)

தருமமதுநிற்கவவ்வப்பிரமாதிதங்கியபிபீலிகாந்தமதாம்
அகணிதசீவகோடிகட்கெல்லாமந்தர்யாமியாயிருந்து
மகிமைசேர்சுகரால்வாமதேவர்களான்மற்றுளனாதிகராகித்
திகழ்வுறும்பரமயோகிகளாலுந்திருந்தவாராதனைவிரும்பும் (௰௭)

செப்பியவந்தச்சீதரனுலகிற்சேதனாசேதனமெல்லாம்
மெய்ப்புவியதிலிடேறவேசுயம்புவியத்தவிக்கிரகமும்விண்ணோர்
அப்பெருமுனிவர்நரர்களாற்பதிட்டையருச்சனாவிம்பமுமவ்வி
ஒப்பறுந்திருவாராதனையொன்றுபத்துநூறுயுகந்தருளும் (௰௮)

உற்றிடுமிந்தமூர்த்திபஞ்சகத்தையுணர்த்ததும்பஞ்சராத்திரநூல்
மற்றிதன்றிக்கநால்வகையானவாசுதேவாதிமூர்த்திகளே
சொற்றருமிந்தவியூகமெமுதலாச்சொல்லியநாலுபாசனைக்கும்
கூற்றறயங்குழலாகமமடப்பாவாய்காரணமாகையினாலே (௰௯)

எழில்பெறுமிந்தமூர்த்திகடமையேயிலங்குவைகானசத்தினிலும்
பழுதறுபரியாயப்பெயராலேபஞ்சமூர்த்திகளெனப்பகரும்
அழகுசேர்கண்டமாகியபிரமமைவகையாயளவிட்டு [ப்குழலாய்
மொழிவதற்கெளிதாயிருக்குமோவென்னின்முருகலர்செறிந்தமொ

ஏரமர்பிரமம்பஞ்சமூர்த்தியுமாயிருக்குமென்றியாவருமதித்த
நாரணனுபநிடப்பகருமப்படியேநலப்புனையுலககாரணனும்
சீரியதேசோராசியாய்விபுவாய்ச்சிறந்தநாராயணமூர்த்தி
பூரணமாந்தன்சுடாவலீலையினாற்புவிக்கனுக்கிரகமுமாக (௨௧)

காசினிமேனெய்கடினமாவதுபோற்காட்சிசேர்வடிவமுந்தரிக்கும்
பேசுமங்கவனாராதனைசெய்யப்பெறுவதுமெவர்க்குமெய்தாது
பூசல்வண்டலம்பும்புரிகுழன்மானேபுலப்படப்புகன்றிடுமிந்த
வாசகந்தனக்குமொருபிரமாணம்வகுத்துரைசெயமனங்கொள்ளாய்

பருதியையழுவேழ்சனனமர்ச்சித்தாற்பசுபதியத்திசம்பவிக்கும்
கருதுமக்கவனேயாமொருசன்மக்கர்ட்சியாம்பூசனைசெய்தால்
சுருதிசாத்திரசம்பன்னொறுமந்தத்துறையின்முச்சனனமாசரித்தால்
திருவளர்மார்பன்பத்திமெய்யுறுவமெனச்செப்புமாதித்தியபுராணம்.

ஓங்கியபுகழ்சேரொருகுலந்தனில்வாழுத்தவாசாரியனென்போர்
பாங்குளவாசுந்தலைப்பணிந்துபரமநின்பூசனைப்படியை
ஆங்கிரமத்தாலுரைத்தருளென்னவாயிழையார்துகில்கவர்ந்து
பூங்குருந்தேறித்திருவிளையாடல்புரித்திடும்புனிதனும்புகல்வான்.

உத்தவமுனிவகேட்டியாலென்றனுபாசனுபேதமிங்குரைக்கில்
மெய்த்திசீர்ப்புனைவைதிகந்தாந்திரிகமிச்சிரமென்றுமூவகையாய்
வைதிகம்பத்திவ்வேதிகைதன்னில்வன்னிபிற்பரிதிமண்டிலத்தில்
சுத்தயாஞ்செலத்தின்மனத்தினினுயர்பூசுரனையெண்ணியவிடத்து
[ம் (௨௫)

இயைந்திருந்தசிலையிற்றருவிலோகத்திற்கெவ்வியத்தினிவிமேலபணத்தி
ல், நயந்தருமணலின்மனத்தினில்விளங்குநன்மணியினிலெல்லைநாட்டு
ம், உயர்ந்திடுமெட்டுவகைப்படிவைத்துமுகந்தெனையாதரத்துட
னே, பயந்தருமாராதனைசெயத்தகுமப்படியருச்சனைசெய்யுமொ
[ழுது (௨௬)

அருச்சகன்புதுநீராடிநித்தியானுட்டானமானவைகளையெல்லாம்
திருத்தமேதட, தவத்துமோத்தரியச்சீர்ப்பரிவேட்டிதனாகிக்
கரத்தின்முறிதத்தபவித்திரத்தனுமாய்க்கருதிவிம்பத்தினுக்கெதிராய்
அருந்தியாற்கிழக்காகுதல்வடக்காதலவிமுகமாகவேயிருந்து (௨௭)

மஞ்சனக்கும்பம்படிக்கநற்சங்கமற்றுமாமுபகரணமெலாம்
தஞ்சமாகியமந்திரப்புனலாமேலசாதனப்பண்ணுவித்ததற்பின்
செஞ்சொனூன்மலர்சந்தனமுதற்பூசாத்திரவியத்தோடுதேகத்தை
விஞ்சுசீர்மந்திரப்புனலாமேலவித்துமுறைபுரோக்கணைசெய்து (௨௮)

மருவிபபன்யாற்சுகாசனமாகவளம்பெறவிருந்துநற்காயத்
திரியினுவிதயஞ்சிரஞ்சிகர்நியாசஞ்செய்துமிச்சிறந்தயோகத்தால்
கருதியமெய்யைவிஞ்சுசோடணதாகனப்பிலாவனங்களுஞ்செய்து
வளாவுறவந்தணமாதுரிகைவெகுமானதிரிகையெலாம்வகுத்து (௨௯)

அங்கியால்வாயுவினுற்பரிசுத்தமாகியேயமர்ந்ததேகத்தில்
தங்கியவிதயகமலமத்திமத்திற்றனியனுமாத்திரமாகித்
துங்கமாஞ்சீவகலையினுதாந்தச்சொரூபனுமெனத்தியானித்துப்
பொங்குசீவ்கலாபிண்டமத்தினினும்பூசைதன்மயமதாய்ப்புரிந்து.

அருச்சனைவிம்பந்தனிலவிதிமுறையாலன்பினுவாகனஞ்செய்து
கருத்துறவுபசாரங்களும்புரிந்துகமலமெல்லிதழ்முதலதினால்
நிரைத்துமுஞ்சங்கஞ்சக்கரங்கதைவணீர்சரந்தனுவலமுசலம்
தரித்தமாலிகைநற்கவுத்துவஞ்சிவச்சங்களைத்தாமுமர்ச்சித்து (௫௧)

மருவியவனந்தன்சுனந்தனைகருடன்வாய்த்தசண்டன்பிரசண்டன்
உரமிகுபலனைமகாபலன்குமுதனுயர்குமுதக்கணன்றற்கை[யொன்
திரமிகுகனைசன்விபாசனைவிரிவச்சேனனெண்டிசைகள் காப்பா
றுனாசெயுமவர்கடம்மையுமவர்கட்குரியவாந்தலத்திலர்ச்சித்து.(௫௨

சொலுமகாபுருடவித்தையாற்புருடசூக்தமாமந்திரந்தன்னால்
அலகிலாவெனதுவிக்கிரகத்தையடைவுகுன்றாமலர்ச்சித்துப்
பொலிவுறுமங்கிகன்னினுமன்பாற்பொருந்தவாவாகனம்பண்ணி
இலகியசமிதநாச்சிபாகுதியுமெனதுமந்திரத்தினாற்செய்து (௫௩)

சீரியவாராதனைமுடிந்ததற்பின்சிறந்தவாலயத்தினைச்சூழ்ந்த
பாரிடங்கட்குப்பலிகளுங்கொடுத்துப்பலவிதத்தசனைமகிழ்வித்து
நேரிலாவந்தநிவேதிதமெல்லாநிலைபெறுஞ்சேனைகாவலனுக்
காரவேசமர்ப்பித்தங்கொருமுகத்துமாடலாற்பாடலாலமைத்து.(௫௪

திருந்துமென்னடிகளிரண்டையுந்தனதுசிரத்தினுங்கண்ணினுஞ்சே
ர்வித்து, திரும்பவக்கடலிலமுழ்ந்துமென்றனையீடேற்றுவாயெனப்பிரா
ர்த்தித்து, விரும்பிநானளித்தமாலையைச்சூடிவிதிமுறையென்னைவழி
படுவான், அரும்பெறற்பரமபதத்திலென்னுடனேயகண்ட வைபவ
மனுபவிக்கும் (௫௫)

பத்தியாய்நீயுமியானினிதுரைத்தபடியிலாராதனைபண்ணி [ன்
நித்தியானந்தபதத்தெனையடைவாய்நிலைபெறவென்னமேவயுரைத்தா
இத்தைநீள்பாகவதபுராணத்தேகாதசக்கந்தமென்பதனு
டத்தியாயந்தானிருபதோடேழாமதனினிச்சயம்பெறவறையும்(௫௬

மற்றிதுநிற்கவானவர்முனிவர்மனிதரோடேனையரெல்லாம்
முற்றுமவேள்விகளைமுதலவாங்கன்மமுழுதினுஞ்செய்திடுவதெலா
வெற்றிநாரணனாராதனைதானேவிசேடவாராதனையின்னும் [ம்
முற்றுறாசெய்யிற்பஞ்சராத்திரநூலொன்றனாகமோடிநீள்கிரந்தம்.

வளம்பெறுவைகாநசமெனுநூற்குவரம்பிலையாகையினாலே
விளங்கமேவயதெலாமுறைத்தடிலிங்குமிகவிரிந்திடுமிதுநிற்கத்
தெளிந்திடுநாலுவகைப்புருடார்த்தசித்தியுந்திரம்பெறத்தருவான்
களங்கமின்முகுந்தனேயெனுந்திறமுங்கருத்துடன்கட்டுரை செயக்
[கேள் (௫௭)

## உ-வது-சதுவிதப்புருடார்த்தப்பரிச்சேதம்.

ஏராருமுத்தியருண்மூர்த்திமேல்தவிருஜிக்கணெங்குமொழியும்
காராருமேனியர்மேலெனுஞ்சொலகடவல்லியும்பகருமால
நாராயணச்சுருதியுத்தரங்கணமுவாதமேபேறுபெறுமா
ருராதனைக்குமுயல்கின்றதெய்வமவனேயெனுஞ்சொலறையும் (க)

ஓலிமேவுசீர்ப்புருடசூத்தமந்தவொளிர்மால்தியானமதலால்
நிலையானமுத்திபெறுகைக்குவேறுநெறியில்லையென்னுமிதலால்
பலவேதசாகைகளுமுத்திநல்குபரமன்முகுந்தனெனவும் [மேதா
சொலமேவவிளம்புமதலாதினைந்துதொகைசெய்ய வெண்ணிலெலி

சீர்க்கண்டெனுஞ்சொன்மயிலையுமாத்சுதிறமீதுநிற்கமறைதேர்
மார்க்கண்டனுங்கள்சிவனல்கநித்தியவரமுன்புபெற்றுமகிழாத்
தார்க்கொண்டமேவணியமோசமுத்திதருகென்னமுத்திதருவான்
நீர்க்கொண்டமேனியரியென்னவந்தநிலாருணசிலநெடுநாள்

தண்ணார்சுவேதகிரிமீதுசென்றுதவமாதரித்துவனசப்
பெண்ணாதரித்தபுயமாயனல்குபெருமுத்திபெற்றகதைதான்
விண்ணோர்மதித்தமுனிதுங்கனந்தமிருகண்டுமைந்தன்மொழியும்
பண்ணாபுராணமதனுண்டுசொன்னபடிநிற்கவின்சொல்பயில்வாய்.

அரிநாமம்வந்துசெவிதோயுமென்னவதிர்கன்னைகட்டி யரன்மேல்
மருவாதரத்தினுறைவானொருத்தன்வரமுத்தியெய்தியெனவே
பொருளானமுத்திதருகின்றம்சாதிபுயல்வண்ணனென்றுபுரமூன்
முரணுமெரிததவிறைசொன்னவாய்மைமுதலும்பகர்ந்ததுளதே (ரு

பெரிதானதாகமொடுசென்றுகங்கைபெருகுப்பெருக்கைவிடவக்
கரையூடுகூவமகழ்வானையொப்பர்கமலாசனத்துமயிலைத்
திருமார்பில்வைத்தவரியைத்துறந்துசிலதெய்வம்வேறுதொழுதே
அரிதானமுத்தியவர்தாமளிக்கவடைகின்றபேர்களெனவும் (சு)

குளிருக்கிடைந்துவெளியின்கண்மேனிகுலைவானொருத்தன்மருளால்
ஒளிபெற்றமின்மினியையங்கியென்னவுறுகின்றதன்மைபுரையால்
அளவற்றமுத்தியடைவான்விரும்பியரிதன்னையன்றியயலே
வளமுற்றம்தவரிவொன்றுசென்றுவழிபாடுசெய்தலெனவும் (எ)

மாணேறுசாங்கியமும்யோகமமையைவளர்சாருவாகமதனின்
காணுதமென்றபலநூல்தெரிந்துகளை கண்டபோதுமலைபோல்
நீணுசமீதுதுயின்மால்தியானநெறியன்றிமுத்திநெறிதான்
காணுதுபாரிலெனவுள்ளவாறுசருதிப்பகர்ந்தகதையும் (அ)

மழுவாளிநாலுமறைபாளிவாணவளையாளியென்னுமிவரால்
அழியாதபேறுகிடையாதுநாகவணைமீதுமேவுமவனே
ஒழியாதவின்பமிகுமுத்திநல்குமொருதெய்வமென்னுமுறவால்
நழுவாதவாய்மைநெறிகிங்கரர்க்குநமனார்மொழிந்தமொழியும். (௯)

திரணங்களாதியயனந்தமென்றுதிகழுஞ்சராசரமெலாம்
மருடங்குமாறுமகமாயைசெய்யுமழைமேனிமாலையறிவார்
சாருப்பெறுதபதமேவிநீடுசுகந்துய்ப்பரென்னுமியல்பும்
நரசிங்கநாமதிகழும்புராணநவவத்தியாயநவிலும் (௰)

இறையூடிருக்குமவர்தாமொருத்தர்சிறைதீர்க்க காரூத செயல்போ
மறைநாலினூற்றபொருளானநீலமணிவண்ணனன்றியயல்சேர் [ல்
அறிவால்வணக்கமுயல்வாரைமுத்தியடைவிப்பதல்லவலைகொண்
டெறிநீருடுத்தபுவியோர்மதித்தவிதிகாசமோதியிடுமால் (௰௧)

நலவார்புராணவரரத்திளமோடுநளினப்புராணநவிலும்
மலைமாமடந்தையொடுநீலகண்டன்மறையோர்பசிபர்வணிகக்
குலசாதமானயவர்மாதமொன்றுகுணிதங்களானவெலாம்
அலையாதமுத்தியரியன்றியலடையார்களென்பதறையும் (௰௨)

அறவர்க்குமாசிலவர்கட்குஞானவதிகர்க்கும்புத்தியடைவே
நிறைமுத்திபெற்றவிபுதர்க்கும்வேறுநிகரற்றவின்பமதெலாம்
செறிவிக்கவல்லபரவத்துநீடுதிருமேவுமார்பனெனவே
குறைவற்றசெஞ்சொல்விரிகந்தமென்றுகுலவும்புராணமொழியும்

செனனங்களோடுமரணங்களானதிரைவேலைமூழ்கிவருதே
கனவின்னல்கூருமவர்தமைநீடுகரையேற்றுவிக்கவலபேர்
எனையன்றியில்லையெனவாசுதேவனிறைகொண்டபார்த்தனுடனே
மனமொன்றிநின்றுவெளியிட்டவாய்மைவளமானகீதைசொலுமே.

நீதாதலின்றிவினையாதல்செய்துதிருமால்சமர்ப்பணமெனும்
மேதாவிகட்குமொருமூன்றுலோகவிசயங்களெய்துதலிலால் [ன்
மூதானமைகொண்மைபொருவெங்களத்துமுறிவில்லைமுத்தியுளதெ
ருதாரபூமிபதியாம்வராகரறையும்புராணமொழியும் (௰௫)

உவமானமற்றமறையோதுதக்கனுயர்வேள்விதன்னிலரனால்
அவமானமுற்றகுளிர்சோமனந்தவரன்வேணிமேறியிடநீள்
தவமாதரிக்கவரநல்கிஞானத்ததிசேர்முகுந்தனெனவே
நவைதீர்செழுஞ்சொன்மிகுநாரதீயநலமேவுபாரினவிலும் (௰௬)

ஆரோக்கியத்தைவெயிலோனிடத்துமகல்செல்வம்வன்னியிடையும்
ஏரோற்றஞானம்விடையோனிடத்துமெழின்முத்தி விண்டுவிடையும்
சீரோற்றபாரிலறிவுள்ளபேர்கள்செறிகின்றதென்ன[illegible]னிவால்
பேராற்சிறந்தபொருளால்விளங்குபிரமப்புராணமொழியும். (௰எ)

திருபன்புரக்குமுலகத்தைநேயநிலைகொண்டுமைந்தரையெலாம்
தருதந்தைகாக்குநரரைப்புரிந்ததருமம்பரிக்குமவைபோல்
மருவுஞ்சராசரமெலாம்வளர்த்துவரமுத்திநல்குமவனீ
டரியன்றுவிண்டுதருமத்திலாய்ந்தங்கவறையுமகிழ்ச்சிபெறவே

தருமங்களோடதருமங்களான்சலராசிதானுமிகவே
வருதுன்பமானசுழியுஞ்சிறந்தமதியின்மையானதுறையும்
உரைதங்குகோபவளறுங்கவற்றியுறுலோபமானகுமிழும்
மருளென்றஞானவகலட்பரப்புமகராமிடங்கர்வகையும் (௰௯)

வளமானசத்துவமதாமரக்கலமுமேவிமிக்கமகிமேல்
அளவேதுமற்றபவசாகரத்திலமிழ்கின்றபேரையருளால்
துளவாணிமாத்ததொடைமீதுதும்பிசுழல்கின்றமவுலியவனே
களிகூறுமுத்தியடைவித்துநீடுகரையேற்றுவிக்குமெனவும் (௨௰)

அரிதானரத்தினமலையேறிஞோர்களவர்கட்கிசைந்தனவெலாம்
பரிவான்முகந்துகொடுபோய்விளங்குபடிபோலவித்தைபதியை
விரதோபவாசமதனுன்மகிழ்ச்சிவிளைவித்துநாலுவிதமாய்த்
தரைமேனிகழ்ந்தபுருடார்த்தராசிதனையன்பர்கொள்வரெனவும்(௨௧)

எரிகின்றவங்கிகுளிராக்குதட்டியிருளைத்துரத்திவெளிதே
உரைதங்குபாகவினையுஞ்செய்கின்றவுபகாரவற்கமதுபோல்
தருமஞ்சிறந்தபொருளின்பவீடுதமைநாடுமன்பர்பெறவே
அரியன்னதின்றபரவத்துநல்குமகிலத்தலத்திலெனவும் (௨௨)

மனலோபமோகமதனல்வினைந்துமகமேருவென்னவளரும்
வினைநீறதாகுமபிசாரமோடுமிகுபூதசங்கைமுதலாம்
கனதீமையாதுமனுகாதுசெய்யகமலத்துநாயர்கழன்மேல்
நினைவாகிவாழுமவர்கட்குவண்மைநிகழ்கின்றபாரிலெனவும் (௨௩)

துளவார்தொடைக்கண்வரிவண்டுகிண்டுசுடர்மோலிமாயனருளால்
ஒளிகூரும்யோகியர்கடங்குலத்துளுயர்வோர்களைம்பதின்மரும்
தளராவிதேகர்மரபுற்றபூமிதரர்மும்மையொன்பதின்மரும்
வளமானமுத்தியுலகத்தைநண்ணிமகிழ்வொன்றினார்களெனவும் (௨௪

இத்தாத்திரிக்குண்மிகவாணைபாழிபியல்விக்கநன்சொலெழிற்கூர்
தத்தாத்திரேயர்தமையாசரித்ததகுகாத்தவீரனெனவும்
நத்தார்க்குஞ்சேவலையுலகத்துமீதுநலமானகாமியமெலாம்
சித்தார்த்தமானபடிபெற்றவேந்துதிகழ்துந்துமாரனெனவும் (௨௫)

குணிமூற்கலன்னகுடனுதியார்கள்குறைவொன்றிலாததருமம்
துணிவுற்றதன்மபரிபாலனோடுசுமதிஞ்சையன்முதலினோர்
இணையற்றகாமபூமுதெய்தினார்களெழில்மேவர்லிசெய்துமகவான்
அணிசொற்கநாடரரசாயினுன்வியரியன்புதன்னிலெனவும் (௨௬)

நிகரற்றகொங்கைமிகையாரமேவிநிறைபாகமத்துயயிலை
தசவுற்றநாரதியமந்தவிண்டுதருமத்தின்மன்னுமறுபான்
நிஃழுத்தியாயமதனிற்றொடங்கியெழுபாமொட்டிதெனவே
தொகுமத்தியாயமளவுந்தொடர்ந்ததொடர்பின்னவாறுசொலுமால்,

எவ்வானவர்க்குமரசோடுநக்கனெழினுன்முகத்தன்முதலோர்
தவ்வாததங்கணிலைபெற்றதன்மைதகுமாலிடத்திலெனவும்
மெய்வாசுதேவனடிபேணுவார்கண்மிகுமுத்திசேர்வரெனவும்
ஐவேதமானமகபாரதத்திலனுசாதநீகமறையும் (௨௮)

நன்றானமோக்கதருமத்தினீடுநளினத்துநாபியவனே
குன்றாதமுத்திதருமற்றுமேளார்கள்கொடைகாமியத்தினளவே
என்றாதாத்தினுடனோதுநூல்களெவையுஞ்சொல்கின்றதிவையால்
மின்றாவும்நமியரிநல்குநாலுவிதசித்தியென்பதுளதே (௨௯)

### ௩-வது-பரமபதப்பரிச்சேதம்-

அதிசயமானசிவாகமமெல்லாமடைவுறத்தெளிந்தவாரணங்கே
சதுவிதபலமுமன்பருக்கருள்வான்றண்டுழாய்முகுந்தனென்பதற் [கு
முதுமொழிவேதபுராணசாத்திரமேமுதலவாநூல்களினாலே
இதமுறப்பிரமாணங்களைச்சிறிதிங்கியம்பினேனீதெலாநிற்க (௧)

விண்டுவினுலகேயுலகுகட்கெல்லாமேலதாமூலகமும்வேறு
தண்டலில்பரமபதமெனும்பெயராற்றழைப்பதுஞ்சந்ததானந்தம்
கொண்டுநித்தியசூரியரெலாம்வாழ்வுகூர்வதுமப்பிராகிதமாம்
எண்டகுமகிமையுடையதுமென்றிங்கியம்புவன்கேள்பிரமாணம் (௨)

வைத்தலையரவிற்றுயின்றிடும்பகவான்பரமமாய்மருவியபதந்தான்
எத்தனையுலகங்களுக்குமேலாகியிருக்குமென்பதனைநல்வியல்பால்
மொய்த்தசீரிருக்கிலாதியதாகமொழியுமட்டகததினிலிரண்டாம்
அத்தியாயத்திலேழதாம்வருக்கமதிலமேல்வெளிப்படவறையும் (௩)

ஆபசிரிருக்கிலட்டகமேழினைஞ்சதாமத்தியாயத்தில்
சேயசீர்வருக்கமிருபதோடெட்டாய்ச்சிறந்தபினின்றசேடத்தின்
மாயையாலுலகமனைத்தையுமயக்கிவளம்புனை மாதவப்பெயரான் [ம்
மேயசீர்ப்பரமபதமெனும்பெயரான்விளங்கியதென்பதும்விளங்கு

சுருதியவெசுருவேதத்திலாதிகாண்ட மூன்றும்பருச்சத்தில்
நிறைபெறுமனுவாகங்களோராறினித்தசூரியர்கள்சேவிப்ப
அருள்பொழிந்தருளாநின்றுகொண்டவரோடச் சுதானந்தன் வாழ்ய
பரமமாம்பதமென்றுரைக்குமங்கதுவும்பயிலுமந்தணர்க் [தத்தைப்
[கெலாம்பாடம் (௫)

அந்தவேதத்திலிரண்டதாங்காண்டத்தந்தமாகியவனுவாகத் [தால்
திந்துநேர்நுதலாய்முக்குணத்தியல்பாலெண்ணியபகுதியைக் கடந்
பந்தமாம்பாசபற்றலாமறுத்துப்பயின்றிடும்பரமஞானியர்தம்
சிந்தையாலயமாஞ்செங்கண்மாதவனூர்சிறந்தசீருல கெனச்செப்பும்

ஆமெசுவேதசாகையிலிரண்டாமட்டகத்தெட்டதாம்பருச்சத்
தேமவாடையனதிருக்கையைப்பரமமெனும்பெயர்வியோமமென்
திசைக்கும், தோமிலுத்தர நாராயணபுருடசூத்தமென்றிசைத்தவார
ணத்தும். நாமமால்பதமேபரமமாம்பதமாய்நலம்பெறுதன் மைமை
யநாட்டும் (௭)

ஓதியகீதசாமவேதத்திலுயர்ந்திடுமுத்தரவிருக்கின்
ம்மதகுமட்டாதசவத்தியாயமிகுமிரண்டானகாண்டத்தில் [ம்
மூதுரு னியராய்ப்பவத்தொடராறுத்துமுத்தரானவர்களுக் கெல்லா
பாதையாம்விண்டுபதத்தினைத்தானேபரமமாம்பதமெனப்பகரும் (௮)

மன்னியசெஞ்சொனரஞ்ஞபனிடமருவியமுதலனுவாகம் [பும்
மின்னியநெடுமால்பதந்தனைப்பரமவியோமவக்கரமெனவிளம் [பும்
இன்னவானமறைப்பொருட்கெல்லாமியைந்திடப்பஞ்சராத்திரத்
அன்னெடுமாயன்வாழ்பெரும்பகுதிக்கப்புறத்துல கெனவிசைக்கும்

மருவுமப்பஞ்சராத்திரந்தன்னின்மன்னியபரமசங்கிதையில்
விரவியவண்டகோளகைக்கப்பால்வெள்ளநீர்வெள்ளநீர்க்கப்பால்
பரவியவொளியவ்வொளிதனக்கப்பாற்பவனனப்பவனனுக்கப்பால்
சுருகியவிசும்புவிசும்பினுக்கப்பாற்கனமதாகியவகங்காரம் (௰)

புலமையாங்காரமாமதற்கப்பாற்புத்திபுத்திக்குமேலாக
அலகிலவ்வியத்தமவ்வியத்தத்துக்கடுத்திடுமப்புறமாக
உலககாரணனுயுலகினையெலாமுண்டுமிழ்ந்துத்தரித்தளந்த
நிலைமைசேர்மகிமைவாசுதேவன்றனிவாசமாமுலகெனநிகழ்த்தும்
(௰௧)

வெற்றிசேரிராமகாதையாகியவான்மீகராமாயணமதனில்
உற்றவாரணியமானகாண்டத்திலுவணவாகனத்திருனுலகம்(கைத்தாய்
குற்றமொன்றிலாதாய்ப்புத்தியின்மேலாய்க்குறைவறநிறைந்தசொல்
நற்றுதற்கரிதாய்நித்தமாய்ப்பரமானந்தமாம்விசும்பெனநவிலும் ()

கூறியசைவபுராணமூவிகுவைகுந்தமென்றுயர்பெயருடைத்தாய்
வீறியல்பரமபதத்தினிற்கமலவேதிகைத்திருவொடுமேவி
ஆறியகுணப்பாகவதர்சேவிப்பவச்சுதனுகியமூர்த்தி
ஈறிலாப்பரமானந்தவைபவமாயினிதிருந்திடுமெனவிளைக்கும்(௰௩)

தனைநிகரில்லாத்தனஞ்சயன்றனக்குச்சங்கமுந்திகிரியுந்தரித்தோன்
எனையறிந்தெனையேயுபாசனைசெய்திட்டென்னருட்பெருமையால்வ
னதாம்,புனிதலோகத்தையடைந்தவர்மீளப்புவன்மேற்பிறந்திடாரெ
ன்றும்,நினைவுடன்படுமாறுரைத்ததுநிகழ்த்துநீடியபாரதகீதை (௰௪

பங்கயநாபன்மாலியற்பதமேபரமமாம்பதமெனுந்தன்மைக்
கிங்குமேவதபுராணப்பிரமாணமியல்புறச்சிறிதிசைவிசைத்தேன்
அங்கவனுக்குநிவேதிதமானவன்னபானுதிகளவையே
துங்கமாமுத்திக்கேதுவென்பதற்குச்சொல்லுவன்கேள்பிரமாணம்()

௪-வது தீர்த்தப்பிரசாதவைபவப்பரிச்சேதம்.

இத்தலம்புகழிருக்குமாமறையிலெண்ணுமட்டகமிரண்டினீ
டத்தியாயவுயயத்தில்வர்க்கமறுநான்கிலாழிவளையங்கைமேல்
வைத்தமாதவனிவேதனந்தனைமகிழ்ச்சியானுகருவாரெலாம்
நித்தராயவனையேயடைந்துநிலைநிற்பரொன்பதுநிகழ்த்துமே (௧)

வண்டுலாவுமலர்நாபியான்மறைவகுத்தபூசனைமகிழ்ந்துகைக்
கொண்டபின்களையுமாலைசேலைநறைகுங்குமங்களபமோதனம்
தண்டுழாய்மருவுபாததீர்த்தமிவைதமையுகந்தவர்கடவறிலா
விண்டுலோகமடைவார்களென்னவெசுவேதவாரணம்விளம்புமே (௨)

மின்னனையனையதன்றியந்தவெசுவேதசாகையிலிரண்டதாய்
மன்னுமட்டகமதிற்பருச்சமொருநாலிலாகுமனுவாகமா
றென்னநின்றதனின்மானிவேதிதமியைந்தவன்பினொடு நுகருவார்
பன்னுநீள்பரமன்மன்னுமப்பதவிபயில்வரொன்றுமதுபகருமே(௩)

வண்டுபாடிமூரல்புண்டரீகமலர்மங்கைமேவுமணிமார்பினன்
உண்டமெல்லடிசிலுண்டுடுத்தனவுடுத்துயிர்த்தவையுயிர்த்தவன்
தொண்டராய்மகிழ்வார்க்குமுத்தி பதசுகமநித்தமறவெய்துமென்
றண்டர்தெள்ளமுதமொத்தமென்குதலையாய்விளம் புமறையதறுவம்

உரைத்தவிப்பெருமறைத்திறப்பொருளையொக்கமாதவனுகர்ந்த தா
திருத்தமாமடிசிலைப்புதுகாலையெதிர்சென்றுபண்பொடுசிரத்தி [ம்
தரித்துவாங்கியிதுபஞ்சவாகுதிசமற்பணத்திசெயறகவெனு [றுல்
விரித்துரைத்ததுபரத்துவாசனெனும்விரதி சொன்னதொருமிருதி
[யே (௫)

மைத்தமேனிநெடுமான்மறைப்படிவகுத்தபூசையினுகந்ததே
சுத்தமன்னமெனவேதமானதுசொலிற்சுகித்துவமதுடையதாம்
சத்ததானகுணமிக்கஞானமுயர்தருமசிந்தனைதவங்கடாம்
மெய்த்தசீர்பரவுசத்தமோதனம்விளைக்குமேதினியிலென்னவும் (௬)

ஆசைலோபம்வெகுமோகமன்னியமதானதாரமொடு பொருளினுத்
தேசம்வெங்கொலைமறப்புநித்திரைதிருட்டெனப்படுதிறங்கடாம்
வீசுசத்தியுறுமோதனந்தனைவிரும்பினால்விளையுமென்னவும்
காசினிக்குரைசெய்யுஞானியர்கள்கருதுசாண்டிலியமிருதியே (௭)

மதியிலச்சுதனதுருவமுந்திகழும்வாசகத்திலவனாமமும்
உதரமூடவனுகர்ந்தபோனகமுமொண்டுழாய்மருவுதீர்த்தமும்
முதிருமன்பொடுசிரத்திலங்கவன்முடித்தொழித்ததிருமாலையும்
பதிவுறும்படிதரிக்கவல்லவர்கள்பரமபாகவதரென்னவும் (௮)

வேறு

தாதாருமாலைநெடுமாலுகந்துதருமன்னபானநுகரா
தேமேதனுமொன்றைநுகர்வானொருத்தனெளிதாகவந்த வெழில்சேர்
தூப்தானதெய்வமணியைத்துறந்துதொடவுஞ்சுகித்துவமிலாக்
கோதானமோடுபொருளாகவெண்ணுகுணகீனனாக்குமெனவும் (௯)

மருமன்னுதாமநெடுமால்பதத்தின்மனமன்புமேவுமவர்சூத்
திரரன்றுபாகவதர்நீதிமேன்மைசெலுமந்தணாளரெனவும்
உரைதங்குவேதகுலரானபோதுமுயர்மால்பதத்திலுறவைப்
பிரிநெஞ்சர்சூத்திரர்களென்னவுஞ்சொல்பிரமாண்டமோதியிடுமே ()

வேறு

மாதவன்கழித்தமாலிகைகளபம்வத்திரமணிகளாபரணம்
பாததீர்த்தம்போனகமிவையெல்லாம்பரிவிலங்கீகரித்திடுவோர்
ஓதுசீர்ந்தமாதவன்மாயைக்குட்படாதவையெலாங்கடந்து
நீதிகூர்முத்தியடைகுவரொன்றுநிகழ்த்திடுநீடுபாகவதம் (௰௧)

நாரணன்வடிவைமனத்தினினைந்துநாமத்தைவாக்கினுச்சரித்துச்
சீரணிபிரசாதத்தினைநுகர்ந்துதீர்த்தமுண்டுஞ்சிரந்தெளித்தும்
நேரிலாவவன்றனுவணமாவார்நிலைபெறுமுத்தர்களென்றும்
வேரியங்குழலாய்நிச்சயமாகமிருதிசங்கிதையினில்விளம்பும் (௰௨)

மற்றுளதேவர்நுகர்ந்தவைபருந்தாமாந்தர்மேன்மாதவன்மகிழ்ச்சி
உற்றிடுமென்றுமாழிமாமாயனுகந்தவைநுகர்ந்திடுவோர்க்கு
நற்றவஞ்சாந்திராயணஞ்சதங்கண்டத்தியபலமுமாயிரமாம் [ம்
வெற்றியச்சுவமேதஞ்செயும்பலமும்விளைந்திடுமென்னும்வாய்மைய

என்னடியவராயென்னையேபுகழ்ந்திட்டென்பொருட்டாகவேதித்து
மன்னுமான்மாவைச்சமர்ப்பணஞ்செய்யுமகிமைசேர்பாகவதற்குத்
தன்னிகரில்லாச்சேனைகாவலவன்றனருட்பிரசாதமுநுகர்தல்
நன்னெறியென்றுமானுளாத்ததனைநவின்றிடுபௌடிகபுராணம் ()

மாயவன்பிரசாதத்தினைநுகர்தன்மற்றவன்மலரடிவிளக்கும்
தோயமுட்கோடல்புறத்தினிற்றெளித்தல்சொல்லுமிங்கிவைகளொ
ன்றொன்றே - ஆயபாதகங்களகற்றிடுமென்றுமவன்பதத்திழிந்தபு
ண்ணியத்தால்- மெயநீர்க்கங்கைபடிந்தவர்க்கெல்லாம்வினைகளைகின்
றதேயென்றும் (௰௫)

தேவதேவானநாரணன்பாததீர்த்தநுண்டிவலையாற்சமிக்கும்
மூவகைத்தாபமவன்கடலேழமூழ்கினுஞ்சமித்திடாதென்றும்
மேவுமங்கதுவுமனந்தமாம்பலத்தைவிளைப்பதும்வேறிலையென்றும்
தூவடிவேற்கண்ணாயரிபத்திசுகோதயநூலினிற்சொல்லும் (௰௬)

நாலுசாதியினுமன்பரானோர்கணாரணனுகர்ந்தபோனகத்தை [தும்
மாலையைப்பாதம்விளக்கியபுனலைமதிப்பொடுகொண்டுமேற்றெளித்
சாலநீடியதம்பாதகந்தொலைத்துத்தபோதனராவர்களென்று
வேலைநேர்விழியாய்விளங்கியபரமேச்சுவரசங்கிதையினில்விளம்பும்

மைக்கடற்குவமையாகியமேனிமானுகர்ந்தனநுகர்ந்தவருக்
கக்கினிட்டோமமாயிரம்பலமுமாயிரவாசபேயப்பலமும்
தக்கவச்சுவமேதச்சகத்திரமுந்தரும்பலனெய்திடுமென்று
மிக்கபார்புகழுநாரதீயத்தில்விண்டுதத்துவம்விளம்பிடுமால் (௰௮)

நாரணன்பிரசாதத்தினையொருவனல்கினனாகின்மற்றொருவன்
ஏரணிவிரதநீடுபவாதமென்றதைக்கொண்டிலனாகில் [ன்
தாரணிமன்மற்றவன்பொசிப்பதெலாந்தான்சுராபானமாத்திரமெ
றாரீதமிருதிபாருலகுள்ளோரறிந்திடும்படிவிளம்பிடுமால் (௰௯)

மாதவன்விம்பமின்றியமனையேமசானமற்றவன்றிருநாமம்
ஓதிடாவாய்மையேயாரியின்கூட்டிடுகந்தவனுகர்ந்திடாவுண்டி
ஆதரிப்பதும்வெநஞ்சவன்றனக்காளலாதவர்தாந்திரிபிணமென்
றதமில்பரத்துவாசமாமுனிவனியம்புசங்கிதையினிலிசைக்கும். ()

பதுமநாபியினனுகர்ந்தவை நுகர்ந்தாற்பாதகநாசமாமென்றும்
இதரதேவதைநின்மாலியம்பொசித்தாலிலகுசாந்திராயணவிரதம்
விதியினுற்சரிக்கவேண்டுவதென்றும்விண்டுவுச்சிட்டத்தை யிசந்ந்
தால், மதியிலாச்சுவானப்பிறப்புறுமென்றும்வசிட்டசங்கிதை வகுத்
துரைக்கும். (உக)

ஆடையாபரணஞ்சந்தனமாலையன்னபானாதிகளெல்லாம்
நீடிசீர்பரவுநாரணன்றனக்குநிலைபெறநிவேதனஞ்செய்தே
கூடியவிதெலாந்தான்விநியோகங்கொள்வதுநீதியென்றியல்பால்
தோடுசேர்குழையாய்நாடுபோற்றியசாத்துவிதசங்கிதை யினிற்சொ
[ல்லும் (உஉ)

கந்தமேவள்பிதாவைக்கண்ணுதலோனைக்கமலனைபணிந்துகைகூப்பி
எந்தையுன்னின்மாலியங்களைத்தொடவுமியல்பலவென்றனை மீண்டு
ம், பைந்துழாய்மாயனுகர்ந்தொழித்தவெலாம்பவித்திரமென்றமே
னென்றான், மைந்தமேளருகமல்லவென்றதெலாம் வகுத்துரைக்கின்
றனமென்றும். (உங)

சைவபாசுபதசம்பிரதாயந்தன்னினின்மாலியமெல்லாம்
எவ்வெவர்கொடுத்தாரெவ்வெவர்கொண்டாரித்திறத்தவரவருடனே
கவ்வைகூர்பிறப்பிற்கவிழுவரொன்றுங்கண்ணனார் நுகர்ந்தொழித்த
வெலாம், கவ்வுதலன்றியொழித்தவர் தொடாதார்மருவுவர் பாதக
[மென்றும்(உச)

மாதவன்பிரசாதம்பொசித்தவர்க்குவளர்ந்திடும்புண்ணியமென்றும்
பாதகமெல்லாநாசமாமென்றும் பணைத்திடுந்தானதன்மங்கள்
தீதறுமநேகவேள்விகள்செய்தசெழும்பலன்சித்தியாமென்றும்
மாதுபாகத்தான்சொல்லியதீச்சுவரமகாசங்கிதைவழங்கும் (உரு)

அமைநிசர்தோளாயின்னுமோர்கதைகேளந்தமாநந்திவாகனனை
உமையவள்பணிந்துமால்பிரசாதத்துண்மையிங்குனாத்தருளென்ன
இமையவர்பெருமானந்தவம்பிகையையின்னருளான்முகநோக்கிக்
கமலவாண்முகத்தாய்கேட்டியாலென்றுகருத்துறக்கட்டுரை செய்வா
[ன்(உசு)

பாரளந்தார்க்குநிவேதிதஞ்செய்தபலபொருளும்பவித்திரமே
தாரணிமீதங்கவையொருக்காலுந்தவிர்த்திடப்படுமவையன்று
சீருறவவற்றைநுகர்ந்தவர்தமக்குத்திருவருடிரமுறத்தழைக்கும்
வாரணிவிரதோவாசமேன்மையினுலியைந்திடும்பலமெலாமெய்தும்

தேவர்காரியமும்பிதருகாரியமுஞ்செங்கண்மானிவேதி தங்கொண்
பூவுலகத்திற்செய்தடிலந்தப்புண்ணியமெய்திடுமென்றும் [டே
மேமவுமின்னிவேதிதத்தினற்பிண்டவிதிமுறைசெய்தவைதிகரும்
தாவிலாவந்தப்பிதுருவர்க்கமுமேசந்ததானந்தமாய்த்தழைக்கும் ()

உன்னருஞ்சாளக்கிராமதீர்த்தத்திலோர்சிறுதுளிநுகர்ந்தாலும் [தம்
அன்னைதன்முலைப்பால்பின்னைவந்தருந்தானவனடைந்திடும் பரமப
டன்னுமந்நெடுமால்பாததீர்த்தந்தான்பாதகமெனவரும் படையா
தின்னமாகாதவண்ணமேனிக்குச்செறிந்திடுங்கவசவச்சிராங்கி. [ல்

விஞ்சுமந்நெடுமால்சரணபுண்டரிகம்விளக்குதீர்த்தம் பொசித்தவ
பஞ்சகவ்வியத்தின்பாராசனவிரதம்பத்துநூறிடெனப்படுமோ[ர்க்கு
வஞ்சிமெல்லிடையாயின்னனவெல்லாம்வளம்பெறுபதுமமாம்புரா
ணம், செஞ்சொலால்விளங்குமுத்தரகாண்டந்தெளிவுறவிளம்பிடுஞ்
செகத்தில். (௫௰)

கிள்ளைநேர்மொழியாயுரைத்தவிம்மட்டோகிளர்குருக்கேத்திரத் தல
த்தில், துள்ளுநீர்க்கேதாரத்தினிற்கங்காதுவாரத்தினீல்மால் வரை
தென்றுநவில்லுவத்திலச்சுவமேதமகத்தினிற்சிலாவருத்தத்தில் [யில்
ஒள்ளியகங்காசாகரத்துறையிலுத்தமமானசத்தடத்தில் (௫௧)

சென்றுதீர்த்தங்களாடியபலமுந்திரம்பெறுமக்கினிட்டோமம்
நன்றுசீர்ராசசூயபுண்டரிகத்தோடச்சுவமேதத்தின்பலமும்
வென்றிமால்பாததீர்த்ததாரணத்தால்விளைவுறவிளைந்திடுமென்றும்
பொன்றுநாளதனைநுகர்ந்தவர்தாமும்புனிதராய்விளங்குவரென்றும்

போக்கலாநெறியிற்போயினருலகிற்பொசித்திடாவுண்டியைப்பொ
சித்தார், தேக்கலாப்பானந்தேக்கினர்நெடுநாடேடிய பாதகமெல்
லாம், மேக்குயர்பரமபதத்தினனிருதாள்விளக்கியதீர்த்த நல்லிலை
யை, நாக்கினலருந்தப்பெறிற்கணப்பொழுதினசமாயொழிந்திடு
மென்றும், (௫௨)

இரமமாந்தருப்பைக்கூர்ச்சநற்பஞ்சகெவ்வியபாராசனவிரதம்
திரமிகும்பராகமாதியாம்பிராயச்சித்தமாதரிப்பதுதனிலும்
விரவுசீர்நெடுமாதிருவடித்தீர்த்தம்விரும்பிடில்விசேடமாமெனவும்
மருமலர்க்குழலாயுரைத்ததுபாரோர்மதித்திடும்பிரமகைவர்த்தம். ௫௩

நீண்டபாம்பணையிற்றுயிலுவோன்றனக்குநிவேதிதமான வோதனத்
காண்டகும்பிராணவாகுதிமுதலாங்கருதியவாகுதியைந்தும் [தால்
ஈண்டியவிதியாற்செய்யவேதிரமாமென்றிடுமிப்பிரமாணம்
பாண்டவர்காதையோககாண்டத்திற்பண்புறப்பகர்ந்திடுமென்றே ()

துனிபறுவேள்விச் சோமபானத்தின்சுவையருந்தந் தணர்தமைப்
வனசநாபனுக்குநிவேதிதமாகவைத்திடுமன்னபானத்தி [பால்
தனைநுகர்ந்தவர்க்குந்தகைமைசேர்சுத்தாசமானியம்வண்டுலவுங்கு
ழலாய் எனவுரைசெய்யுமவனியோர்மதித்தவெழில்புனைவராகமாபுராணம் ()

பரமமானிவேதிதங்களப்படியேபவித்திரமாகையாலன்றோ
அரியவத்திருமால்பூசைமுற்றியபினருச்சகரளித்திடும்பலியை
விரவுசீர்ப்பலியம்பரிடனக்குரூரன்வீட்டுமன்வீடணன்சனகன்
திரமிகுஞ்சேனாபதிமுதலினருஞ்சிவனுமங்கீகரிக்கின்றார். (௩௭

நிலைபெறவிவ்வாறுரைத்தசெஞ்சொற்குநிகழ்பிரமாணமேதென்னில்
தொலைவிலாப்பரத்துவாசசங்கிதையிற்சொல்லுமச்சுலோகமும் ...
ருளும், !உலககாரணனாரணனென்றன்னையுகட்பிலுலருச்சனைசெய்யும்
அலகிலாமாயாவாதியர்தம்மோடந்தணர்க்கெலாமநுட்டானம் (௩௮)

## ௫-வதுவேதவியாதர்சத்தியப்பரிச்சேதம்,

என்பனவெல்லாமடைவுகுன்றாமலியல்புடனெடுத்திசைவித்து
மின்பொலிமணிப்பூண்வேதமாமடந்தை மீளவுஞ்சிலமொழிவிரிப்
பாள்- பொன்பொலிமெய்யாய்மாலிலாஞ்சனையாய்ப்பொலியுநீள்பு
ண்டரந்தானே- அன்பொடுதரிப்பதற்குமவதவிதியாகியபுண்டரமெ
[ன்றும் (௧)

அன்னவன்றிகிரிக்குறிதரிப்பதுவேயனைவருக்கும்விதியென்றும்
மன்னுமற்றவன்றனிரண்டெழுத்தேவைதிகமந்திரமென்றும்
பின்னையங்கவனாராதனைமேன்மைப்பேறெலாமளித்திடுமென்றும்
பன்னுசீதரன்றனுலகினைத்தானேபரமமாகியபதமென்றும் (௨)

பாரின்மேலவன்றன்பாததீர்த்தத்தைப்பரமமாம்பவித்திரமென்றும்
நேரிலாவேதபுராணசாத்திரங்கணிச்சயித்திருக்கையாலன்றோ [ம்
காரொலாம்படைத்தகவினெலாங்கவர்ந்துகடிமலர்க்கண்ணியால் விளங்
கும்-வேரிசேர்குழலாயித்தலம்புகழும்வியாதமாமுனிவரென்பார்

வேதசாத்திரங்களாகியவெல்லாமீளவுமீளவும்பார்த்துச் [ம்
சோதனைசெய்தேனீதொருபொருளேதோன்றியநற்பொருளனவு
ஏதெனவந்தப்பரமமாம்பொருளையியல்புறவிசைத்திடும்பொழுது
தீதிலாநாராயணன்றனைத்தியானஞ்செய்வதேயென்னவுஞ்செப்பி (௪

வையகத்தெவருங்கண்டுதேறத்தன்வலக்கையைவானுறநீட்டி
ஐயமற்றிருகாலாவதுமுக்காலாவதுஞ்சத்தியமிதுவே
மெய்யுரைச்சுருதிதன்னிலும்பெரிதாய்விளங்குசாத்திரங்களுமில்லை
செய்யகேசவனுக்கதிகமாய்நின்றதெய்வமுமில்லையென்றிசைத்தார்

இன்னதன்மையினுரைத்தவாசகத்தையெழிற்பிரமாண்டமாம்புரா
ணம்- தன்னிலும்வேதமைந்தெனவிளங்கித்தழைத்தபாண்டவர்கள்கா
தையினுள் - பன்னுசீருலகம்பாடமதாகப்பண்டரப்பகருமென்றிட
லும்- அன்னமென்னடையாளாகம வல்லியுவ்வுறாக் குத்தரமறை
[வாள் (௬)

வேதமாமடந்தாயப்படிபகர்ந்தவியாசருக்கவ்வியாசத்தால் [ச்
ஓதறும்புயத்தம்பனம்விளைந்ததெனவுலகினிலுரைப்பதேனென்ன
சீதளக்குமுதச்செவ்விதழ்மேனித்திலம்பதித்தெனத்கைசிறப்பக்
கோதறுசைவாகமமடந்தையுடன்குளிர்மறைக்கோமளங்கூறும் (எ)

மங்குனேர்குழலாய்சிவசமயத்தோர்மாச்சரியத்தினாற்சூத
சங்கிதையென்றோர்கற்பனாகதையைச்சாற்றியதன்மையே போல
இங்கிதுதனையும்பொருமையினாலேயியம்புகின்றோர்களத்தனேயே
அங்கதெப்படியேயென்னிலும்மனமொப்பாமெனும்படிவிளம்ப
க்கேள் (அ)

மெய்ப்பொருண்மறைகொண்டரிபரத்துவநான் விளம்பியேவருகை
யினாலும், இப்பாருடனேயமுன்னமேவியாதரியம்பியதாகையினா
லும். அப்பெருவியாதர்மறையெலாம் பிறித்தாராய்ந்தவராகையி
னாலும்-செப்பியபுயத்தம்பனமவரிடத்திற்செறிந்ததேயெனலசத்தி
யமே (௯)

அன்றியிப்படிநீபகர்ந்திடுமிடத்திலரியையேபரத்துவமென்று
நின்றுகூறியவேதப்புருடனுக்குநீடுபற்பலபுராணத்தோ
டொன்றியபாரதாதிகடம்மிலுரைத்திடுமுமாபதிதனக்கும்
துன்றுசீர்ப்பிரமாண்டாதியிற்சொன்னதுங்கமாமலரயனுக்கும் (௰)

வண்டமர்குழலாய்சொன்னவிதன்றிமாயனேபரத்துவமென்று
பண்டுவிண்டுபுராணத்தினிலுரைத்தபராசரருக்குநீடன்பு [ம்
கொண்டுபாகவதத்துரைத்திடுஞ்சுகர்க்குங் கூறுநாரதியமாம்புராண
கண்டநாரதற்குமாரதர்க்கொத்தகளங்கமின்மனுமுதலோர்க்கும் (௰௧)

இங்கிவருடனேமுனிவர்களநேகரிதரனாப்பரத்துவமன்றென்
றங்கமலக்கண்மாயனேபரமென்றறிந்துநிச்சயித்தவர்க்கெல்லாம்
தங்கியவாக்குத்தப்பியாதமையாற்சாற்றியவந்தவாசகந்தான்
திங்கணேர்முகத்தாய்சிவாகமமானேசெப்பிடலப்பிரமாணம் (௰௨)

இந்நூனேர்நுதலாயின்னமுநானொன்றியம்புவன்கேளலகில்லா
அந்தம்வேதவியாதரை மதிப்புடனேயனைத்தறிவுடைய னென்பதுவு
ம்- புந்தியாலவர்தாநிச்சயித்துரைத்த பொருள் பரமார்த்தமென்ப
துவும்- சந்ததமவனேமாறுபாவனெனுந்த ன்மையுந்தனையின்மேல்
விளங்க (௰௩)

ஈதலாலின்னுமொன்றுகேண்மானேயிலங்கெசுவேதவாரணத்தில்
ஆதியாம்பருச்சத்தினிலனுவாகமைந்தின்மேனலதாமதனில்
மேதைகூரந்தப்பராசரசுதனைமெய்ம்மொழியாளனென்கையினால்
ஓதுமம்மறைக்குமாறுபாடானவுரையெலாமவைதிகந்தாமே (௰௪)

வைதீகதிருவாராதனைப்படலம்முற்றும்ஆ திருவிருத்தம்-௩௩௯

அரிதாசர்திருவடிகளேசரணம.

# வேதவிரோதநூல்வர்க்க கண்டனப்படலம்.

### க-வது - சைவசகளநிட்கள விசேடப்பரிச்சேதம்.

என்றுநால்வேத மடந்தைகூறுத லுமெழிற்சிவாகமமயிலுரைப்பாள்,
குன்றுநேர்முலையா யிவையெலாம் வேதங்கொண்டுநீயுத்தரங்கொடுத்
தாய், துன்றுசீர்மறைகள் சிவனதுமகிமை சொல்வதுமே யுரைக்கி
ன்றேன், நன்றிகூர் மறைக்கு நிகர்க்குமாகமங்க ணவின்றதுமுந்தவு
நவின்றேன். (க)

பணிக்கருங்குழலா யின்னமுஞ்சிவனே பரனென வாகமத்தாற்போ,
தனைப்படவுரைப்பேன் படைக்குதலளித்தல் சங்கரிக்குதறிரோதான
ம், அனுக்கிரகங்களாங் கிருத்திய மைந்தினுக் கதிகாரராயயன் மால்
மணக்கமழுங் கோப வுருத்திரமூர்த்தி மயேச்சுரன் சதாசிவ னென்ன.

பொரிணைப்படைத்துக்கடிந் திடும்பஞ்சப் பிரமமாய்விளங்கிய சிவ
னுக், கயர்வற நின்ற சுத்தமா யாமெய் யசுத்தமாயா வுருவென்ன,
இயல்பெறு சரீரமிரண்டிவற்றயன்மாலென்பவ ரசுத்தமாயாமெய்,
துயரறுமற்றைச்சரீரமாமூன்றுஞ் சுத்தமாயாசரீரங்கள். (உ)

பற்றறுசுத்தமாயையாஞ்சரீரம் படங்குடி லானதுபோல
மற்றவனுடலாய் விகார மல்லாமன் மறுவறு நித்தமாய்விளங்கும்.
சொற்றருஞ்சுத்தமசுத்தமாயையினாற் றுளபமாலயனெனுஞ்சரீரம்,
வெற்றிவேல்விழியா யநித்தமிங்கிதெலா மிகுஞ் சிவாகமஞ் சொல்சித்
தாந்தம். (ங)

### உ-வது- சகளநிட்களகண்டனப்பரிச்சேதம்.

இன்னவாறுரைக்குஞ் சிவாகமப்பெருமையியல்பை நீயறிந்திடாமை
யினால், சொன்னதத்தனையே யென்ன வாரணப் பொற் றொகையுந்
தொகுத்துரைசெய்வாள், அன்னமே வேத விருத்தமென்றறியா யா
கம மாகமமென்றே, பன்னுகின்றனையவ் வாகமந்தனையே பற்றிநீ
யுரைத்திடு மிடத்தில். (க)

சாற்றுயர்சத்தி யந்தவைம்மூர்த்தி சவத்தின்மேனடித்திடுமென்றும்,
எத்துமச்சத்தி பரப்பிரமத்துக் கேற்றமா யிருந்திடு மென்றும்,
வாய்த்தவிச்செகத்தின்றோற்றமோ டொடுக்க மற்றவளிடத்திலே யெ
ன்றும், ஆர்த்தமாம்புவிக்குத் தாரமுந்தாயு மங்கவளென்றுமோ து
வதும். (உ)

உண்டதேயுறுதி மாதரார்கலவி யுகவையே முத்தியிவ்வுலகில்
கண்டதேகாட்சிபரத்தையாரறிவார்காயமுஞ்சீவனும்வேறு
வேண்டியேமாபனுந்தவவிரதமெலாமேனியையொறுப்பதென்
ன,எண்டகுமுலோகாயுதமதத்தவர்க ளிகத்தையேயுறுதிசைப்பது
வும். (ங)

பொங்குநால்முகத்குப் படைத்திடுந்தொழிலைப் பூட்டியிப்புவியெ லாங்காத்தல், செங்கண்மாயவற்குச்செய்கையாய்வகுத்துச் சிதைப்ப து சிவன்பணியாக்கித், துங்கமாங்கருமஞ்சூழ்ந்துகொண்டுள்ளந்தொ லைப்பருங்கன்ம பாசத்தைத், தங்கணுயகனைகடந்தவனென்னுஞ் சாக் கிய சமணர்கண்மதமும். (௪)

வையமேன் மற்றும்வேதபாகியர்கள் வல்லவாறுரைக்குமதெல்லாம் மெய்யெனக்கொள்ளவேண்டியேவிடாதோ மின்னிடையாயிவைநிற் கப், பையராவணியும் பண்ணவன்பாவை பங்கனும்பசுபதிபகர்ந்த, செய்யவாகமத்தின் றுணிபொருளெல்லாஞ் செப்புவல் சிந்தையுட் கொள்ளாய். (௫)

சுருதியந்தரத்திற்கற்பனமான சுரையிலாச்சிவாகமமெல்லாம் விரவுசீரநாதிவேதநூலுடனே விரோதமற்றிருந்திட லன்றே சுரிகருங்குழலாயிங்குநீவிரித்துச் சொல்லிய சைவசித்தாந்தப் பெருமைகளெல்லாமிருமைசேருலகிற்பெறும்பிரமாணமதாகும் (௬)

அனையவாகமங்களாரணப்புகலுமகிலகாரணனவனுன புனிதநாரணனைப் பரமனன்றென்றும் பொங்குசீ ரிந்தவேதத்தின் இனியவாய்மையினுற் காரியர்தமக்கு ளிசைத்திடுமிந்துவேணியனைத் சுதனைநிகரில்லாப்பராபரனென்றுந்தலைமயக்கிச்சொலலாலும். (௭)

ஒன்றெனுஞ்சடையுங்கபாலமுஞ்சவநீறுடனுருத்திராக்ககங்கணமும் புன்மொழின்மகார பஞ்சகமென்னப் புகன்றிடுந் திட்சைகளோந்தும் கன்றிகைசங்கங் குண்டலநீறு கனசிகாமணியுபவீதம் என்றமுத்திரையோராறுமாய்வேதத்தி லாதெலா மிசைத்திடலாலும்.

போற்றியவாமம்வயிரவங்கவுளம் புகன்றவைகாளிகஞ்சைவம் ஏற்றமாகியகாளாமுகம்விர மிலாகுளமிவைமுதலாகத் தோற்றுமாகமங்க ளப்பிரமாணஞ் சொல்லுமென்றேனையாகமங்கள், சாற்றியேவிரோதமொன்றினுக்கொன்றுதனித்தனிச்சொல்லுகையா லும் (௮)

பகருமுத்திரிகாசடதமுமகார பஞ்சகத்தின்பரமார்த்தத் தகுதியுமுணர்ந் திமோனிபீடத்திற் சந்ததானந்தனு யிருக்கும் மகிமைசேரிலிங்கமூர்த்தியை நினைந்துமகிழ்வதேவீடெனவுரைக்கும் தகைமையினுலுமிதிற்சுராகும்ப தாபனஞ்சொல்லுகையாலும் (௯)

மிக்ககாபால விரதமென்றதற்கு விளங்கியபே ரிடலாலும் துக்ககாபால விரதியேயொழுக்கந் தவறிலாச்சற்பிராமணனும் மெய்க்கசன்னசியுமென்றுவேதத்திற்சொலாதெலாஞ்சொல்லுகையா லும், அக்காரவணியுமனைத்தமோகனமாமாகமமப்பிரமாணம் (௧௰)

# வேதவிரோதநூல்வர்க்கசண்டனப் ௫௫ படலம்.

இன்னுமாகமங்களப்பிரமாணமென்பதுதனையியம்பக்கேள்
பின்னிகரிடையாயுங்கள்வைராக்கியவீரமாயேச்சுரசமயம்
தன்னினுங்கவுளாகமத்தினுந்தேவி சக்கரவேதவிதாளம்
மன்னு நூறனினுஞ்சிவரகசியத்து மிலங்கியபரமாராசியத்தும் (௰௨)

மச்சியமாங்கமுத்திரையதுவு மகாரத்தின்மற்றுமொன்றாக
நிச்சயமகாரபஞ்சகந்துய்க்குநிலைமையேமுத்திரையென்றும்
அச்சிவலிங்கார்ச்சனைசெயும் பொழுதா னந்தமாமது விளைக்கொண்
டே, இச்சையாலபிடேகஞ் செயிலது நூறியாகப்பேட் டிடும்பலமெ
ன்றும். (௰௩)

இம்முறைமையினுலாசரிப்பவனே யீறிலாமயேச்சுர னென்றும்
ஐம்முகனவனுக் கைம்புலனென்று மருளொடுசங்கராசிரியர்
செம்மையிலிதனைச்சாரத்தத்துவ நூல் செய்தனரொன்றுமச்சிவனே
மெய்ம்மலரவன்சேயான்மயோகிக்கு விருப்புறப்பகர்ந்தனரென்று
ம். (௰௪)

சங்கமர்தாமே யிலிங்கமதென்று மிலிங்கமே சங்கமமென்றும்
பொங்கியவீர சங்கம ரிலிங்க பூசனைசெய்திடும் பொழுது
தங்களாசாரங்குருக்கள்பாதத்தை விளங்குநீர்தனை யிலிங்கத்தின்
மங்கலாபிடேகஞ்செயவியல்பென்றும்வகுத்துரைத்ததேயநாசாரம்.

ஆகமமெல்லா மின்னமுமாமே யப்பிரமாண மென்பதனை
நீகுறிக்கொளக்கேண்மலைமகடன்னை நெற்றியங்கண்ணிறைபார்த்து
ப், பாகுநேர்மொழியாய்விரித்திடும்பாசுபதாதிசாத்திரந்தனையசுர
மோகனமாகச்செய்தனமதெலாமுத்தரால்வழிபடப்படாதே (௰௫)

ஏயசாத்திரமுஞ்சைவமேபாசு பதமெனவிருக்குமங்கதுவும்
ஆயவைவேதவிருத்தமேசிறிதிங் கதனிலாசாரமும்போலத்
தோயறிவிதெலாமிக்கபாடண்டத்தொகையிலோர்வழிபடுந்துறையா
ம், மேயபாடண்டர்தாங்களுமிரண்டுவிதங்களாய்விளம்பிடப்படுவார்.

தாலமெண்ணியசொற் கோதமன்சபிக்கச் சாபமே படைத்தவர் சில
பேர், வாலகில்லியரவ்விருதிறத்தோரு மாலையர்ச்சனைசெயமதியார்,
மேலுமங்கவர்தாம்புண்ணியமார்க்கவிரோதராயெழின்மறைவிரோத
நூலையேயோதியவர்கள்சந்ததமு நொய்யவரோடலாதிணங்கார் (௰௬)

அனையதன் மார்க்கராயுபசாந்த மற்றபாடண்டரோடசுரர்
மனிதராயுலகிற்பிறந்துவஞ்சகராய் மறைந்துதூய்வாய்மைவேறாகி
அனுதினமதுவுமிறைச்சியுநுகர்ந்திட் டாகமமோகிதராகிப்
புனிதவேதியர்க்குப்பகைத்தகங்காரப் புத்தியுன்மத்தராய்த்திரிவார்*.

# வேதவிரோதநூல்வர்க்ககண்டனப் பருவ படலம்.

திருவருட்படியேமோகவாகமநூல்செய் தனனந்தநூல்வழியே
இருநிலத்தவர் நின்றருமறைவரம்பையிகழ்ந்தநாசாரராய்மயங்கித்
திரிவுறுநீற்பர் வைதிகயாகச் செய்திடும்பூசையிற்சிறிது
பரிவுறவத்தப்பசையிலுளவர்க்குப் பலிப்பதுசெனனமாம்பள்ளம்.

என்றவையெல்லாம் வராகமாபுராண மிசைத்திடுமெழுபதோடொன்றாய், நின்றவத்தியாயமதற்குமேலாகநிகழ்த்திடுமத்தியாயத்தில் மன்றலங்குழலாய் மற்றுமோர்கதைகேள் வண்கயிலாயவாணனைச் சென்றடிபணிந்துமுனிவர்மோகன நூல் செய்ததென்றேறவ நீஎன்ன.

௬-வது-அப்பிராமணப்புலையர்ப்பரிச்சேதம்.

தாவுமானமரும்பங்கயச்செங்கைச் சட்டவுந்தபோதனர்க்குரைப்பான், தேவதாருபமாவனமாதாச்சிரமஞ்செறிந்துவாழ்முனிவர்கள் சிலபேர் பாவகார்பொழியாப் பன்னிருவருட பஞ்சகாலத்தினிற்பசியால் சோகைநல்விளையும்வயல்வளங் கொண்ட கோதமனுறையுளையடைந்தார். (௧)

சதுமறைமுனிவர்வரவுகண்டந்தத்தபோதனனுநகோதமனும் எதிரெழுந்தேகியினியசொற்கூறி யான்செயுந்தவங்களின்றுகூறு அதிசயஞ்சபலமானதென்றவரையாச்சிரமந்தனிலுறும் புதுவிருந்தாகவுபசரித்ததிபூசனை நெடிதுநாள்புரிந்தான் (௨)

போயதுபஞ்சகாலமவ்வளவிற்பணிதமாமுனிவர்கடத்தம் தேயநண்ணுவதற் கிச்சையாயின்பாற் றிங்களைத்தகவு மென்றெண்ணி, மாயையிலுமோர்பசுவுருவகுத்தம்மாதவன்பயிரைமேய்ந்தன்னும், தெயனுடளவிற்சாவதாய்வகுத்துத்தீயநிந்தனைசொலிச்சென்றார் (௩)

செல்லுமாதவனையிதற்கொருபிராயச் சித்தநீர்செப்புதிரென்னப் புல்லரோவருமின்னமும்பிராணன் போனதாயில்லையிதற்றனு மெல்லநீகங்கைப்புனலினைத் தெளிக்கில் விடாய்தெளிந்துய்ந்திடுமென்று, சொல்லமாதவனுஞ்செய்தனன்மாய சுரபியுந்துள்ளியோடியதால். (௪)

ஆயதோர்செயலைக்கண்டுதங்களிற்றுமந்நரவிருப்பிலேறும் தூயவேழ்முனிவர்நகைத்தனர்நகைத்ததுஞ்சியதென்றுகோதமனும், எயமாகத்தானினைத்தனன்பசுவை யேகியவிருடிகளிழைத்த மாயையென்றறிந்தான்கண்ணினைசெவந்தான் வானமும்வையமுஞ் சுழல. (௫)

இப்படிமாயமிழைத்தவர்விரத ஹீனராயிழிதொழிலினராய் மெய்ப்பொடிபூசிவிரிசடைதரித்து வேதபாகியருமாகி அப்பிராமணர்களாய்ப் பாடண்ட ராயரிக்கன் பக்கிநெறியைத் தப்பியிப்படிப்பிறந்திடக்கடவராமெனவிட்டனன் சாபம். (௬)

சாபமிட்டதனைக்கவுனுறக்கண்டசத்தமாமுனிவாரந்தப்
பாவசாரியர்க்குக்கலியுகந்தன்னிற் பலிக்கவிச்சாபமென்றுரைத்துத்-
தாபதியங்கணறு மலர்சொரிந்துசுராசுரர்வணங்குகந்தற்ப
கோபன்வாழ்கயிலைக்கிரியினையடைந்தார் குவித்தகைசிரத்தின்மேற்
கொண்டே. (௭)

ஏதுகாரியமிங்கிருடிகள்வந்ததென்றுநான்வினவமற்றவரும்
கோதமன்சாபத்தாற்சிலமுனிவர்குவலயமீதினிற்பிறந்து
பூதியுஞ்சடையுமணிந்துயாடண்டப்புலையராய்வருவர்களவர்க்குப்
பாதகமார்க்கமோகனநூலைப்பலபடப்பண்ணுதியென்றார். (௮)

நன்றெனநாமுமோகநூலுரைத்து நான்மறையொடுவிரோதித்த
தொன்றுவதானங்காண்டிலங்கவுநந்தொகுதனிச் சுவாதமேமுதலா,
ஒன்றலபலவுமுரைத்தன மவையே யொன்றுநூறாயிரங்கிரந்தம்
அன்றியும்விகற்பமநேகமுண்டுரைத்தாலவையெலாமவைதிகசாரம்

என்றவருள்ளந்தெளிந்திடவிசைத்தா னிப்படி யிங்குரைத்தவெலாம்
சென்றுமாமேருதனைவலதாகுஞ்செய்யுமாதித்தியபுராணம்
மொன்றளியலம்புமொய்ம்மலர்க்குழலாய்முப்பதாமத்தியாயத்தில்
பொன்றிகழ்சுடிகைப்பாந்தளேந்தியபொற்புவியின்மேல்வெளிப்ப
டப்புகலும். (௰)

செப்பிளமுலையாயின்னுமவ்வாதித்தியபுராணத்துரைசெய்யும், முப்
பதினுடனேழென்றெனவெண்ணிமொழிந்திடுமத்தியாயத்தில், வைப்
புறநிகழ மாகம மடந்தாய் மலை யரையன் றிருமகளோர், ஒப்பறு
மிடைப்பெண்வடிவுகொண்டிலங்குமொருபெரும்பாதையையுற்றாள்

திரண்டெழுகொங்கைக்குடமிரண்டசையத் தேங்குவெண்ணுரைச்சு
ரைக்கும்பம், இரண்டினைப்பதித்துத் தயிர்கடைவார்போ லிலையார்க
டைந்துகொண்டிருப்ப, மருண்டசிந்தையராய்க்கோதமன்சாபவலைப்
படுமுனிவ ரவ்வழியே, உருண்டநீடடியோரொன்றுகைப்பற்றி யுச்
சிவெய்யலில்விடாய்த்தடைந்தார். (௰௨)

அக்கணந்தனில்வந்தவந்தணர்க டம்மையங்கருள்சுரந்துவாய்பாள்-
மக்கணீருச்சிவெய்யலில்விடாய்த்து வந்தநும்வருத்தமதகல
மிக்கதெள்ளமுதையொத்ததக்கிரத்தைவிருப்பொடுநுகருதிரென்றாள்
ஒக்குமென்றதனையவ்வருநுகர்ந்தா ருள்ளமுன்மகத்தர்களானார் (௰௩)

அந்தவேலையிலிலக்கணபரமர னந்தனுஞ்சங்கரமூர்த்தி
வந்துமுன்னின்றான்கோதமன்சாப வசத்தருமலரடிபணிந்தார்
எந்தைநேமெங்கட் கிப்பெருஞ்சாப மென்றுபோ மிசைத்தருளென்
றார், நந்திவாகனனுந்திருவருள்பொழிபுநயனனுமவர்முகம்பார்த்து()

## வேதவிரோத நூல்வர்க்கசண்டனப் படலம். 

மற்றவர்பொருட்டாற்செய்தமோகன நூல்வர்க்கமெல்லாமுபதேசித்
திற்றைநாண்முதனீரிந்த நூல்வழிநின்றெம்மையாராதனைபுரிந்து
சுற்றமுநீருங்குருபரம்பரையாய்ச் சொல்லுமிந்நூலினைவிரித்துக்
கற்றுமானந்தம்பொருந்துதியென்றகதையெலாங்கட்டுரைத்திடுமால்)

வேறுமோர்கதைகேளனையபாடண்டவேடதாரிகளொருக்காலும்
ஈறிலாமுகுந்தன்சங்கரமூர்த்தி யென்றிருவோரையும்பணிந்து
கூறரிதாமிக்கோதமனிட்டகொடியசாபத்தனையகற்றிப்
பேறெமக்கருளப்பரமுமக்கென்றுபேசியிப்படிப்பிரார்த்திக்க(௰௬)

அச்சுதன்றன்னை நந்திவாகனன்பார்த் தமலனேயிவர்கள்புண்ணியத்
தை, இச்சியாநின்றாரிதற்கினியுபாயமேதெனவிந்திரைபதியும்
நச்சமர்களத்தா யிவர்கள்செய் துள்ள நல்வினை யற்பமுமில்லை
துச்சரித்திரரேயாகிலுமுபாய சூத்திரமுள்ளதுசொலக்கேள். (௰௭)

இங்கிவர்பொருட்டான்மோகன நூல்க ளெண்ணிலதியம்புதியென்று
ன், மங்கைபங்கினனுமிலாகுளங்கபாலம்வயிரவம்வாமமேமுதலாத
அங்கவாகமங்கள்பகர்ந்தனன்பகர்ந்த சூட்சியாலவர்களையழைத்திட்
டங்கவையுபதேசித்திவையுணர்த்தவடைவினீரனுட்டியுமென்றார். ௰அ

இசைத்தவம்மொழியைமகப்பிரசாதமென்றவர்மகிழ்ந்துகைக்கொண்
டார், விசித்தவாரணிபொற்கொங்கைபூரிக்க மெலியுநுண்ணிடையினு
யிதெலாம், வசைத்திறமிலாதகூருமநாமமருவியமாபுராணத்தில் [ம்
பசைத்தசெஞ்சொல்லாய்நிகழுமத்தியாயம் பத்தொடுந விளிற்பகரு

வனசநாபியினுன்சிவன்றனைப்பார்த்துவையமேலசுரமோகனமாய்ப்
பணிமதிச்சடையாய்நீயுமோகன நூல்பண்புறப்பலபடப்பண்ணி
முனிவர்வாக்காலும்பகருவித்திடுதிமுயற்சியாலென்றனனிதெலாம்
பணிமலர்க்குழலாய்பஞ்சராத்திரமாம்பழையநன்னூலினிற் பகரும்,

குறித்ததுநிற்கப்பசுபதி மதங்கைக்கொண்டிடப்படுமதன்றென்று
துறைப்படவோதுகின்ற வேதாந்த சூத்திரம்வெளிப்படச் சொலுமா
ல், சிறக்கவேவேதபாடியந் தன்னைச் செய்துளோர்களுமந்த
நிறத்தசூத்திரத்தி ன்பொருளையப்படியே நிலைமையாம்படி நிகழ்த்தி
னரால். (௨௧)

ஆதலான்மானேயச்சிவாகம நூல வைதிகமாகையினுலே
ஏதமில்பார்மேலப்பிரமாண மென்பதெல்லா மெமித் திசைத்தேதன்
ஓதுமவ்வேதவிருத்தவாகம நூ லொழுக்கமேயொழுகுவாரெல்லாம்
மூதுபாடண்ட ரவர்தமதியல்பு முன்னமுஞ்சிலபலமொழிந்தேன் ()

படலம்.

சோதிவானுதலாயீதெலாநிற்கத்தொல்லைநாட்சிலவிருடிகளைக்
கோதமன்குற்றங்கண்டுபாடண்டக்கொள்கையராகெனச்சபிக்க
மாதவரெழுவர்மற்றவருக்கவ்வலியசாபங்கலியுகத்தில்
பூதலமீதுபலித்திடவென்றுபுகன்றவைமுன்னரும்புகன்றேன். (கூ)

அனையபாடண்டராகியபேருமவர்க்கிசைமோகனநூலும்
இனியபார்மேலிக்கலியுகந்தனின்மேவிடுவதுசித்தியாதிராதே
வனிதையேவேதவிருத்தநூலெல்லாம்வகுத்தவம்மோகனநூலை
நினைவுறிலந்நூனெறியினிற்பவரேநீடுபாடண்டர்களாவார். (௰)

அன்றியேகலிகாலத்தினதியல்புமன்னியர்பராபரனென்றும்
நின்றசிற்பரனைப்பரமனன்றென்றுநெறிகெடநிகழ்த்துமென்றிடலும்
துன்றுபூணணிபொற்குன்றுநேர்கொங்கைத்துடியிடையாகபத்தோகை
வென்றிவ்வலிணைபோல் வீறுசேர்நயன வேதமாமடந்தையோடுரைப்
[பாள்.

முனிவர்சாபத்தான்மோகனநூலுமதுபாடண்டர்கடாமும்
புனையுநீள்கலியிற்சம்பவித்திடினும்புகன்றிடுங்காலதன்மத்தால்
அறிதனும்பரனைப்பரமனன்றென்றுமபரனைப்பராபரனென்றும்
மனிதலோகத்தில்வழங்குமோவென்னமாமறைவல்லியும்புகல்வாள். ()



ரு-வது. கலியுகப்பரிச்சேதம்.

மைப்பயில்கண்ணாய்கலியியல்பைக்கேண்மகிதலமீதுபாடண்டர் [தே
எப்பொழுததிகாரிஞர்மேலோர்க் கிடுக்கண்வந்துறைத்ததெப்பொழு
செப்பிடுமாலாராதனைவேள்வித்திறங்களெப்பொழுதுதேய்வுற்ற
தப்பொழுதநீதிமிகுங்கலிகாலமடைந்ததென்றறியலாமென்றும். (க)

அகிலகாரணனுநாரணன்திருவாராதனைகுறைத்துபாடண்டர்
மிகுவராமென்றுமறைகளாற்பயனென்வேதியர்தமக்கெனமேன்மை
மகிமையாந்தெய்வமென்றுமொன்றுண்டோமனிதரினுபாயமீதென்றே
புகலுவார்கலிகாலத்தினிதெல்லாம்புத்தியான்மாந்தர்களென்றும். (உ)

படிமுழுதளந்தமாயவற்கன்பாம்பரமபாகவதர்பாலென்றும்
கொடியவெங்கலிவந்தடைந்திடாதென்றுங்கூறியசொல்லினையெல்லா
கடிகமழ்மாலைக்கணங்குழைமானேகாட்சிசேர்விண்டுவின்புராணத் [ம்
தடைவுசேரத்தப்பஞ்சகத்தாதியத்தியாயத்தினிலறையும். (௩)

நன்னுதன்மாதேயின்னமுஞ்சொலக்கேளுனிலமாந்தர்நாளுவாய்
மன்னியகாமப்பரவசத்தாலேமயங்கினாருந்தகராகி
மின்னியதிகிரிச்செங்கணாரணனைமெய்ம்மையாம்பூசனைசெய்யார்
அன்னியதேவர்தங்களைப்பற்றியன்பிலாராதனஞ்செய்வார். (௪)

பாரினின்ஞானப்பண்புகுன்றுதபரமபாகவதரைக்கண்டும்
பேரறிவாளராகியேயிருந்தும்ஸ்ரீதகவானுடையான்பெருமை
சீருறவாக்காற்செப்பியுந்திருவாராதனஞ்செய்திடாநின்றும்
பூரியரவனைப்பராபரனென்றுபுலப்படார்புந்தியுந்தெளியார். (௫)

தோற்றியதங்கடுன்மதிக்குறிப்பாற்றூராகதப்பொருள்சொலிச்சிலபேர்
தேற்றமாம்வேதநெறிப்படி நடப்போர் சிந்தையைத்திருப்புவார்சிலர்
தாம்,போற்றியமறைக்குமிகவிபரீதப்பொருளுரைத்தரியின்மேலன்பை
மாற்றுவார்முன்னைத்தீயதஞ்சென்மவாசனுவாசிதராகி (௬)

பற்றியநெறியைப்பற்றியேயந்தப்பரம்பரையாய்ச்சிலர்திரிவார்
தெற்றெனவிரதத்துறையெலாந்துறந்துதேகமேசிலர்வளர்த்திடுவார்
மற்றிவைகலிகாலத்தினிச்சயமாய்வழங்கிடுமியற்கைகளென்று
சொற்றரும்புவிமேற்றெளிவுறப்பரத்துவாசசங்கிதையினிற்சொல்லும்

பரிபுரவடியாயின்னமுங்கலியின்பண்பினையுரைத்திடும்படிகேள்
தரைமிசையந்தக்கலியினுதியிலேதருமமோர்கூறுமுக்கூறு
விரவிடுமதன்மந்தானுமாய்நிகழுமெல்லெனவடைவிலேயந்த
மருவியதருமமாணகாற்கூறுமாய்த்திடும்பாவமேவளரும். (௮)

நிலமெலாம்விளைவுகுறைந்திடுங்கடையர்நீசரோதலைமையாய்நிற்பார், அ
லகிலாமருந்தும்பலித்திடாவரசனறந்தவிர்ந்தரும்பொருள்வெஃகும், பு
லமைசேர்மறையோர்நிட்டையைமறந்துபுன்றொழிலேபுரிந்திடுவார், வ
ளமைசொன்மடவார்கணவரைப்பேணார்மைந்தருந்தந்தையைமதியார்.

தேவதைதன்னைக்குருவைமந்திரத்தைச்சிந்தையின் மெய்யெனத்தெளி
மேவியதெளிவுபிறக்கினும்வேதவிருத்தநூலல்லதுவிரும்பார் [யார்
தாவில்வைதிகத்திலொழுகினும்பரமன்றத்துவமபரதத்துவமாய்ப்
பாவனைசெய்வாரவப்பொருடன்னைப்பரம்பொருளாகவேபார்ப்பார்.()

துலங்குநான்மறையினுறுதிமெய்ஞ்ஞானந்தோன்று தன்மாந்தருக்கற்
தலங்கிளர்ந்துயர்ந்தஞானியர்க்கல்லாரணனுபாசனையெய்தா [பம்
இலங்குமுக்கிரதேவதைகளைப்பற்றியாவருமுபாசியாநிற்பார்
உலந்தவிற்சாத்துவிககுணங்குறைந்துதாமதகுணங்களேதழைக்கும்,

படலம்.

விஞ்சுபுண்ணியமேற்பாவியர்விநேணவிரோதமேவிளைத்திடாதிற்பரீ
தஞ்சமாகியசாத்திகசாத்திரங்கடாங்கிலமாகிமோகனமாம்
வஞ்சநூலெல்லாமொன்றுநூறாகிவளர்ந்திடுங்கலியுகாந்தத்தில் [யும்
செஞ்சொல்வேதங்கண்மூழுதுடன்மாய்ந்துசிறந்தவோங்காரமேசெறி

ஒதியவிதெலாம்ப்துமமாபுராணத்துத்தரகாண்டகோசத்தும்
மேதகுவாயுவியத்தினுமரிசிவிளம்பியநூலினும்வேறு
நீதியாற்கலியினுகத்தியரென்றநிழ்கத்தியநூலனைத்தினிலும்
தாதுலாவியபூங்கோதைசேரளகத்தையலேமெய்யுறச்சாற்றும். (௰௩)

மருவலர்குழலாயிவ்வளவேயோமதிகடலேழிணையுடுத்த
தராமிசையடைவேசத்தியம்பொறுமைதயாதருமங்களுசமதாம்
கரவொடுமாயங்குத்திரமூர்க்கங்காமமோகம்பசிகனமாம்
திரமிகுதனமேகுலமதாம்வலியோர்செய்கையேநியாயபாவியமாம். ()

மங்கையர்மாந்தரனைவருக்குந்தம்மனப்பொருத்தங்களேமணமாம்
துங்கவேதியரையறிகுறிநூலாய்ச்சூத்திராசாரமேதொழிலாம்
தங்குசந்நாசப்பெயரிஞோர்குடும்பதாரிகளாகியேசரிப்பார் [ரும்
பொங்கியசடையுங்கபடமேமொழிந்துபுன்மைமேநிலைமையாய்ப்புனை

திரமிகுமாந்தர்க்கிந்நிலைதானேதேட்டமாய்ச்சீவனோபாயம்
இருநிலந்தன்னிலவர்பரமாயுவிருப்பதுமுப்பதாண்டளவே
அரிவையர்பருவமாய்மகட்பேறுதரிக்குமதாண்டிருநாலே
தருமதானங்கள்சிலநடத்துவதுந்தமைப்பலர்புகழ்வதின்பொருட்டே.

மிடித்தமன்னவனை விடுவர்சேவிப்போர்மெலிந்தசேவகனைமன் வேண்
டான்,மடப்புறத்துறைவார்வனத்துறை துறவோர்மறையவரீனர்கீழ்வா
ழ்வார், படைப்பரும்பசுவை வருத்தியேகறப்பர் பான்மறுத்தாற்பசுப்
பேணூர்,திடத்தசொல்வேதஞ்சிறியபாடண்டத்திறத்தினனித்தனைசேரு [ம்

மன்னவர்தாமேகள்வராய்க்கவர்வர்வனிதையரசுத்தியாய்வாழ்வர்
மின்னுதன்மட்டேமழையுலகுக்குவிளைவெலாம்விபலமேயாகும்
பன்னியபலதானியங்களுமணுவைப்பற்றவுஞ்சிறியபான்மையவாம்
இன்னவானகலியுகாந்தத்திலெறிகடற்றுயிலுமெம்பெருமான். (௰௮)

௬-வது. கற்கியவதாரவிபவப்பரிச்சேதம்.

தலத்திடைக்காண்டற்கரியதாந்தருமதாபனஞ்செய்குவானெண்ணி
மலர்த்தடம்பொழில்சூழ்சம்பளக்கிராமவரசாமறையவர்தங்கள்

குலத்தினில்விண்டுசென்மஞர்மகிழ்வுகூரவந்தவதரித்தருளிக்
கலித்திடுந்துரகவீரசிங்காரகற்கியென்னும்பெயர்படைத்து (௰கூ)

கரத்தினில்விசயகட்கமுந்தரித்துக்காற்றெனக்கலினமாச்செலுத்தி
வனாத்தலங்கானம்பதியரனெங்குமருவியகுறும்பெலாமறுத்துத்
திருத்தியபின்னருலகமீடேறத்தேய்ந்தொடுங்கியவறந்தழையப் [ம்
பெருத்திடுங்கலியைத் தூரத்துமம்மாலின்பெருமையுமறைகளேபேசு

சேயிழைநல்லாயினையனவெல்லாஞ்செகதலம்புகழ்பரிட்சித்து
ஆயமன்னவற்குச்சுகப்பிரமமுனியறைந்தனனிப்பரமார்த்தம்
தூயபாகவதத்தாறிரண்டாகத்தொகைப்படநிகழ்ந்தகந்தத்தில்
ஏயசீர்புனையுமத்தியாயங்களிரண்டினுமூன்றினுமிசைக்கும். (உ௰)

ஆதலாலினையபுராணசாத்திரங்களனைவுறச்சொல்லியபடியே
மேதினிமாந்தர்க்கச்சுதன்றன்மேன்மேவியபத்திருன்றுவதும்
ஓதியவிபரீதார்த்தஞானத்தானுக்கிரதேவர்பாலன்பு
போதமேவிட்டுவளர்வதுங்கலிக்குப்பொருந்தியசுபாவமேயென்றான் ()



எ-வது. சிவபுராணகண்டனப்பரிச்சேதம்.

என்னவாரணப்பொற்றேகையிங்கிதெலாமியம்பலு மிலங்குமாகமத்து
மின்னுமப்படிநீசிவாகமம்வேதவிருத்தமென்றுரைத்தனையாகில்
பன்னியபுராணங்களிற்சிவன்மகிமைபலபடப்பகருமதெல்லாம்
அன்னமென்னடையாய்மிகுபிரமாணமல்லவோவெனநணியறைந்தாள்.

மூந்துசீர்வேதமடந்தையும்பகர்வான்முருகுசேர்மொய்குழன்மானே
அந்தநீள்புராணங்களுமிகுகற்பமானதுந்தெய்வதையனைவும்
வந்தசாத்திகராசதமத்துடனேமருவுசங்கீரணவகையும்
இந்தமாநிலத்தினிகழ்ந்திடுமேதெலாமியல்புடனியம்புவலிதுகேள். (உ)

வேறு.

தமித்திடயவயிரிதன்னைச்சாத்திகதெய்வமென்றும்
இயற்பதுமத்துளானையிராசதக்கடவுளென்றும்
சயத்திரிசூலத்தானைத்தாமதமூர்த்தியென்றும்
மயித்திராவருணியோபணிடத்தினில்வகுத்துக்கூறும். (௩)

பொலியுமிவ்வேதாந்தத்திற்புகன்றிடும்பொருளுக்கேற்பக்
கொலையயில்வடிவேற்கண்ணாய்கூருமபுராணந்தன்னில்

அலகறுசெஞ்சொற்பத்தைந்தாமத்தியாயத்
திலகியபிரமாணத்தையெடுத்துநாணியம்பக்கேளாய். (௪)

தாமதமிராசதஞ்சாத்திகஞ்சங்கிரணமேயென்ன
நாமமேவியகற்பங்கணான்குபேதங்களாகும்
தாமதகற்பமெல்லாஞ்சங்கரன்றன்னைப்போற்றும்
ஏமமாமலரோன்றன்னையிராசதகற்பங்கூறும் (௫)

சாத்திககற்பமெல்லாஞ்சார்ங்கபாணியையேபோற்றும்
வாய்த்தசங்கீர்ணகற்பம்வாணியைப்பிதிர்கடம்மைத்
தோத்திரஞ்செய்யுமீதுதொல்புராணத்தின்செய்கை
ஏத்துசாத்திகமேமுத்தர்க்கடுத்ததென்றிசைத்ததன்றே. (௬)

பொன்னெனத்துலங்குமேனிப்பூவையேயின்னுங்கேட்டி
நன்னிலமதித்தகற்பநான்குளநான்குதம்மில்
என்னையக்கற்பஞ்சொல்வதெவ்வழிப்புராணமந்த
மன்னுகற்பக்குணத்தைமருவுமம்மாபுராணம். (௭)

வாய்த்தசாத்திககுணத்தான்மாயனைப்புகழ்வதெல்லாம்
சாத்திகபுராணமெய்ம்மைதருமிராசதகுணத்தால்
மூர்த்தியாய்வழங்குஞ்செய்யமுளரியாசனத்தினானை
ஏத்திடும்புராணமெல்லாமிராசதபுராணமென்னும். (௮)

நாமதாமதகுணத்துநக்கனையுரைப்பதெல்லாம்
தாமதபுராணமாகுந்தழைத்தசங்கீர்ணந்தன்னால்
பாமகண்முதலினோரைப்பகர்வசங்கீர்ணமாகும்
மாமைசேர்புராணமென்பமச்சியபுராணமாதோ. (௯)

திரமிகுபுவியிசைச்சாத்திகமுத்தமமதென்னும்
வருமிராசதகுணந்தான்மத்திமமானதென்னும்
விரவியவதமந்தாமதம்மென்றும்விண்டென்மோதி
தரமுரைசெய்யாநிற்குந்தழைத்தநாரதியந்தன்னால். (௰)

விராவுசாத்திககுணத்தால்விளைந்திடும்பரமஞானம்
இராசதகுணத்தாலுண்டாமெண்ணிலாலோபமெல்லாம்
ஆராகதஞானத்தோடுஞ்சொலும்விபரீதஞானம்
பராவுதாமதத்தாலெய்துமென்றிடும்பகவற்கீதை. (௰௧)

சத்துவகுணத்தான்ஞானச்சக்கரக்கையினனே
முத்தியையளிக்கவல்லமூர்த்தியென்றகத்தியற்கே
உத்தமமதவேண்மாளவுமிழ்கின்றகண்சேர்நெற்றி
மத்தனுருரைத்தவாய்மைமவராகமோபுராணங்கூறும். (௰௨)

எத்துசாத்திககுணத்தோரிமையவராவர்பாரில்
வாய்த்தராசதகுணத்தோர்மனிதராய்ப்பிறப்பர்வஞ்சம்
பூத்ததாமதகுணத்தோர்புள்விலங்காவரொன்று
சாத்திரங்களின்மேலானதனாபுகழ்மனுவிற்சாற்றும். (௰௩)

ஓதுசாத்திகதெய்வத்தையுபாசனைசெய்தோரெல்லாம்
தீதறுமுத்திதன்னைத்திரமுறப்பெறுவரொன்றும்
மூதுராசதகுணத்துமூர்த்தியையாராதிப்போர்
ஏதமில்சுவர்க்ககாமியத்தராயிருப்பரொன்றும். (௰௪)

மருவுதாமதகுணத்தெய்வத்தனைவழிபட்டோர்கள்
விரவியபிறவிவேலைவீழ்வர்மற்றுயராரொன்றும்
இருதிரைமுத்தந்தம்மையிலவிதழ்பதித்தாலன்ன
திருநகையணங்கேநீடாதித்தியபுராணங்கூறும். (௰௫)

சேமமால்சாத்துவீகதேவதையிராசதத்தோன்
மாமலரயனரன்றமதமூர்த்தியென்றுமண்மேல்
நாமசாத்திகத்தோர்க்கெய்துநவையிலாமுத்தியென்றும்
தோமிராசதத்திஞேர்க்குச்சுவர்க்கமுண்டாகுமென்றும். ()

நண்ணுதாமதகுணத்தோர்நரகினில்வீழ்வரொன்றும்
கண்ணுதற்பெருமானம்பிகைக்குபதேசமாகப்
பண்ணியசெஞ்சொனீடுபதுமமாகியபுராணத்
தெண்ணுமுத்தரகாண்டத்திலினிமையாயுளாக்குமன்றே. ()

அங்கயலனையசெங்கணுகம்வல்லியேகேள்
துங்கமாம்பகுதிமூன்றாய்த்தொகைபெறவழங்குமென்றும்
பொங்குசாத்திகசரீரம்பொருந்துராசதசரீரம்
தங்குதாமதசரீரமெனவதுதழைக்குமென்றும். (௰௮)

பன்னியவுலகின்மேலுற்பவித்திடும்பொழுதின்மாயன்
தன்னருள்பெற்றதேகஞ்சாத்திகதேகமென்றும்
கன்னிபாகத்தான்வேதாக்கருணைபெற்றவர்தாந்தோன்றின்
மன்னியசரீரமேதாமதவிராசதங்களென்றும். (௰௯)

படலம்.

சாத்திகசரீரமுத்திசார்ந்திடுமென்றும்பாரில்
வாய்த்தராசதமேதாமதத்தவாஞ்சரீரர்க்கெல்லாம்
எத்துசீர்முத்திச்செல்வமெய்துதற்கருமையென்றும்
சேர்த்திவைதாந்திகத்தைத்தெளிவுறச்சொலுமிடத்தில் (உ௰)

முன்னுபாரதத்தின்மேலோர்மொழிந்திடுமோக்கதன்மம்
தன்னினூற்றெழுபத்தைந்தாய்த்தழைத்தவத்தியாயத்தூடு
மின்னிகர்மருங்குன்மானேவிளம்பிடுமாகையாலே
துன்னுசீர்நெடுமாறேனேசுத்தசாத்திகதெய்வம். (உக)

கோதையேமும்மைத்தாயகுணங்களைக்கடந்துளானை
ஏதமில்சாத்திகத்தோனென்றிடப்பணியேதென்னில்
இதமங்கவன்றன்வேதாவுருத்திராதியரைப்போல
மேதகுபகுதிபந்தமிகுகுணனென்றதன்றே. (உஉ)

அளவிடற்கரிதாய்மேலாயப்பிராகிதமாயென்னும்
வளமிகுத்திலங்குந்தெய்வமங்கலகுணங்கட்கெல்லாம்
விளைவவனுகையாலேமெல்லளிமுராலுந்தாமத்
துளவமாயனையேவேதஞ்சுத்தசாத்திகனென்றோதும். (உ௩)

அன்றியுமகரமுந்நீராழிசூழுலகந்தன்னில்
நன்றிகூர்சாத்திகத்தினவையறுகுணத்தார்க்கெல்லாம்
பொன்றிணிதிகிரிக்கையான்புகலிடமாகையாலே
துன்றுசாத்திகதெய்வமென்பதுதுணிவதாமே. (உ௪)

ஆதலாலிராசதத்தோடமைந்ததாமதங்களென்ன
ஓதியபுராணநூல்களுயர்மறைப்பொருட்கொவ்வாமல்
பேதமாம்பாகமெல்லாம்பெறும்பிரமாணமாக
மூதறிவாளராயமுத்தர்கைக்கொள்ளாரன்றே. (உ௫)

௪-வது-வேதவிரோதநூல்வர்க்ககண்டனப்படலம்

முற்றும்.

ஆக திருவிருத்தம் - ௱௰௪.

ஆக காண்டம்-௩-இ-படலம்-உ௰-இ-கூடியதிருவிருத்தம்- ௲௨௱௫௩

அரிதாசர்திருவடிகளேசரணம்.

சர்வம்-விஷ்ணு மயம்-ஜகத்.

# அரிதாசர்திருவடிகளேசரணம்.



# ௪-வது-ஸ்ரீயத்வேதபரமார்த்தகாண்டம்.

## முதலாவது-பரமார்த்தப்படலம்.



### ௧-வது-பஞ்சராத்திரவைபவப்பரிச்சேதம்.

என்றுநால்வேதவல்லியியம்பவாகமத்துமோதும்
வென்றிவேற்றடங்கண்மானேவிளங்குபல்புராணத்துள்ளும்
ஒன்றுமன்றொன்றதீதென்றுரைத்தனையதெலாநிற்க
இன்றுநானுனக்குநேரோயிழையவொன்றியம்பக்கேட்டி. (௧)

பாவையேநம்மதாயபஞ்சராத்திரநூறன்னை
யாவரும்புகழுங்கூர்மமெனும்பெயர்ப்புராணந்தன்னில்
மேவுமோகனநூலென்றுவிளம்பிநீமுன்னுரைத்த
கோவையாகமங்களோடுகூட்டிவைத்தெண்ணலாலும். (௨)

உத்தமவேதந்தன்னிலுரைத்திடாதொழிந்தசீவோற்
பத்தியையுள்தாய்நாட்டிப்பண்புறப்பகர்தலாலே
தத்தையேயனையாய்நீள்பஞ்சராத்திரமென்னவோதும்
அத்திறமமைந்தநூலுமப்பிரமாணமென்றாள். (௩)

அன்னதுசொல்லக்கேட்டவார்ணமயிலுமாதே
பன்னுதற்கரியதாயபஞ்சராத்திரநூறன்னை
முன்னொடுபின்னொண்ணுமைமொழிந்தனையந்தநூலில்
மன்னியசீவோற்பத்திவகுத்துரைத்ததுதானில்லை. (௪)

மருவுசீர்மறைதேர்வாசுதேவன்றனிடத்தினிற்சங்
கருடணனென்னுஞ்சீவன்காட்சிபாற்றோன்றினனென்
றரிவையேசொன்னதுள்ளதப்பொருள்சீவனெல்லாம்
உரியசங்கருடணற்கேயுடைமைதாமாகையாலே. (௫)

அன்னவனவதாரத்தைமறைந்ததத்தனையதன்றி
உன்னருஞ்சீவோற்பத்தியுரைத்ததேயுள்ளதாகில்
இன்னுபிமொல்லார்ந்தோன்றிற்றென்னவேவேண்டுமல்லால்
பன்னியேயொருமைப்பாலாம்படிபகர்ந்திடப்படாதே. ()

சீவனென்கின்றசத்தச்செழும்பொருள்சீவிப்பானும்
தாவில்சீவிப்பிப்பானுமாகியதன்மையாலே

ஏவைநேர்தடங்கண்மாதேயிவ்விடைச்சீவனென்று
மேவுசொற்பொருளேதென்னின்வியந்துசீவிப்பியானே.

விரவுமிச்சங்கிதைக்குமேல்தாய்விளம்புகின்ற
பரமசங்கிதையிலென்னும்பராபரன்றன்னைப்போல
நிரைபெறுஞ்சீவனெல்லாநித்தியமெனலாலங்குத்
திரமிகுஞ்சீவோற்பத்திசெப்பியதில்லைமன்றே. (௮)

பரவுமிந்நூலிற்சீவோற்பத்திசொல்லியதென்றாரும்
கருதிடாவகைவியாதர்காட்சியினுயிரையெல்லாம்
உரிமையாயுடையரன்றோற்றமுரைத்ததென்றையந்தீரத்
தரையுளோரறியமுன்வேதாந்தசூத்திரமுஞ்செய்தார். (௯)

ஏற்றமாஞ்சீவோற்பத்தியிசைத்திடுந்தன்மையேபோல்
தோற்றியபொருளுக்கேற்பத்துறைப்படுநியாயஞ்சொல்லில்
போற்றியபரமஞானப்புருடசூத்திரத்தான்மேன்மை
சாற்றியமால்பால்வேதஞ்சகலமும்பிறந்தவென்றும். (௰)

இலகியகானபேதமிசைத்திடுஞ்சாமவேதத்
துலசமூன்றினிலுமூன்றாயுயர்மறைபிறந்ததென்றும்
நிலைபெறவுரைத்தவேதநிகழ்தலாத்தாங்கட்பில்
அலகிலாவேதநித்தமாகியேயிருக்குமென்றும். (௰௧)

உரைத்தவாக்கியங்களெல்லாமொன்றினுக்கொன்றுதம்மில்
விருத்தமாகாமற்கொண்டவிருதியாயத்தைப்போலத்
திருத்தமாமிந்தநூலிற்றிரம்பெறுநித்தமென்றும்
தரித்திடுஞ்சீவோற்பத்திசாற்றியதில்லைமன்றே. (௰௨)

தக்கமைசேர்வாசுதேவன்சங்கருடணமூர்த்தி
மிகுபிரத்தியுமனன்சீர்விறலனுருத்தனென்ன
மகிமைசேரிவர்களுளுவகைவியூகமுமாயங்குப்
பகரவதாரரூபப்பண்பினர்தாமுமாகி. (௰௩)

அலகிலாநிலைமைபெற்றவண்டகோடிகளையெல்லாம்
தலைமையாய்ப்படைத்தல்காத்தல்சங்கரித்திடுதலிச்சைப்
புலமையுண்டாக்கல்செய்துபொருந்துவனென்பதற்குப்
பலபலபிரமாணங்கள்பகருவல்பண்பானீகேள். (௰௪)

பாரமான்மியமென்னப்பகருபநிடத்திரண்டாய்ச்
சாரனுவாகத்தூடுஞ்சதுமறைச்சிகையிற்றானும்
வாரியல்கொங்கைமாதேவாசுதேவாதியாய
சீரியமூர்த்தநான்கின்றிறந்தனைத்தெளியக்கூறும். (௰௫)

பஞ்சமவேதமானபாரதகீதைதன்னில்
விஞ்சுமிந்நாலுமூர்த்தவியூகவைபவங்கள்சொல்லும்
வஞ்சிநுண்ணிடையாயிந்தவாசுதேவாதிமூர்த்தம்
எஞ்சலினுலுங்கூறுமியற்பிரமாண்டந்தானும். (௰௬)

நாமபாகவதநூலினுலதாகியகந்தத்தில்
ஆமிருபத்தின்மூன்றாமத்தியாயத்திலண்டர்
தேமலிகொன்றைமாலைச்சிவன்பிரசேதசர்க்கு
நேமிமான்மகிமைதோன்றநிகழ்த்தியபருவந்தன்னில். (௰௭)

அந்தமான்மூர்த்திபேதமானநாயகனூடு
வந்திடவியூகநாலாய்வாசுதேவாதியாக
முந்துநால்வரையும்போற்றிமுறைமுறைபணித்ததன்மை
பந்திசேரனகக்கோதாய்பாருளோர்க்கெல்லாம்பாடம். ()

சொன்னபாகவதமூன்றாய்த்துலங்கியகந்தந்தன்னில்
மன்னுகாபிலயோகத்தில்வாசுதேவாதியாக
முன்னநால்வகையவாகுமூர்த்தபேதங்கடம்மை
இந்நிலத்துள்ளார்சிந்தைக்கிசைந்திடவிளம்புமன்றே. (௰௯)

தொல்லைமேதினிக்குக்கண்ணாஞ்சூரியசித்தாந்தத்தின்
எல்லையிலுலகசிட்டியிசைக்குமத்தியாயந்தன்னில்
வல்லணிதனத்துமாதேவாசுதேவாதியாக
நல்லெழில்பெற்றமூர்த்தநான்கையுநவிலாநிற்கும். (௨௰)

திரமுடன்விளங்குமேமாத்திரியெனுங்கற்பந்தன்னில்
அரியவதாரத்தானமளித்திடுங்கிரமஞ்சொல்லி
மருவுமங்கவற்றுளெல்லாம்வாசுதேவாதியாக
உரைபெறுவடிவநாலுமுத்தமமென்றுகூறும். (௨௧)

வாய்த்தசீர்வியூகநான்கும்வாசுதேவாதியாய
மூர்த்தமீரிரண்டும்பாரின்முந்துறமொழியாநிற்கும்
வேய்த்தடந்தோளணங்கேவீட்டுமர்வசனமான
தாத்திரிபுகழும்விண்டுசகத்திரநாமந்தானும். (௨௨)

வேறுளபுராணநூலுமிருதியும்வேதந்தானும்
தேறியவுலகத்தன்மைசெப்பியவிடங்களெல்லாம்
மாறொரு மூர்த்தமில்லாவாசுதேவாதியாகக்
கூறியவியூகதான்கின்கொள்கையைக்கூறுநிற்கும். (௨௫)

உ-வது சதுர்வேதபாரத்துவ விளக்கமென்கிற
பஞ்சராத்திரப்பரிச்சேதம்.

மாதுநல்லாய்கேளிந்தவாசுதேவாதியாக
ஓதியமூர்த்தபேதத்துண்மையையுரையாநின்ற
பேதமிலாதபஞ்சராத்திரமென்னுமந்நூல்
வேதமேநிகர்க்குமென்னுமேன்மையைவிளம்பநீகேள். (௧)

வாரணிகளபக்கொங்கைவஞ்சிநுண்மருங்குன்மாதே
ஆரணநாலோடைந்தென்றகிலசம்மதமாய்நின்ற
பாரதகாதைதன்னிற்பயின்றிடுகின்றதன்மச்
சீரினையெல்லாந்தோன்றத்தெளிந்துசெப்பியவிடத்தில் (௨)

பகருமிம்மோக்கதன்மம்பாரதக்கடலைஞான
மகிமைகூர்மதிமத்தாலேமதித்துகந்தெடுக்கப்பட்ட
தகைமைசேர்வெண்ணெயென்றுந்தனையுமேளோர்க்கிதுதானந்த
இகலிலாநூலாம்பஞ்சராத்திரத்திதயமென்றும். (௩)

பரத்துவவிளக்கமாமிப்பஞ்சராத்திரநன்னூறன்
இருக்கெசுச்சாமாதருவத்தியந்தையாயிருக்குமென்றும்
விரித்தநாரணன்றன்வாக்கால்விளம்பிடப்பட்டதென்றும்
உருத்திரற்கயனந்நூலினுண்மையையுரைத்தானென்றும். ()

நாரதன்முனேன்கானதற்றவமுனிவர்க்கெல்லாம்
டாரினிலிந்தநூலைப்படியின்மேற்பகர்ந்தானென்றும்
ஏரமரிந்தநூலேயிலங்குபாரதமறைக்குச்
சிருபநிடந்தானென்றுந்திரம்பெறச்செப்புமாதோ. (௫)

நீசெங்கருடனைப்பேர்நேமிமாநிலகுக்கெல்லாம்
பாடமாயுரைக்கப்பட்டபஞ்சராத்திரநன்னூலவ்
வாடரவணையினன்றனருச்சனைக்குரியதென்றும்
வீடுமபருவத்தாலும்விரித்ததவ்வைந்தாம்வேதம். (௬)

சாந்திபருவத்திற்றுனுஞ்சதுமறைச்சாரமாகி
எய்ந்திடுமகிமைப்பஞ்சராத்திரநூலையேமப்
பூந்துகில்வண்ணன்மேருப்பொருப்பினிலிருந்துமேனாள்
ஆய்ந்தனனென்னுந்தன்மையவனியோரறியக்கூறும். (௭)

ஞானகாண்டத்தின்மூன்றாய்நிலத்தியாயந்தன்னில்
பாணிகர்செஞ்சொலாகப்பரிசரவசுவின்செய்கை
தானியல்பெறவிரிக்குந்தலத்தின்மாதவனூர்பூசைக்
ஈனமில்லாதபஞ்சராத்திரமிசைந்ததென்றும். (௮)

நிலைபெறுமிந்தநூலாணியமித்தநைமித்தங்கள்
உலகினிற்செய்யப்பெற்றாலொன்றவையனந்தமென்றும்
பலமறைபடித்துளோரும்பஞ்சராத்திரங்கற்றோரும்
அலகிலாநேமிமாலையன்புடனடைவரென்றும். (௯)

ஓதியவேதந்தானுமூயோகசாங்கியமும்பாரில்
ஏதமிலாதபஞ்சராத்திரமென்னுநூலும்
ஆதிதொட்டொன்றுக்கொன்றங்காகியபாகமாகித்
தீதறவிளங்குமென்றுந்தெளிவுறச்செப்புமன்றே. (௰)

வேதநாதங்கள்பம்பும்வீணைநாரதனார்மேலோர்
ஆதிநாரணனைச்செம்பொனடியிணையணிந்துபோற்றிச்
சீதராவுன்னையிங்கர்ச்சித்திடுங்கிரமந்தன்னை
ஓதுவாயென்னவீரேழுலகமுமளந்தமாலும். (௰௧)

பாவியபுருடசூத்தம்பஞ்சராத்திரங்கள்சொன்ன
கிரமமார்க்கத்தினாற்செய்கின்றதென்றுரைத்ததாக
மருவகத்தியனார்சொன்னவாசகம்வராகந்தன்னில்
அரிவையேயறுபத்தெட்டாமத்தியாயத்திலோதும். (௰௨)

வஞ்சிநுண்ணிடைமடந்தாய்மற்றுமெவ்விடத்துந்தானே
பஞ்சராத்திரநூலுக்குப்பாத்திரர்மறையோரென்றும்
விஞ்சசூத்திரருக்கெல்லாம்விகிதமன்றென்றும்பாரில்
தஞ்சமாகியமுத்திக்குச்சாதனமிதுவேயென்றும் (௰௩)

பத்தியும்வேள்விதானும்பஞ்சராத்திரநன்னூலும்
மெய்த்தொகைமறையுஞ்சென்மமநந்தகோடிகளினின்றும்
தொத்தியபாவமெல்லாந்தொலைந்துளபேருக்கல்லால்
சித்தியாவுலகிலென்றுந்தெளிந்திடப்பகருமன்றே. (௰௪)

அன்றியுமெழுபத்தொன்றாமத்தியாயத்திற்குற்றம்
இன்றியேதிகழும்பஞ்சராத்திரக்கிரமந்தானே
வென்றிமால்பூசனைக்குவிசேடமென்பதனையெல்லாம்
நன்றாகப்பெய்தப்பூசைசொல்லியவிடத்திற்சொல்லும்(௰௫

போற்றுநான்மறையினானும்புராணநூன்முறையினானும்
ஏற்றமாய்விளங்கும்பஞ்சராத்திரத்தானுஞ்சிந்தை
தேற்றமாயோகசீலர்தியானியாநிற்பமொன்றும்
சாற்றிடாநிற்குநீடுதகவிராமாயணத்தும். (௰௬)

பங்கயவுந்தியானைப்பஞ்சராத்திர நூல்சொல்லும்
அங்கமேயங்கமாகவருச்சனைபுரியவென்றும்
மங்கலச்செஞ்சொலாஞ்சமதக்கினிமிருதிதானும்
சங்கையில்விதேகன்சொன்னசங்கிதைதானுங்கூறும். (௰௭)

இருக்கெசுசாமாதர்வமென்னும்வேதம்புராணம்
பருப்பொருளன்றிநின்றபஞ்சராத்திர நூன்மேலோர்
கருத்துறுமூலராமகாதைபாரதங்கடாமே
திருத்தமாயுலகத்திற்குத்திரப்பிரமாணமென்றும். (௰௮)

இவ்வகை நூல்கடங்கட்கேற்ற நூலிவைக்குமாறாய்க்
கவ்வைசேர் நூல்களெல்லாங்கைக்கொளப்பெறா நூலென்றும்
அவ்வழி நூலான்முத்தியடைவதற்கருமையென்றும்
மவ்வல்சேரளகக்கோதாய்மாபிரமாண்டங்கூறும். (௰௯)

பையரவல்குன்மின்னேபஞ்சராத்திர நூறன்னை
மெய்யெனத்தெரிந்துவேதவியாதர்நிச்சயித்தலானும்
பொய்யறுமந் நூல்வேதப்பொருளையேபுகறலானும்
வையமேலிதுவேசொல்லின்மகப்பிரமாணமாமே. (௨௰)

என்னவிப்பிரமாணங்களெண்ணிலாவெடுத்தியம்பிப்
பன்னுசொற்றெளித்திடுஞ்சீர்ப்பஞ்சராத்திர நூறன்னைத்
தன்னிகரற்றவேதசாரமென்றுரைத்தலோடும்
அன்னமென்னடைப்பூங்கோதையாகமவல்லிசொல்வாள். ()



௩-வது-பரமார்த்த நூல்வைபப்பரிச்சேதம்.

பார்புகழ்சுருதிமானேபஞ்சராத்திரமென்கின்ற
சார்பு நூல்கொண்டேமேலுஞ்சாற்றுதல்கருத்தோவன்றி
தேர்பெறும்பொது நூலாகிநீசொலும்படிக்குவேறு
சேர்வறுபிரமாணத்தாற்சொல்லு நூலுண்டோவென்ன (௧)

பகர்மறைமாதுமானேபஞ்சராத்திரத்தையும்யார்
புகழ்பிரமாணமென்றுபுகன்றதத்தனைநானின்னும்
நிகழ்பிரமாணமாகிநீடறிவாளர்போற்ற
திகழ்வுறு நூல்களெல்லாஞ்செப்புவென்சிந்தைசெய்யாய். ()

நித்தியமாதலான்மாணிடங்களாரிடங்களன்றிச்
சுத்தமாயுலகிற்றானேதோன்றலாற்சொல்வதெல்லாம்
சத்தியமென்றுதன்னைச்சகலசாத்திரபுராணம்
உத்தரித்திடலால்வேதமுயர்பிரமாணமாமே. (௩)

பான்மதியனையாய்பன்னிரண்டதாம்பருச்சத்திரைந்
தாமமூறுவாகந்தன்னிற்றன்மனுமிருதிசொன்ன
வாய்மையைவியசுநற்பேராமாமறைசொல்லலாலத்
தேமனுமிருதிதானேதிடப்பிரமாணமாமே. (௪)

நிகரிலாவுருவைச்சார்ந்தநிமலதாய்விளங்கிநீடும்
அகிலமேல்வேதந்தன்னையனுசரித்திடுகையாலே
சிகரமாமருவெண்ணத்திகழ்ந்தடங்கொங்கைநல்லாய்
தருபிரமாணமாகுந்தருமசாத்திரங்களெல்லாம். (௫)

எவ்வகையிராசியங்களெவ்வகைப்பாராசியங்கள்
அவ்வகையுள்ளவெல்லாமங்கையினெல்லியேபோல்
கவ்வைதீர்கருத்திற்றோன்றக்கடவனநினக்கென்றந்தத்
தெய்வமாமுனிகற்கும்வேதன்றிடவரமீதலாலும். (௬)

தற்பரஞானமாயோன்றசரதனிடத்திலேவந்
துற்பவித்திடலால்வேதமோங்குவான்மீகன்றன்பால்
மெய்ப்பெருத்தோன்றிராமாயணமதாமகிமையாலே
முற்பயிற்றிகாசச்சீர்மொழியதற்கெய்தலாலும் (௭)

கூடறுமங்கதுதானூறுகோடிவித்தாரமாகி
நீடிலவதனிலோரெழுத்தையுச்சரித்தபேர்க்கும்
பீடுமாபாதகங்கள்விநாசமாமென்மையாலும்
தேறியவிராமகாதைதிடப்பிரமாணமாமே. (௮)

பரவுவிண்டுபுராணத்திற்பராசரன்மயித்திரேய
விரதனைநோக்கிநீயவ்வியாசனைவிண்டுவென்றே
கருதுதிவியாதன்றனக்கண்ணனேயல்லனாகில்
அரியபாரதநூல்செய்யவார்வசமென்னலாலும். (௯)

பானுவான்மதியாற்றுங்கபாரதகதையாலன்றி
மாநிலத்தந்தசாமமாறுமாறெங்ஙனென்றும்
ஏனையபுராணத்துள்ளயாவையும்பாரதத்தில்
தானுளவில்லாவச்சொற்சகலத்துமில்லையென்றும். (௰)

பாரதகாதைதானேபஞ்சமவேதமென்றும்
பேருலகத்திலெல்லாம்பிரசித்தியாகையாலும்
சீரியமகிமைபாரிற்சிறப்பினுற்றன்னில்விஞ்சும்
பாரிலொன்றிலாத்தன்மைத்துபாரதமாகையாலும். (௰௧)

ஒளிக்கிளர்பொருள்சேர்வேதத்தொடுபுராணத்தையெல்லாம்
வெளிப்படுத்துவதற்காகவியாதமாமுனிவன்மேனாள்
வளப்பமுற்றிடும்பார்மீதுவயித்தமாபாரதத்தைக்
கிளத்தினனென்றுசூதர்கேண்மையாலுரைத்தலாலும். (௰௨)

வளம்பெறுமெய்ம்மையானவாசகனென்றுபோற்றும்
களங்கமில்வியாதனன்பாற்கட்டுரைத்திடுகையாலும்
தளம்பெறுமலரோன்கேட்டுச்சம்மதித்தருள்கையாலும்
விளங்குமாபாரதந்தான்மிகுபிரமாணமாமே. (௰௩)

பொன்பயில்கமலத்தண்ணல்புராணமானவெலாமுந்த
அன்புடனுரைத்தான்வேதமவன்றிருவாக்கினின்றும்
பிற்புன்னிச்சையாலேபிறந்ததவ்வுலகிலென்ன
இன்பமாய்விளங்கும்வாயுபுராணத்தினிசைக்கையாலே (௰௪)

இத்திறப்பழமையாகவெழின்மறைவிளம்புகின்ற
உத்தமப்பொருளையெல்லாமுண்மையாயுரையாநின்ற
வித்தகப்புராணமெல்லாம்மதிணிமாந்தருக்குத்
தத்தைபோன்மழலைமாதேதகுபிரமாணமாமே. (௰௫)

சத்தியென்கின்றநாமத்தந்தையைவதைத்தோராய
குத்திரவரக்கர்தங்கள்குலமெலாமறுப்பதான
சித்திரவேள்விதன்னைச்செய்தியான்முடிப்பனென்றே
பைத்தலையரவிற்பொங்கிப்பராசரன்முயன்றநாளில். (௰௬)

புலத்தியன்வசிட்டனென்னும்புனிதமாமுனிவர்வந்து
விலக்கலுந்தவிர்ந்துநின்றமெய்ப்பராசரனைநோக்கிச்
சலத்தைவிட்டனையுனக்குச்சதுமறைப்பரமார்த்தங்கள்
நிலத்தினிற்றெரிகவென்றுநீள்வரங்கொடுத்தலாலும். (௰௭)

நீதிசேரெசுருவேதநிகழ்ந்தசீராரணத்தில்
ஆதியாம்படலத்தொன்பதாமனுவாகந்தன்னில்
மேதைகூர்வியாதன்மேன்மைவிரிப்பதாய்வியாதனந்தத்
தீதறுபாராசரற்குச்சேயன்றேவென்னலாலும். (௰௮)

பூதலமுழுதும்போற்றும்புகழ்ப்பராசரன்றனூலு
வேதநூல்கண்டவேதவியாசன்றன்சுகனார்தாமும்
நீதறுதோற்றந்தெய்வத்திருவவதாரமென்று
ஓதிலிங்கப்புராணமொழிந்துளபடியினாலும். (௰௯)

அப்பராசரனைநோக்கியன்பொடுமயித்திரேயன்
ஒப்பறும்புவனமெங்கேதோன்றியதொடக்கமெங்கே
இப்பிரவஞ்சமெல்லாமெவனதுசொரூபமென்றே
தப்பறவவனையேநிச்சாணியமாகக்கேட்டான். (௨௰)

மருவுஞானியர்க்குளெண்ணும்வரபராசரனார்தாமும்
அரிமயந்தானேநீடண்டகோடிகளதெல்லாம்
பரிவுடனவனேயென்றும்படைத்தளித்தழியாநின்றான்
விரவிலீலையினாலென்றுவிசேடமாய்ப்பகர்கையாலே. (௨௧)

விரியவேயவருரைத்தவிண்டுவின்புராணந்தானும்
தரையினின்மாந்தர்க்கெல்லாந்தகுபிரமாணம்பின்னர்க்
கரதலாமலகமென்னக்கனபிரமாணமாக
இருமைசேர்புராணம்வேறொன்றின்னமுமியம்புவன்கேள்.

விதித்தறிமூத்தர்தம்முண்மேன்மையாலெண்ணுங்காலை
முதற்பெயராகியெல்லாமுனிவருந்தொழவும்வாக்கால்
துதிக்கவுமுரியனாமெய்ச்சுகமுனிசகலர்க்குஞ்சம்
மதிக்கவோதுகையாற்பாகவதம்பிரமாணமாமே. (௨௩)

மற்றுமோதியசாத்தீகவரபுராணங்களெல்லாம்
வெற்றிவேற்கண்ணாய்வேதவிருத்தமற்றிருக்கையாலே
நற்றடங்கடன்மூன்றேடுநான்குசூழ்செகத்துக்கெல்லாம்
தெற்றெனவாகச்சொல்லுந்திரப்பிரமாணமாமே. (௨௪)

அப்பிரமாணமானவருகர்நூல்புத்தர்நூலும்
எப்பிராணியையுங்கொல்லாவிரதமேவிரதமென்னும்
மெய்ப்படுவசனம்வேதவிரோதமில்லாமையாலே
தப்பிலாவுலகுக்கெல்லாஞ்சம்மதஞ்சிறிதேபோல். (௨௫)

எண்ணுதாமதவிராசதப்புராணங்களுள்ளும்
வண்மைமாமறைக்குமொத்துமாறுபாடிலாதவெல்லாம்
பண்ணினையமுதைத்தேனைப்பாலினைப்பழித்தசொல்லாய்
திண்ணியவுலகுக்கெல்லாஞ்சில்பிரமாணமாமே. (௨௬)

## ௪-வது-திருநாமவிவரணப்பரிச்சேதம்.

என்றுநால்வேதவல்லியிசைப்பவாகமத்துமானும்
நன்றுரைசெய்தாயிந்தநான்மறைநயந்தநன்னூல்
வென்றிவேற்றடங்கண்மாதேமிகுபிரமாணமேயாம்
அன்றெனச்சொல்வாரில்லையாயினுமொன்றுநீகேள் (௧)

பரவுமச்சதுவேதத்தாற்பரியமாம்பரமார்த்தத்தைத்
தெரியவென்றாலெவர்க்குஞ்செவ்வையிற்றெளிவுறாது
துணையின்மேலெங்கள்சைவசமயமுத்தரித்தமேலோர்
உரைசெய்தாரதனையெல்லாருள்ளவாறுரைக்கின்றேனால் (௨)

[வேறு.]

[ண்
எவன்பொருட்டுவணக்கக்குணங்களாலேமிகுத்தவணிப்பாரின்மேலெவ
பவஞ்சமிக்கவிலங்கியநாரணேபநிடஞ்சொல்லுமெவன்றனுபாசனை
உவந்துதன்புத்தியையுமயல்விப்பதற்குன்னுவானெவனேநலவேள்வியா
நிவந்தநாயகனுவானெவனவன் நீலகண்டநிருபகனுகுமே [ப்

உலகமீச்சுரமுள்ளதில்லாதெனயோகர்சாங்கியரோர்ந்துணர்ந்தோதியே
சொலுமவீச்சுரநாமமயனொடுதுளபமாயனைச் சொல்லப்படாமையா
ல், நலமதர்கியவாரணவல்லியேநன்னுமீச்சுரநாமமிளம்பிறைக், கலை
கொள்வேணியனுமவனேநமக்காரம்யாவையுங்கைக்கொளுந்தேவனே.()

இன்னசொல்லியவாகமவல்லிமுன்னிவனுமீச்சுரனென்றுமைபங்கனைச்
சொன்னதன்மை தனிற்றாழ்ந்தவர்களைச் சுட்டியும்பலசொல்லுமுருடி
யாய், மன்னிநின்றுளவாசகத்தாலுமேமற்றதெப்படியேல்வனைக்கள்ளி
யை, நன்னிலத்தின்மகாவிருக்கம்மெனநாமமிட்டுநடக்கின்றதொக்குமே

மொழியுமீச்சுரசத்தத்தினாற்சொலு முக்கியப்பொருளாகிய மூர்த்திமி
ன், பொழியுமாழியங்கைப்பரந்தாமனேபுவனகாரணனுமப்புனிதனைப்
பழுதிலாதநல்லீச்சுரச்சொல்லினாற்பகருகின்றன பல்பிரமாணமொன்
றொழிவிலாமலுரைக்கையருத்தியினோர்ந்தியான்சிறிதோதுவல்கேட்டி
[யால். (௫)

நன்றிகூர்தருமீச்சுரனென்பதோர் நாமநற்பொருளுவ்வகைத்தோற்ற
மாம், துன்றுமேலோர்கத்திருட்டியதிற்புகுந் துணிவுமிக்கதொழினியமித்த
லால், மன்றல்சேர்குழலாயிச்செயலெலாம்வண்டுழாய்முடிமாயவன்லீ
லையில், நின்றதென்றுதயித்திரியோபநிடத்தின்வாய்மைநிகழ்த்தியிருக்
[குமால். (௭)

நீரசத்திருவுந்திமுகுந்தனேநித்தனுநியந்தாவுநிறைவினால்
சாரயிச்சொரியங்களுற்பத்தியந்தானமும்பலவாணலைச்சொரியமும்

பூரணம்பெறவாழ்வானுமங்கதுபோற்றுவானுமருள்பவனும்மெனப்
பாரமாற்பவுபநிடத்தாதியாய்ப்பன்னுநீடனுவாகம்பகருமே. (௮)

அனையதானமறைப்பொருட்கேற்பயானகிலலோகமனைத்தும்படைத்த
தில், சனனங்கோடியினுள்புகுந்தேநியந் தாவுமானது மென்மணிமாலை
யில், புனைபுநூலினைப்போலெனக்கண்ணனூர் பொருதனஞ்சயரூபற்கு
ரைத்ததும், எனிலுயர்ந் துளவீச்சுரரில்லைவேறென்றசொல்லுமியந்தி
[னைதசொல்லுமால். (௯)
ஆயிரம்புயவாணனுக்காகவந்தன்றுதோற்றவரனூரிரதமே,லேயிருந்தரி
யேயொருவன்றனியீசனென்பதுமீறிலியென்பதும், தூயநீள்பரமாத்
துமனென்பதுஞ்சொற்றரும்புருடோத்தமனென்பதும்,எபநானதிந்
தேனெனவெண்ணியேயேத்தியேத்தியிறைஞ்சினனென்னவும். (௰)

அகிலகாரணவீச்சுரனென நாராயணன்றனையர்ச்சனையெய்திடார்
பகருநீள்கலிகாலத்தில்வைதிகப்பண்பிலாநெறிப்பாடண்டமென்னவும்
திகரிஞானனென்றுளவீச்சுரனிகிலசிட்டிநியாமகனென்னவும்
புகழைவீசுபராசரர்வாய்மையாற்பூத்தவிண்டுபுராணத்துரைக்குமே ()
மண்ணின்மீதிற்கிருவுதுவென்பெயர்மவுலியீச்சுரனென்றும்வண்டாம
ரைக், கண்ணர்தம்மைப் பகர்ந்தனன்பின்னையுங் கன்மபாசங்கடந்துள
பேர்களே, எண்ணுமாயனையீச்சுரனென்னவேயாச்சவற்கமுமோதுமி
தன்றியே, வெண்ணெயுண்டவனைப்பிரசாபதிமிருதியீச்சுரனென்றுவி
[ளம்புமால். (௰௨)
எந்தைநாரணனேபரஞ்சோதியாமீசனென்னவெடுத்துரைசெய்திடும்
கந்தமாபுராணத்தினும்பாரதகதையிலாதிகடைநடுத்தன்னிலும்
முந்தமாயனையீச்சுரனேயெனமொழியுமற்றுமுகுந்தனுக்கப்பெயர்
அந்தநாமசகத்திரமாகியவானுசாதநிகத்தினுமுள்ளதே (௰௩)

வண்ணவார்சடைச்சங்கரநாதர்தம்வனிதைதன்னுடன் வானவர்க்கீசனும்
கண்ணனேயெனக்கீச்சுரனென்றசொல்கன்னபர்வகதையினுங்காணலா
எண்ணுமிந்தமகபாரதத்துளுமேற்றசத்தவிருடிசம்வாதமும் [ம்
றண்ணுமாயனையீச்சுரனென்னவேநானிலத்தினலம்பெறவோதுமே. ()

ஆதலாலும்பசுபதத்தாலும்வேறடைசொலற்றபதத்தாலுமாகியே
சோதியாகியநாரணன்றன்னையீச்சுரனெனுஞ்சொற்றுலங்கிடச்சொல்
லுமால், தாதுசேர்குழலாயிச்சொலென்றுமோர்சகலமர்கியசத்தசமூக
மும், ஓதுகின்றதவன்றனையென்பதற்குண்மைகேளெனவோதுவதாயினுள்

அரியையச்சுதனைச்சிவனென்னநாராயணோபநிடஞ்சொலுமாடல்வேல்
பொருகணையிதுவன்றியும்விட்டுமப்புனிதன்னுடப்பொருள்கொண்டரு

ருத்திரியால், தருமன்கேட்ட சகத்திரநாமமுஞ் சார்ங்கபாணி தனைச்சிவ
னென்றிடும், சுருதியுள்ளுமரியைச்சிவனெனச்சொன்னவிங்குச்சொலி
[ற்பரப்பாகுமே. (௰௬)

அலவார்குழலாகமவல்லியேயின்னுமோர்சொல்லியம்புவ துண்டுகேள்
மாலினீள்கழலைப்புனற்கங்கையால்வனசவேதன்மகிழ்ந் துவிளக்கிய
சீலமாகியசெய்கையுனாக்கிலுன்றேகபாவனஞ் செய்யவென்றேவெவ
ச்,சாலவேசங்கரனையிருக்குவேதம்புகழ்ந் துதலத்தினிற்சாற்றுமே.(௰௭)

இத்திறப்பொருட்கேற்பமுகுந்தனூரிலகுதாணின் றிழிந்திடுங்கங்கையே
சித்திரச்சடைமீதினிற்றுங்கியேதிங்கள்சூடுஞ்சிவன்சிவனுயினுன்
மெய்த்தலத்திலெனச்சுகமாமுனிமிக்கபாகவதத்தில்விளம்பலால்
சுத்தமங்கலமாஞ்சிவசத்தமச்சூலபாணியைச்சொல்லலுமாகுமே. ()

உம்பருக்கரசாகிவிளங்கியவுவணவாகனனேயுயர்சம்புவச்,சம்புசத்தந்த
னக்குப்பொருள்சுகந்தருதல்குன்றைத்தழுவியகொண்டல்போல்,வம்பு
மொய்த்த துணைமுலைபாகமவல்லியேதன்மயந்தெளிந்தோர்க்கெலாம்
பம்புகைசங்கமேந்துமுகுந்தனேபரமமூர்த்திசுகந்தரும்பண்ணவன்(

மொழியுமந்நியதேவரிடத்தெலாமுத்தியில்லைமுகுந்தனொருத்தனே
பழுதிலாவுயிர்முத்தியளித்திடும்பரமனென்பதுபாகவதஞ்சொலும்
தழையுநற்குணபூரணஞனதாமோதரன்றனைச்சம்புசத்தத்தினல்
நழுவலாதநற்செஞ்சொனிரப்பியநாரணனைப்பிடித்தினுநாட்டுமே.(உ௰)

ஆனுசாதனிகத்தினுஞ்சம்புவென்றுழியானைப்பகர்ந்திடுமாதலால், தே
னுலாமலர்நான்முகனோடுவெண்டிங்கள்சூடுஞ்சிவன்முதலோர்களைத்
தானுமேனைநிகண்டுவுநூல்களுஞ்சம்புவென்றுதனித்தனிச்சொல்வது
மானனுய்திரமற்றசுகந்தரும்வண்மைகொண்டுவழங்கியதன்மையே ()

இச்சைதன்னொடுஞானங்கிரியையென் றெண்ணுமம்பைகள் மூவரிவர்க்
கெலாம், அச்சுதன்றனிநாயகனுதலானென்னவன்றிரியம்பகனென்பதும்
நிச்சயித்தகிற்புத்தினியப்பெயர்திமலனோதிநிகழ்த்தியசங்கிதை,உச்சரி
த்திடுமாதலிற்றொலைநூலுட்படாதவர்க்குள்ளந்தெளியுமோ. (உஉ)

நலமதாயவிச்சாசத்திதானுநீண்ஞானசத்தியுதன்னுங்கிரியையாம்
புலமைகூர்சத்தியுந்திருமாலினுற்பூதமானபொருளைப்புவனமேல்
அலகிலாவெசுவேதத்திணங்குசிராரணத்துமதருவணத்து நீ
டிலகுசெஞ்சொன்மகோபநிடத்தினும்யாவருக்குமியைப்பகருமே;

கலைமைகூரச்சுதனேயுருத்திரசத்தமாகித்தழைத்தசத்தந்தனக்
கலகிலர்தபொருள்பெறுந்துன்பநோயகலுவித்தலழலமுவித்தலாஞ்

திலகவாணுதலாகமவல்லியேசிந்தையிற்றுயர்தீர்த்திடுந்தன்மைநீள்,மலி
ரிணுண்மணவாளன்செயலெனவாய்த்தசீர்ப்பிரமாண்டத்திலோதுமே()

பிரளயத்திற்பிரமன்சதாசிவப்பெயரினுன்முதலோரைப்பெரும்பயங்
கரசொருபனுமாயழிப்பவன்கண்ணனெனுங்கமலப்புராணநூல்
பரவுவேதனிடத்திற்பிறந்ததன்பாவநீங்கப்பரிந்துதற்பேரிடென் [வே
றுரைசெயாநின்றழுதது கொண்டுதோலுடையினனையுருத்திரனென்பு

அயனிடத்திலுமாபதியுற்பவித்தழுதுருத்திரனும்பெயர்பெற்றது
நியமமானசுபாலோபநிடமுநிகழெசுருதிகமுஞ்சொல்லுமால்
உயருருத்திரநாமமுகுந்தனுக்குள்ளதன்மையுலகோர்க்குஞானமாய்
நயனமாம்பஞ்சமவேதபாரதநவில்சகத்திரநாமத்துமோதுமே. (௨௯)

உற்றதுன்பங்களைபவனுதலாலோங்குமாலையுருத்திரனென்னவும்,மற்றி
வன்சகலர்க்கும்பெரியனுமகிமைகொண்டுமகாதேவனென்னவும், சற்ற
லாதசுகரூபியாதலாற்சார்ங்கபாணிதனைச்சம்புவென்னவும், கொற்றவை
ச்சொரியத்தால்விளங்கும்வைகுந்தன்மெய்ப்பெயரிந்திரனென்னவும்.

தோலினுற்புறம்போர்த்தவுடம்பினைச் சூத்திரப்படிவம்போலியக்கலா
ல்,தாலமளந்தாற்குக்கிருத்திவாசனெனும்பெயர்தான்வந்ததென்
நீலவார்குழலாய்பலவாகியநிகிலலோகநியாமகனுகையால் [னவும்
எலமாமறைபோற்றுமுகுந்தனுமெம்பிரான்றனையீச்சுரனென்னவும்.()

பேசுநாகமடைவித்தல்கொண்டுமால் பேர்பிரசிபெனப்பெற்றதென்
னவும்,ஆசிரித்தவர்தம்மைப்பெருமையோராக்குகின்றவருளின் பெரு
மையால்,கேசவற்குப்பிரமனெனும்பெயர்கிளந்தெடுத்ததெனவுங்கிள
ர்செகம்,ஏசிலாமல்விடுவதுகொண்டுமாலேவிரிஞ்சியெனுமவனென்னவும்

விவிதமானவிலோசனனாகையான்மிக்கமாலைவிருபாக்கனென்னவும், பு
வனசிட்டிசெயலாலரியையேபோற்றுநீள்விச்சுவகன்மனென்னவும், உ
வமையில்லாதவண்டங்களையெல்லாமோங்குசீருதரத்தினில்வைத்தலால்
நவையிலாதவிரணியகர்ப்பனுநாமமூர்த்தியுநாரணனென்னவும் (௩௰)

நிகிலலோகம்வரம்பழியாமலேநிலைநிறுத்திநிகழ்த்திடுநீர்மையால்
சகலவேதப்ராணசொருபனுஞ்சக்கரபாணியைச்சர்வனென்னவும்
தொகையினுன்மிக்க காரணவாச்சியாய்ச் சுருதிவேறுசொலுஞ்சொற்ச
மூகமும்,மகிமைநாரணனைச் சொல்லுமென்னவும் வாய்த்தசீர்ப்பிரமா
[ண்டமுரைக்குமே. (௩௧)

அரிமுகுந்தனநந்தன்பராபரனென்னநாமங்களாரைச்சொலுமவன், ஒருவ
னேயந்தகனுமுயிர்க்குளே யுறைகுவானுமுருத்திரமூர்த்தியும், பெரு

மைசேர்நியந்தாவுஞ்சுவாமியும்பிராணதாரியுமென்றுபல்பேதமாச்
சுரிகருங்குழலாகமவல்லியேசுபாலரோபநிடத்தினிற்சொல்லுமே(௫௨)

அனந்தசாகைகளாகியவேதவேதாந்தநூல்களிலட்சரக்கூறெலாம்
வனைந்ததண்டுளவத்தொடைமாயனுமங்களேயெனவாழ்த்திமதிப்பினால்
புனைந்தசீர்மிருதித்தொகைசொல்லுமப் பொருள்விளங்கப் புவனநிட்
டாந்தமாய்த், தினந்தினந்தொறுமந்தணரோதுமத்தியானவந்தத்தினிற்
[செப்புவார்களே. (௫௩)

சிவருத்திரசம்புமயேச்சுராதிப்பெருந்திருநாமங்கள்செங்கண்மா
யவனிடத்துநிகழ்வதுபோலநாராயணாதிசத்தங்களுமன்னமே
தவமிகுங்கமலாசனநான்முகன்றாழ்செழுஞ்சடைச்சங்கரனாதியர்
எவரிடத்தும்பொருந்திநிகழ்ந்திடாவென்றுவாமனியத்தியம்புமே.()

அயனுமிந்திரனும்பராபரனுமாயனையன்புடன்போற்றிநீ
தியைபுரிந்துமுகுந்தவெமக்கசாதாரணப்பெயர்தந்தருளாயென
தயமேமடந்தவயனுக்குயர்சதானந்தன்வேதனவிரிஞ்சனான்முகத்தனம் [ம்
புயவரோதயன்மெய்ப்பிரமாவெனப்புவனமெங்கும்புகழ்கின்றநாமமு

பக்கமொன்றினிற் பச்சைப்பசுங்கொடி படர்ந்திலங்கும் பவளக்கிரியை
முக்கணும்பர்பிரானுக்குநீறணிமுதல்வனுக்கிரமூர்த்திகபாலிசேர் [நேர்
நக்கனென்றியலுல்வகைநாமமுநல்கினன்றிருநாரணனென்பதும்
கைக்குநெல்லிக்கனிபோற்பிரமமுங்கர்த்தமானபுராணமுங்காட்டுமே.

௯-வது-வந்தனையோக்கியப்பரிச்சேதம்.



தையல்பாகனுடனயனுக்கசாதாரணப்பெயர்சாற்றினனீதலை
வையமேற்பொதுவாகிவிளங்குசாமானியச்சொற்குவாச்சியனும்வன்
பையராவணையானேயவன்சகம்பணிவதற்குமெய்ப்பாத்திரனென்றறு
மையுலாவிழியாகமவல்லிசேர்வாய்த்தவேதமடந்தைக்கியம்புவாள். [ம்

புனிதமாதிருநாமங்களெண்ணுவார்போலநீயம்புலிச்சேகரனையவ்
வனசவேதனிற்றோன்றினனென்றனைமற்றதற்கெதிர்மாற்றமுமேற்சொ
ல்வேன், அனையநாமஞ்சிவனுக்குமாகமத்தனந்தகோடியுளதுநிற்கநின்
மனமுடன்படவந்தனைக்கும்பிரமாணமோதுவெனென்றுமற்றுஞ்சொ
[லுவாள். (௨)

கருதுசூலகவேள்வியிலேநமக்காரபாத்திரன்கைக்கொளுவானென
உரியதோர்பகவீதலினலந்தவோங்குவேள்விக்குமாபதிதெய்வமாய்த்
துறையின்மீதுநிகழ்தலினாலுநற்சதவுருத்திரியத்திலத்தானுவக்
கருகமாம்பலவந்தனைசொல்லுதலாலும்வந்தனையங்கவன்றன்னதே. (௩)

ஆகமக்கொடியவ்வுரைகூறவாரணமடந்தைபகர்வாளரிவையே
ஞ்சகரப்பிறையாணைச்சதவுருத்திரியம்வந்தனைசெப்பியவாறுகேள்
ஊண:புத்தியினாற்றொடக்கத்திலேயுக்கிரத்தின்வழிவானவுன்பொருட்
டாகவேநமவென்றனுமத்திமத்தடைவுசேரனுவாகங்கடம்மிலே. (௪)

பலவிடத்தினும்வாதைசெய்வானெனும்பண்புபுத்திபணிநீள்யயத்தினுஞ்
அலகிலாவெருவந்தனைசொல்லியந்தத்திலேயெங்களாயுப்பசுச்சுதர்
இலகுமாறருளீறுசெய்யாய்கொலென்றிடுதலாலவ் வியல்வந்தனையெலாம்
மெலிவுகூர்பயபுத்தியில்லதுநீள்பாத்துவநிச்சயித்தல்லவே. (௫)

பாரிலிப்படியேபயபுத்தியாற்பணிவதற்கொருபாத்திரமாகிய
கோரவிக்கிரமச்சூலபாணியைக்கூறுசூலகவேள்வியதனினும்
சீரின்மிக்கபடிநமக்காரபாத்திரனெனுந்திறஞ்செப்பியதென்றலும்
தாரமைத்தகுழன்மறைமானுடன்றக்கவாகமத்தையல்விளம்புவாள். ()

ஓதுமிச்சகத்துக்குச்சுவாமியாமொருவனுக்கன்றியுக்கிரஞ்சொல்லுமோ
ஈதுநிற்பப்பயமும்வணக்கமுமிணையிலார்க்கன்றியாவருஞ்செய்வரோ
வேதவுத்தமியேயென்றுரைப்பவுமின்னருளும்வியப்புடனாகமக்
கோதையைக்குறித்திங்கிவைகேளெனக்கோகிலப்பெடைபோலிவள்கூ
[றுவாள். (௭)

அங்கிதேவன்றனையெசுவேதமைந்தானகாண்டமைந்தாம்பருச்சத்தினில்
பொங்குநீள்வய வேங்கைவரிப்புலி போன்றசீற்றம்பொறுத்தருளாயெ
ன, இங்கிதம்பெறவந்தனைசொல்லுமாலிதுவுமன்றிவன்றனையாரணம்
தங்குபஞ்சகமாம்பருச்சத்திலுந்தக்கவந்தனை சாற்றியதன்மைகேள் (௮)

ஒன்றுகேண்முதலாய்ப்பலவந்தமாயோங்குசீர்நமக்காரமுறைத்திடும்
குன்றுநேர்முலையாயிதுவன்றியேகோலமானவிருடிக்குழாத்தையும்[ம்
நன்றிகூர்வந்தனைசொல்லும்பின்னையுநாமவேள்விநடாத்துமிடத்தினு
துன்றுநீதிபுனைசவுளாதியாய்ச்சொல்லுகின்றகபகருமத்தினும். (௯)

கூர்மமாகியசத்திகடம்மையுங்குறித்துவந்தனைகூறுமிக்கொள்கைபோல்
சீரிதாகமணஞ்செயலாகயாத்திரைகடம்மினுந்தீங்கணுகாமலே
ஏருலாவுசகுனப்பக்கிக்கும்வீறேற்றவேதமியம்பிவிதிக்குமால்
பாரின்மீதுபயங்கரபுத்தியாற்பணிந்தயாவும்பாத்துவமோவென்றாள்.()

சேயவாரணவல்லியித்தன்மையைச்செப்பலோடுஞ்சிவாகமவல்லியும்
தூயதாஞ்சதருத்திரியத்தினிற்சொற்சராசரத்தோமங்களைக்குறித்
தேயவேசொல்லியவந்தனைக்கெலாமிந்துமோலியிடையேயடைதலால்
ஆயசங்கரனேசருவாந்தரியாமியென்பதற்கையமுண்டோவென்றாள்.()

அந்தவாய்மொழிக்காரணவல்லியுமாலகண்டனையந்தரியாமியென்
றெந்தநூலுமியம்புவதில்லையவ்விறைவனான்முகன்றந்தவரத்தினால்
முற்றுமொன்னவைமூர்த்தமதாகியமூன்றையுமையாலவன்மூவுலகத்தொடும்
தொந்தமானசொரூபகனென்னவேதாயவந்தனைசொன்னதுகாணென்றாள்

ஆரணக்கொடியிம்மொழிகூறநீடகிலரூபமனைத்தையுநீயெனத்
தாரணிக்குப்பராபரன்றானலாதவனைமாமறைசாற்றிடுமோவெனச் [ம்
சீரணைந்திலங்கலிச்சிவாகமச்செல்வமங்கையுஞ்செப்பினள்செப்பலு
வாரணைத்ததுணைத்தனவாரணவல்லிமீளமறுத்திரஞ்சொல்லுவாள். (௰௫)

ஆவிநீசகநீயண்டரண்டநீயன்னநீதெள்ளமுதநீபற்பல
தேவுநீயெனவேயெசுவாரணந்தேக்குநீரைச்சிறப்பித்ததிதலால்
தாவுமக்கினியோடத்தணரையுஞ்சகலதேவதையென்றுதனித்தனி [ள்
பூவிலோதியவப்படிமுக்கணற்புதனையும்மறைபோற்றிற்றென்றோதினா

ஆகமக்கொடியம்மொழிகேட்டலுமந்தணாளரையக்கினித்தேவனை
மேகநீரைப்புகழ்ந்ததுபோலவெவ்விடையிறையையும்வேதம்புகழ்ந்தது
பூகநேர்களத்தாரணவல்லியேபுன்மையீதுபுகன்றாய்புராரியாம் [வன்
ஏகநாயகனேவந்தனைக்கெல்லாமிறைவனென்பதற்கின்னமொன்றுனு

தஞ்சமானதயித்திரியத்தினிற்றானுநிற்பச்சகலதெய்வத்தையும்
சிஞ்சுமாரப்பிரசாபதியுடல்சேருறுப்பெனச்செப்பிச்சிரமது [வர்தம்
பஞ்சின்மெல்லடியாய்வந்தனைக்கெலாம்பாத்திரன்வடிவென்றவற்றேற
புஞ்சகத்துளவந்தனைபாத்திரன்புராரியென்றுபொருட்படுமென்னவே

இனையசொல்லியவாகமமென்கொடிக்கேற்பவாரணவல்லியியம்புவாள்
அனையதன்மையில்வந்தனைபாத்திரரானதேவரநேகருண்டாகையால்
தொனிசெய்பொற்கொடியேத்துஞ்சிவனையேசொன்னதென்னப்பெ
றாதுசொன்னாலுமென்,இனைமலர்ச்சிஞ்சுமாரற்கவன்றனைச்சென்னியெ
[ன்றுரைசெய்ததுமில்லையே. (௰௭)

செய்யவந்தனைப் பாத்திரன்றானுமாய்ச் செப்பிடுஞ்சிரச் சொற்சிஞ்சு
மாரனார், துய்யமேலவர்தாங்கெழுத்தெட்டெனச் சொல்லலானுந் துலங்
குந்தன்மைத்தனை,மெய்யில்வீறுபுனையுமூர்த்தாவெனமேல்விளம்பிவி
வரிக்கையாலுமப், பொய்யிலாச்சிரச் சத்தமுகத்திலோர்பொருளுறுப்
[பைப்புலப்படச்சொன்னதே. (௰௮)

அன்னவன்றன்சிரவுறுப்புக்குமேலானவுச்சிகனற்றெய்வமென்கையால்
முன்னுரைத்தசிரவுறுப்பானவன்முக்கியப்பெயராய்மொழியப்பெறா
ன்,இன்னகாரணத்திற்பவவன்றனக்கின்னுயிர்க்கிடமாமிதயத்தலந்
தன்னைவிண்டுவெனலாற்பிராணனைத்தாங்குறுப்பிற்றகுமுறுப்புள்ளதே

வஞ்சிமெல்லிடையாயிதுவன்றியேவாய்த்தவிஷ்ணுபுராணத்திரண்டதாம்
அஞ்சகத்தினிலீரிரண்டாகியவத்தியாயத்தரியவதாரமாய்ச்
சிஞ்சுமாரசரீரத்திருந்தும்சாதிப்பெருஞ்சக்கரஞ்செலுத்துஞ்செயல்
தஞ்சமாகச்சொலுமதனாற்சுரர்தாஞ்சரீரஞ்சரீரியச்சார்ங்கியே. (௨௰)

செங்கண்மாலினவதாரமாகியசிஞ்சுமாரனைச்சிந்தைசெய்வார்க்கெலாம்
தங்குவீடருமேடவதையென்னவுஞ்சகலவந்தனைதாரகனென்னவும்
பொங்குசெஞ்சொற்றயித்திரியத்தினிற் புலமைகூரப் புகன்றதின் தன்
மையால்,எங்குநாரணனேவந்தனைக்கெலாமிறைவனென்னவியம்
[பினாள். (௨௧)

ஒண்ணுதற்றிருவேயிமையோர்களையும்மதாயவுயர்ந்தவனையெல்லாம்
கண்ணுதற்குச்சமர்ப்பணஞ்செய்துநீர்காமியங்கள் கைக்கொண்டிடுவீ
ரென,வெண்ணுசீர்கொளிருக்கிலுரைக்கையாலேயனைவர்தனக்கெல்லாமு
ரியராம்,விண்ணவர்க்கு மாலேசரணியன் வேறுவந்தனைக் கார்விதித்தா
[ரென்றாள். (௨௨)

சுருதிவல்லியதுகேட்டினைசெய்வாள்சுரனாநோக்கித்தொகையேகுறிக்கி
ற்றும், கருதிநீங்களுங் கட்குச்செயுநமக்காரம்யாவையுங்கண்ணுதற்கேமி
னென்,றுரைசெய்தன்மைசுருதியிலில்லையவ் வும்பரைக்குறித் தங்கட்கு
ருத்திரன்,தருவனென்றதுகாமியமன்றியே தக்கவீந்தருமென்றதில்லை
[யே. (௨௩)

ஆதலாற்றம்பிற்றாழ்ந்தவர்வந்தனைக்கருகாற்புதராகியதன்மைபோல்
ஓதுமாபதியுஞ்சுரர்வந்தனைக்குரியனந்தவுமாபதிவந்தனைக்
கேதுபூதரும்வேறுளவொன்றலுமேற்றவாகமவல்லியிலங்குசீர்
வேதவல்லிமதிமுகம்பார்த்தொருவிவரவாய்மை விரித்துவிளம்புவாள்.

ஈறிலாதநுதல்விழித்தேவனேயாவருக்குமிறைவனென்றல்லவோ [டில்
கூறும்வானவர்தம்முளொருத்தனைக்கூட்டிவாவெனிற்கூட்டிப்பணிந்தி
ஆறணிந்தவன்சீறுமென்றேயிருக்கதனிலேயிரண்டாமட்டகத்துளே
வேறதாகவிரித்துரைக்கின்றதம்மெய்ம்மைவாய்மையை வேறும்விளங்க
வே.(௨௫)

வாசவன்றனையங்கியைமித்திரன்வருணனைக்குருவைச்சோமனைப்புகழ்
விசுமச்சுவினித்தேவரையெலாம்வேறுவேறழையாதழைத்தைப்ருகத்
தீசனைத்தனியேயழைக்குந்திறமேன்றசீரொசுச்சாகையுங்கூறலால்
பேசுபைங்கிளியேதனிநாயகர்பேரையன்றிப்பிறித்தங்கழைக்குமோ. ()

என்னவாகமவல்லியுரைப்பமற்றிவளுநீயிங்கியம்பியமந்திரம்
தன்னிலேமகதேவனைவேறறத்தானழைத்தவத்தன்மையுமன்றியே
மன்னுமிந்திரனீரமகேந்திரன்வருணனென்பவரையுந்தனித்தனி
அன்னசாகைதனிலங்கழைத்தலாலவர்கடாமுமதிகர்களாவரோ. (௨௭)

ஆயிழாயிக்குநீவிரித்தோதியவன்னமந்திரத்திற்பொருள்கேண்மதி
நீயநேயனுகாமத்பிரார்த்தனைசெய்துகொள்ளுஞ்சிலர்மகிழ்ந்தாயிர,
வாயராவணியுஞ்சங்கரன்றனைவாழ்வயித்தியருக்கும்வயித்தியன்,
நீயெனும்படியாங்களறிந்துணநீறுபூசியநிலமிடற்றனே. (௨௮)

உன்றனக்குலகத்திலிணையிலாவும்பர்தம்முடனொக்கவணங்கியும்[இலேயி
நின்றுமற்றவர்தம்மோடழைத்துமுன்னெஞ்சில்வெஞ்சின நீடுதல்செய்
இன்றெமக்குமருத்துவவித்தையாலின்பமாக்கென்றிரந்தனரித்தனை
மன்றலஞ்சடையானிதனாற்பரவத்துவென்றுவகுத்திடலாகுமோ. (௨௯)

தக்கசூட்டத்தவரையழைத்தபின்றனியழைக்கத்தகுந்தமராயினோர்
அக்குழாத்திலுயர்ந்தவர்தாழ்ந்தவரானபேரிருவோர்க்குமடுக்குமால்
மைக்கணாய்தக்கனையந்தமந்திரம்வன்மைகூரவயித்தியனென்னலால்
மிக்கவானவர்க்குப்பின்பிழைப்பதும்வேதநீதியில்வேண்டுமுறைமையே

அன்னதெய்வகையென்னில்வயித்தியரானவச்சுவினித்தேவதைதனைத்
தன்னும்வேள்வியில் வானவர்தம்முடன் சோமபானச்சுவையருந்தாது
நிந்நிலத்திற்புறக்கணித்திட்டனனொன்றும்வேதமிதுநிற்கமுக்கணன்[வா
தன்னைமுக்கியனென்னினுமங்கழைத்தவரின்முக்கியனென்னத்தகுமென்றான்.

பாலைநேர்மொழியாரணவல்லியிப்படியுரைப்பப் பசும்பொற்குழைது
ரந்,தாலகாலவிடமெனச்சேலெனவழகுசேர்விழியாகமவல்லியும்,ஏலவா
ர்குழலாய்வந்தனைக்கெலாமேற்றபாத்திரனேரணிமூவிலைச், சூலபாணி
யனேயென்பதற்கியான் றோன்றவொன்றினிச் சொல்வெனென்றோது
[வாள். (௩௨)

நாரணற்குயர்சங்கடையாளமுநான்முகற்குநளினக்குறியும்வாழ்
தீரதர்க்குளுயரிந்திரற்குநீடேசகூர்வச்சிரலாஞ்சனையுமாய்ப்
பாரிடத்திலமிதயஞ்சொல்லுமப்பரதசாத்திரப்பாவனை நூலிலே
ஆரைநீயஞ்சலிமுத்திரையினாலவனைவைப்பதறிந்துகொணீயென்றாள்.

சுருதிவல்லியிதற்குநகைசெயூஉத்தூயவேதபுராணத்துறையினால்
உரியவுத்தாஞ்சொல்லப்பெறாதநீயோதவேலையிலோடத்தைவிட்டருஞ்
சுரைமிதப்புக்குடுக்கையைக்கைக்கொளத்தோன்றுதுன்மதி சூழ்ந்துள
பேர்கள்போல்,பரதசாத்திர நூல்கொண்டுவென்றியேபகர்தறன்னையும்
பார்த்துமென்றோதினான். (௩௪)

மாலினார்க்குவலம்புரிச்சங்குநால்வதனனுக்குவரபுண்டரீகமும்
கோலவிந்திரனுக்குயர்வச்சிரக்குறியுமென்றுநீகூறியகொள்கைபோல்
மூலநெற்றியிற்பற்றவதோமுகமுன்னுஞ்சிமுகமுத்திரையினால்
பாலலோசனனுக்குமமிதயம்பன்னுமாதிபரதத்திலோதுமே. (௩௫)

பழுதிலாலகுமாதங்கமாகியபாதசாத்திரப்பாணிவிகற்பினில்
அழகுநீள்சுரஞ்சேரஞ்சலியனைத்தமாருக்குமணிநுதலஞ்சலி
விழுமிதானகுரவர்க்குமார்பினின்மேவுமஞ்சலிவேதியர்க்குமெனப்
பொழிவுகூரஞ்சலிமூத்திரையிணைப்பூதலத்திற்பொதுப்படக்கூறுமே.

மற்றுமஞ்சலிமூத்திரையைச்சொலுமாவராகிதனக்குமீதன்றியே
பெற்றிமிம்பிரமத்தலமூர்த்தியாய்ப்பேசுநாடகசாலையிற்பேர்பெறும்
கொற்றநான்முகனுக்குவிசேடமாய்க்கோலமானபுட்பாஞ்சலிகூறுமா
நெற்றிலோசனற்கீதுகொண்டோமினேநீள்பரத்துவநீநிச்சயித்தமே[ம்

அலங்கலோதியாய்மற்றிதுநிற்கநீட்டிலபஞ்சதாளேசுரநூலினில்
நலங்கொடாளத்திருக்கோயிறன்னிலேநண்ணிவாழ்ந்திடு நாரணனென்
னவும், துலங்குதாளத்தினிலெழுநாதமேதூயநக்கன்சொரூபமதென்ன
வும், இலங்குநாதத்தினுள்ளுயிராகுவானேசிலாவந்தநாரணனென்னவும்

இனையதாளத்தெழுந்திடுநாதநல்லிசையினாலேயவற்கன்புசெய்வதும்
வனசவுந்தியினான்முகனைத்தருமாலையேமகிழ்விக்குமதென்னவும்
புனிதமாதவத்தாளநன்னுதமிப்புவனமண்டலமேலுகப்பாரெலாம்
அலகனுகியவந்தனைமாலவனருளின்மூத்தியடைகுவனென்னவும் (௫௧)

ஊதலாதுமிராகப்பிரகணத்தின்படமானவிசையின்றிறமெலாம்
தாதுசேருங்கருங்குழற்றையலேசாமகானவிகற்பங்களென்னவும் [ம்
ஓதுமிப்பெருஞ்சாமச்சுருதிமானுருவமென்னவுமுற்றவித்தன்மையா
கிதவின்பமுணர்வார்க்குமூத்திதான்கிட்டுமென்பதுங்கேழ்றவோதுமே



### ௫-வது-வந்தனைக்குரியதாரகப்பிரமசொரூபத்தை சிவனுபதேசித்தப்பரிச்சேதம்.

இங்குமற்றிதுநிற்கமதிப்பினாலெண்ணிலக்கமிலாவந்தனைக்கெலாம்
பங்கயத்திருநாயகனாகியபரமனேவரபாத்திரனென்னவும் [குலாய்
செங்கயற்கட்கருங்குழற்பைந்தொடிச்சிற்றிடைப்பெருந்தேர்மணியல்
மங்கலச்சொற்சிவாகமவல்லியேவகுத்துரைப்பன் மனங்கொண்டுகேட்
[டியால். (௧)

பிரமனும்மருத்தனுமீச்சுரப்பெயரினனுமெய்ப்பேர்பட்டதேவரும்
பரவுவேதமுமங்கமுஞ்சாகையும்பலபுராணமும்பானுவுஞ்சோமனும்
சுரருமேனையசுரருமாந்தருந்துவாதசாதித்தியருந்துலங்குசீர்
மருவுமட்டவசுக்களும்பன்னொருவர்க்கமானவருத்திரர்களும். (௨)

இலகுமெண்டிசைப்பாலருங்காலமுமியலுமர்த்தகன்றனுமியாகமும்
சுலபமானமகாதேவனும்மயேச்சுரனுமீன்முதற்றோன்றவதாரமும்
நிலையினிற்பனவுந்திரிகின்றவுநிகிலவிச்சுவமுந்நியந்தாவுதீ
டலகிலத்தக்கரணசதுக்கமுமாவியுஞ்சருவாந்தரியாமியும் (௩)

பிரணவாக்கரமுமுயர்தாரகப்பிரமமும்மறைபேசிடுமேழ்வியா
கரணமுங்கிரகங்களுந்தாரகாகணமும்யோகமுங்கன்மஞானமும்
உரியவண்டத்தினுள்ளும்புறம்புமாயுலவுவானுமொப்பாருமிக்காருமில்
அரியுமத்திருவுங்கலைவாணியுமச்சுதானந்தவிக்கிரகத்தனும். (௪)

என்னவோதுஞ்சகலமுநீயெனவேத்தியங்கமிலக்கணங்கூறவே, நன்னய
த்தினவிலும்பதந்தொறுநாட்டிநாட்டிநமோநமவென்றவச், சென்னிவ
ந்தனையெல்லாமிராமச்சந்திரனையேகுறித்துச்செய்கைவந்தனை, பன்னு
சீர்புனையும்யாச்சவற்கியோபநிடமோதிப்பரத்துவங்காட்டுமே. (௫)

அலகிலாதபெருவேள்வியின்வடிவானநாரணனையாதரத்தினால், பலபகா
ரம்பணிந்தரியேயுனைப்பணியுமிந்தப்பணிவுகளன்றியும், தலைமைகூரந்த
ரியாமியானநின்சரீரபூதர்களாய்ச்சமீபத்திலே, இலகுதேவர்க்கிறைஞ்சி
யவந்தனையெவையுநின்பொருட்டேயெய்துமென்னவே. (௬)

சீரிணங்குமெசுவேதசாகையிற்செறியுமட்டகமூன்றினிலேழதாய்
நேருநற்பருச்சத்திருமூன்றெனநின்றதோரனுவாகநிகழ்த்துமால்
வரணிந்தபிரமசொருபனுயிலகுவிஷ்டுவுக்கேநமவென்றுபூந்
தாரணிந்தகுழலாய்பிரமமச்சத்துமந்திரந்தன்னிலுஞ்சொல்லுமே. (௭)

திகிரிமாலினவதாரமாகியசிஞ்சுமாரப்பிரசாபதிதன்னையே, சகலவந்த
னைக்கும்பாத்திரனெனத்தரணிபோற்றுந்தயித்திரியஞ்சொலும், அகில
காரணனாகிப்பராபரனானவச்சுதனுக்குயர்வந்தனை, ககனநேரிடையாய்
மெய்ப்பொருளெல்லாங்காட்டும்பாரதகாதையிலோதுமே. (௮)

மன்னுபாகவதத்திற்றசமமாய்வாய்த்தகந்தம்வச்சாபகரணத்தில், அன்ன
வாகனன்கண்ணன்பாதத்துவமடைவிலோதியடியிணைதாழ்ந்தமை, முன்
னியோதுமுதற்பஞ்சகத்திலேமூதிரும்விண்டுபுராணமுமுத்தொழில்
தன்னைவல்லபராபரமூர்த்தியேசார்ங்கியேசரணென்றமைசாற்றுமே. ()

ஈனமாற்றுநற்பாகவதத்தினிலீரிரண்டாங்கந்தத்திருபத்துமூன், ஞானசீ
ரத்தியாயமுக்கட்சிவனன்புசேர்பிரசேதர்களுக்கொரு, தேனுலாவுபுது
மலர்ப்பொய்கையிற்செம்பொன்மால்வரைபோல்வந்துதோன்றியே
ஞானநாரணனார்தம்மகிமையைநாவினாலுபதேசித்தநாளிலே. (௰)

உலககாரணனேநமமிக்கபேரோதுபேர்பெறுமுத்தமனேநம
அலகிலாதுயருஞ்சருவாந்தரியாமியேநமவச்சுதனேநம
இலகுமுத்தொழினாயகனேநமவெற்றையைத்தருமுத்தியனேநம
பலவுயிர்க்குயிராகியிருந்துமோர்பற்றிலாதபராபரனேநம. (௰௧)

மங்கலக்குணபூரணனே நமவாய்த்தமுத்தியளிப்பவனே நம
துங்கவேள்விச்சொரூபகனே நமசுத்தசாத்துவிதச்சொருபா நம
சங்குசக்கரபாணியனே நமசச்சிதானந்தனே நமவென்றுகொண்
டங்குநின்றுபணிந்தமையாழிகுழவணிவோர்நின்றறியப்பகருமே. (௰௨)

உலகமீதுபராயணன்யாவன்மற்றோங்குமுத்திக்குபாயசன்மார்க்கமே
நலமில்லவத்தனையார்க்குரித்தாகுமாராதனைக்குரியானெவனையவென்
றிலகுமேற்றருமன்விட்டுமனையங்கேத்திநீயிதியம்பிடுதென்றெனச்
சலனபுத்தியிலாதவவ்விட்டுமன்றுன்மகிழ்ந்துசரசயனத்திலே. (௰௩)

முரசுயர்த்தவசேனுலகுக்கெலாமூலகாரணனுணமுகுந்தனே
பரவவேத்தநினைக்கவருச்சனைபண்ணமுக்கியபாத்திரனானவன் [ன
கருதிமுத்திபெறுகைக்குமற்றவக்கண்ணனல்லது கண்டதொன்றில்லெ
அருளுறப்பகர்ந்திட்டதுபாரதத்தானுசாதனிகத்தினிலுள்ளதே. (௰௪)

மற்றிதன்றியும்பாரதத்தொன்றுகேள்வான்வழங்குமழைத்துளி நீரெலா
ம்,சொற்றரங்கக்கடலினைச்சேர்வபோற்றொகுதியான சுரரையெல்லாங்
குறித்,தாற்றிறைஞ்சிடுவந்தனையாவதுமோங்குகேசவனு மொருமூர்த்தி
யைப்,பற்றியேயடைகின்றதெனுந்திறம்பண்புகூரப்பகர்ந்திருக்கின்
[றதே. (௰௫)

அனையசொற்குப்புவனதிட்டாந்தமுண் டானதேதெனிலந்தணர்யாவர்
க்கும்,வினையமாமனுட்டானவந்தத்திலேவேறுவேறுள விண்ணோர்களை
யெலாம்,நினைவினால்வந்தனைசெய்தபின்னையிந்நீள்சுலோக நிகழ்த்திமு
டித்தலால்,வனசநாபியனேயனைத்தாகியவன்மைவந்தனைக்கும்வரபாத்தி
[ரன். (௰௬)

கருதுலோகத்தவரானுநீநமக்காரபாத்திரனென்றகமறைக்களத், தொருவ
னுனும்பணிதற்குரியவனோங்குநாரணனேயெனுமுண்மையைச், சுருதி
யாலுமுபநிடத்தாலுநீள்சொற்புராணத்தினாலுந் துலங்குசீர், மிருதியா
லுமுரைத்தனெனென்றனன்மேன்மைதங்குமவ்வேதமடந்தையே. ௰௭



௭-வது- மங்கலகுணப்பரிச்சேதம்.

ஆயவினையகூறவாகமவல்லிசொல்வாள்
மாயனொருவன்றானேவந்தனைக்குரியனென்ன
நீயிதுபகர்ந்தாய்பின்னேநிறைந்தவந்தனைகட்கெல்லாம்
பாயும்வெவ்விடையினானேபாத்திரனல்லனாகில். (௧)

ஆச்சரியங்களானவறுவகைக்குணங்களோடே
சாச்சுதமாகநின்றுசகலசற்குணமும்பெற்றுப்
பூச்சியமானமேலோர்புகழ்ந்திடும்பகவற்சத்த
வாச்சியனுமோவன்றனென்பதுவகுத்துச்சொன்னாள். (௨)

அரீய்மாமறைமானச்சொற்கழகுறநகைத்துமின்னே
இரவலாபரணத்தைப்பூண்டுடமக்கியைந்திருந்ததென்னத்
தெருவினிற்குலாவுவார்போற்சிவனையும்பகவானென்றாய்
உரைசெயப்புதுமைதன்னையுள்ளவாறறிதியென்றாள். (௫)

அம்மொழியமையக்கேட்டவாகமவல்லிமுக்கட்
செம்மலையனையதேவேசிறந்திடும்பகவானென்னும்
மெய்ம்மைநானுனக்கொப்பாகவிரித்தபின்மிகைநீசொன்ன
இம்மொழியுனக்கேயன்றோவென்னமேலியம்பலுற்றாள். ()

பகவனென்கின்றசொற்குப்பயன்பரிபூர்ணமான
சகலயிச்சொரியம்வீரஞ்சம்பதைகீர்த்திஞானம்
மகிமைவைராக்கியமென்னுமங்கலகுணங்களிந்தத்
தகைபெறுகுணங்கணக்கன்றனக்குளதன்மைநீகேள். (௬)

அரியவிச்சுரசத்தத்தாலயிச்சொரியத்தைச்சொல்லும்
விரவுருத்திரசத்தத்தால்வீரியம்விரித்துக்கூறும்
மருவுறுசருவசத்தம்வரம்பிலாஞானமாகும்
சிரமமாஞ்சிவசத்தத்தாற்கீர்த்தியைக்கிளத்துமன்றே. (௭)

மன்னுகாமாரிசத்தமதித்தவைராக்கியமோதும்
தன்னியற்கிரோட்டசத்தஞ்சம்பதைதன்னைச்சாற்றும்
இன்னனசத்தத்தாலேயெண்ணியகுணங்களாறும்
மன்னியோர்பாகனானகண்ணுதற்குள்ளதாமே. ([illegible])

நிகழுமிக்குணங்களன்றிநியமனந்திருதிசிட்டி
தருதவம்பொறுமைசாந்தஞ்சத்தியந்தருமமென்னும்
அகணிதகுணங்களெல்லாமவனியல்பாகையாலே
பகவனென்றுரைக்குநாமம்பசுபதிதனதேயென்றாள். (௮)

அளிகுலாவியகாரோதியாகமவல்லியச்சொல்
தெளிவுறவுரைத்தலோடுஞ்செழுமறைச்செல்விசொல்வாள்
வளர்மதிச்சடையினானைமங்கலகுணங்களாலே
அளவிடற்கரியானென்றுமவனையேபகவானென்றும். (௯)

சுருதியிற்புராணந்தன்னிற்சொற்பிரமாணங்காட்டிக்
கருதியுத்தரித்திடாமற்கற்பனைகதைசொல்வார்போல்
உரியநாமங்கள்கொண்டேயுவமையாற்பொருளைக்கூட்டிப்
பிரகிருதுரைத்தாலத்தைமெய்யெனக்கொள்வாருண்டோ ()

நிகழுநாமங்கள்கொண்டேநிச்சயித்துரைக்குங்காலை
திகழ்வுறுஞ்சருவனென்றுஞ்சித்தசவயிரியென்றும்
பகவனென்றும்பேர்பெற்றார்பவுத்தனுமருகன்றானும்
அகிலமேலவரைநாமிங்கதிகனென்றெண்ணலாமோ. (௰௧)

தக்கணைப்பகவானென்றுநாட்டிநீகூட்டிவைத்த
தக்கவீச்சுரசிவாதிசகலசத்தங்களுக்கும்
முக்கியப்பொருளாந்தெய்வமுகுந்தனென்றுரைத்தேன்றானே
அக்கதையிங்குச்சொன்னாலவையுமோர்க்கடுத்திராதே (௰௨)

நாரணமூர்த்திதானேநவையிலாக்குணங்களாலே
பூரணனென்பதற்குப்புராணமெய்ப்பொருள்களாலும்
ஆரணமொழிகளாலுமனைத்திதிகாசத்தாலும்
ஏரணிபிரமாணங்களிசைப்பெனென்றெடுத்துக்கொண்டாள்

உத்தமவிருக்குவேதத்துபயவட்டகத்திரண்டாம்
அத்தியாயத்தில்வர்க்கமவையிருபத்துநாலில்
வைத்தவைகத்திகிரிமாயன்மங்கலகுணங்கள்வான்மீன்
எத்தனையெனக்கண்டாலுமெண்ணரிதென்றுகூறும். (௰௪)

மருக்குலாங்குழலாய்மாயன்மங்கலகுணங்களெல்லாம்
பெருக்கமேதிணியின்மீதுபிறந்தவர்பிறப்போர்நிற்போர்
இருக்கிலாவுளத்தராகித்தேரினுமுடியாதென்ன
இருக்குவேதத்துவேறுமியைத்திடவிசைக்குமன்றே. (௰௫)

விண்டுவினுடைமையானவீரியகுணங்களெண்ணிக்
கண்டிடத்துணிதல்பாரிற்கழிதுகள்கணக்கிட்டேற்றிக்
கொண்டிடலொக்குமென்னக்குறித்தெசுவேதத்தாதி
பண்டைக்காண்டத்திரண்டாம்பருச்சத்திற்பகருமாதோ. ()

பாவமுஞ்சிறையுந்துன்பும்பசியுமில்லாதானென்றும்
கோவைமங்கலங்களானகுணமெலாமுடையனென்றும்
தாவுமிக்குணங்களெல்லாந்தற்சுபாவத்தனென்றும்
மேவுசாவித்தைதன்னில்விண்டுவைப்புகழுமன்றே. (௰௭)

இருமையேழுலகுபோற்றுமிராமச்சந்திரப்பிரானை
அரியுலாங்குழலாய்நாற்பத்தாறுகால்வேறுவேறு
மருவுமந்திரங்கடோறும்வகையுறப்பகருமென்று
பரவுசீர்பாச்சவர்க்கவுபநிடம்பகருமன்றே. (௰௮)

கணிதமில்குணங்களெல்லாங்கண்ணனுக்குளதென்றெண்ணித்
துணிபவர்மூத்தரொன்றுஞ்சுபாலனேபநிடஞ்சொல்லும்
மணியெனத்துலங்குமேனிமாயனைப்பகவானென்று
பணிதிகழ்கின்றகெற்போபநிடமும்பகருமன்றே. (௰௯)

அகிலெல்லாமணைந்தகொங்கையன்னமேயதனுக்கேற்க
மகாவாருதியினுள்ளமணலெலாமெண்ணினாலும்
திகழுநற்கமலநாபன்திவ்வியகுணங்களெல்லாம்
தொகையிடற்கரியவென்றுசொல்லுமச்சியபுராணம். (௨௰)

விற்றொடுத்தொருவன்வானில்விட்டவெஞ்சரமவ்வானில்
சற்றிடமின்றியேகச்சத்தியற்றழியுமாபோல்
கற்றவர்தாமுமான்மங்கலகுணங்களைத்தம்புந்திக்
குற்றனபுகழ்வரொன்னவுரைத்திடும்விண்டுதன்மம். (௨௧)

செங்கண்மாயவனையுன்றன்றிருவவதாரத்தொன்றின்
மங்கலகுணங்களெல்லாமணல்பனித்திவலைவான்மீன்
இங்கிவையெண்ணினுமெண்ணமாட்டார்களெஞ்சில்
சங்கையற்றவரும்பன்னொடாங்கணக்கிடினுமென்றே (௨௨)

பையவாரணத்தான்வச்சாபகரணஞ்செய்துமீள
வையமேல்வந்துபாதம்வணங்கிவாழ்த்தியதோர்வாய்மை
செய்யபாகவதத்தென்னுந்தெசமகந்தத்திற்சீரார்
ஐயிரண்டுடனேநாலாமத்தியாயத்திலுண்டே. (௨௩)

சகலமங்கலங்களானசற்குணராசியாலே
அகணிதனாயினேனுமணிமையேமுதலெட்டான
தொகுமயிச்சொரியத்தானுஞ்சுத்தசாத்துவிதத்தானும்
பகவனுமுடிவிலானும்பரம்பனைப்பரமனென்மே. (௨௪)

சத்திரயாகஞ்செய்நாட்சரசோதிநதியின்றீரம்
நித்தராமுனிவரெல்லாநிருபணஞ்செய்ததன்மை
பத்ததாங்கந்தத்தேயெண்பத்துநாலாகிநின்ற
மெய்த்தசிரத்தியாயம்பிருகுவிஞ்ஞானத்துண்டே. (௨௫)

அன்னகந்தத்திலெண்பத்தைந்தாமத்தியாயம்
தன்னிலச்சுருதிபோற்றத்தழைத்தகீதையினின்மாலைப்
பன்னுநற்குணங்களாலேபரிமிதந்தானிலானாய்
மன்னுசீர்ப்பகவானேமாமுகில்வண்ணன்றானேயென்றும்.

பங்கயன்முதலினேரைப்பகுதிசம்பந்தராக்கி
அங்கெலாமுறைத்துபற்றற்றணிமையேமுதலாமட்டு
மங்கலைச்சூரியாகிவாழ்கின்றாய்வாழியென்றே
பொங்குநால்வேதந்தானேபுலப்படப்புகழ்ந்ததுண்டோ.()

மதுமலருந்தியானைமங்கலகுணங்கட்கெல்லாம்
பதியெனப்போற்றிவச்சாபகரணஞ்செய்தநாளில்
சதுமுகன்பகர்த்ததன்மைத்தலத்தினிற்சாற்றுமன்றோ
பதுமமாம்புராணத்துடைம்பத்தொன்றுமத்தியாயம்(௨௭)

திவ்வியகுணங்களாறின்றிறத்தினைவிரித்துக்கூறின்
அவ்வகைக்குணத்தான்மிக்கானச்சுதனவனேயன்றி
மெய்வழிப்பகவானுவான்வேறினியில்லையென்று
செவ்வியோர்புகழுகிற்புத்தினியசங்கிதையுஞ்செப்பும். ௨௯

சாண்டிலமிருதியூடுஞ்சத்தமாமுனிவர்ஞானம்
தூண்டுவிண்டுவின்புராணந்தருவருக்குபதேசித்தல்
காண்டிடுமிடத்துநீதிக்காசிபாதிதிக்கோதும்
பாண்டவர்காதையானபஞ்சமவேதத்துள்ளும். (௩௰)

துரியமந்திரமாய்ச்சொல்லுந்துவாதசாக்கரமதான
பிரமவித்தையினின்மேலோர்பேசிடும்பகவனுமம்
புருடவுத்தமனுமாலேபொதுவறவுடையானென்று
பரிவுறச்சகலலோகம்பாடமாய்ப்பகருமாதோ. (௩௧)

அந்தமின்ஞானஞ்சத்தியதிகயிச்சொரியம்வீரம்
முந்தியபலந்தேசெல்லாமுகுந்தனுக்கேயுண்டென்றும்
மந்திரசாத்திரத்தின்மாவிலக்குமியதான
தந்திரப்பகரணந்தான்றகவுறச்சாற்றுமன்றோ. (௩௨)

சென்மமாரணங்களென்னுந்தீக்குணமில்லாதானும்
நன்மையாங்குணமுள்ளானுநாரணன்றானேயென்றும்
தொன்மையாம்பிரமாண்டத்திற்சொல்லுமத்துலங்குமாலை
வன்மிகராமநூலுமங்கலகுணத்தானென்னும். (௩௩)

மிக்கிடும்பரமஞானவிருத்தர்களெனக்குமுன்னாள்
ஒக்கநற்குணங்களெல்லாமுடையவன்மாலேயென்றார்
அக்குணமுடையமாலிவ்வசோதைநற்தனனேயென்று
தக்கவீட்டுமன்சொல்பாரதச்சபாபருவஞ்சாற்றும். (௩௪)

அனைத்துலகத்துளோருமநேகமாயிரகாலங்கள்
நினைத்திருந்தெண்ணினுநீள்கடற்றுயிலுமாயன்
கனத்தமங்கலகுணங்கள்கணக்கிடமுடியாவென்றும்
பனைத்தடக்கொடியான்வேதபாரதத்துரைத்தான்மன்றே()

சதுமுகப்பிரானைப்போலத்தழைத்தவாணாளுங்கோடி
வதனமண்டலமுநாவுமாச்சரியமிலாநெஞ்சும்
சிதைவறப்படைத்தபோதுஞ்செஞ்சுடர்த்திகிரிமாலே
தனைவுறநிறைந்தவுன்றன்சகலமங்கலகுணத்தில். (௫௬)

பல்பதினாயிரத்தோர்பாகமாத்திரத்தைத்தானும்
சொலடவருளரோவென்றேதுதித்தரனுரைத்தமாற்றம்
வெல்பொருள்வராகந்தன்னில்விரவியவெழுபத்தைந்தாய்ச்
செல்வுழியத்தியாயந்தெளிவுறச்செப்புமன்றே. (௫௭)

---

அ-வது-பகவற்சத்தார்த்தவிவரணபரிச்சேதம்.

புருடனென்கின்றபேரும்பொங்குசீர்ப்பகவானென்ன
மருவியநின்றபேரும்வாசுதேவனதேயென்றும்
பரவுமப்பகவற்சத்தப்பதப்பொருள்ஞானஞ்சத்தி
விரவியபலமேகீர்த்திவீரியமயிச்சொரியம். (௧)

சொன்னவிக்குணங்களெல்லாந்துளவமாறனதேயென்றும்
பன்னுமத்துளவமாலேபழிக்குணமிலானென்றும்
அன்னவனல்லாதாரையழைத்திடும்பகவனாமம்
பன்னுபசாரமென்றும்பராசரபுராணங்கூறும். (௨)

சுருதிகளின்னவாறுசொல்லியசொல்லினாலும்
மிருதிகளதனுக்கேற்பவிளம்பியவிபரத்தாலும்
கருதியபுராணமெல்லாங்கழறுகட்டுரையினாலும்
பெரிதிதிகாசத்தாலேபெறும்பிரமாணத்தாலும். (௩)

பகவற்சம்பந்தமென்றும்பரமபாகவதனென்றும்
இகழற்றபகவற்கீதையென்றும்பாகவதமென்றும்
தகவுற்றதிகிரிமாயன்சம்பிரதாயந்தன்னைப்
புகல்வுற்றுவழங்குகின்றபுவனதிட்டாந்தத்தாலும். (௪)

பகவனென்கின்றநாமம்பைந்துழாய்மாயனுக்கே
மிகுமசாதாரணப்பேர்மேருவில்லியைச்சொன்னாலும்
அகிலமேற்பரிதிசோமனகினியாதியானோத் [ன்றுள்.
தொகைபெறச்சொன்னவாபோற்சொல்லியதன்மைத்தெ

பரமார்த்தப்படலமுற்றும்-௮௯ திருவிருத்தம்-௨௱௫.

## உ-வது-உபாசனைப்படலம்.

### க-வது-சிவவுபாசனைப்பரிச்சேதம்.

ஆரணவல்லியவ்வாறறையவாகமத்துமாறு
சீரணிபகவற்சத்தஞ்செங்கண்மாலுமமாகில்
வாரணிமுலையாயந்தமாயவனிருக்கவாமத்
தோரணங்களையேவேதமுவாசனைசொனுமோவென்றாள்.(க

மற்றவாசகத்தைக்கேட்டமாமறைமயிலுங்கங்கை
உற்றவார்சடையினானையுவாசியமென்னவேதம்
சொற்றதுமுளதேயானாற்றோன்றவுத்தரித்தியாயின்
வெற்றியுநனதேயந்தவிடையனேபரனுமென்றாள். (உ)

ஆகமவல்லியச்சொற்ககமகிழ்ந்தரனைத்தானே
ஓகைகூர்மறைகளெல்லாமுவாசியமென்றதன்மை
நீகூறிக்கேள்ளுமாறுநிகழ்த்துவெனதனையெல்லாம்
காகளக்கனைக்காண்மின்னேகண்டனஞ்செய்தியாகில். (௩)

கல்வியுமுனதேகேள்விக்கருத்துமுனதேசொல்லும்
சொல்வனட்புனதேஞானத்துணிவுமுன்றனதேபின்னை
வெல்வினையுனதேயுங்கள்விண்டுவும்பரனேயென்னுப்
பல்விதபிரமாணத்தின்பயனெல்லாம்பகாலுற்றாள். (௪)

வேறு.

உன்னுசாகைகள்பலவினுமுபநிடங்களினும்
சொன்னதாகியவுவாசியவத்துவைத்துணிவால்
இன்னதன்மையனென்றெடுத்தேயிசைவிக்கும்
தன்னைநேரிலாநாரணவுபநிடந்தன்னில். (௫)

மூதுணர்ந்தபேர்புகழநுவாகமோர்மூன்றில்
ஆதியாமநுவாகத்திலன்பருக்கெல்லாம்
நீதின்முத்தியையளிப்பவனென்னவுஞ்செகத்துக்
கோதுகாரணனென்னவுமொருவனையுரைத்து. (௬)

ஆமவன்றனைப்பிரணவவாச்சியனான
மாமகேச்சரனென்றுபேர்வெளிப்படவகுத்துத்
தாமமார்குழற்றையலேயன்னவன்றனக்கே
தோமிலாவுவாசத்துவஞ்சொல்லுகையாலும். (௭)

மூன்னுரைத்தசொற்கேற்பமூன்றுமநுவாகம்
தன்னிலந்தநீடுபாசியன்றன்சொருபத்தை
மன்னுகிட்டிணபிங்கலன்மாவிருபாக்கன்
என்னவிப்படிநிச்சயித்தியம்புகையாலும். (௮)

கடையுமாகியுங்கண்ணுதலுபாசியனெனலால்
நடுவதாமநுவாகமோதியிடுநாரணனை
நெடுநியாயத்தினுபாசகனெனநிகழ்த்தி
அடைவிலேபொருள்கொண்டிடவேண்டுகையாலும்()

தகுரூவாசகனைநாராயணன்றன்னை
மிகுபரத்துவனென்றதில்விளம்பியதெல்லாம்
மகிமையானவம்மகேச்சுரனையிக்கபாவனையால்
அகல்விழிச்சிவேயத்தனையாகையினாலும். (௰)

அரியவீச்சுரனையிக்கபாவனையினாலரியைப்
பரனெனுஞ்சொலும்பகர்ந்திடப் பலிக்குமோவென்
மருவுமந்திரவாதியர்கருடபாவனையால் [னின்
கருடனாவனுகாட்டலாமாகையினாலும். (௰௧)

அன்றியும்மவைபதிந்திடுமுபநிடக்கருத்து
வென்றியீச்சுரனுபாசனையாவரும்விரும்பத்
துன்றுசீர்ப்பரத்துவந்துதிபரமதாய்ச்சொன்ன
தென்றுமோர்பொருளியம்புகைக்கிசைகையினாலும்()

இன்னதன்மைகணிற்பநாரணனைமுன்னியம்பி
அன்னதற்குமேலம்புயங்கோசமாமிதயம்
வன்னிமத்திமத்திற்பரமாத்துமாவைகும்
என்னவிப்படித்தெளிவுறவிளம்புகையாலும் (௰௩)

அனையதாமிதயத்தைநாராயணன்றனதே
எனமொழிந்திடாதிருக்கினுநியாயத்தினியல்பால்
புனிதநாரணனிதயமென்றேபொருள்கொள்கை
இனிமையாயுசிதம்பெறவிசைகையினாலும். (௰௪)

பாண்டுமைந்தனைப்பார்த்தனைப்பார்த்துநானுனக்கு
நீண்டஞானநன்னேத்திரமளித்தனெனின்னைத்
தூண்டுகின்றவென்னுடையவீச்சுவரபாவனையைக்
காண்டியென்றுதன்வாக்கினாற்கழறுகையாலும். (௰௫)

பானிகர்த்தசொல்லாலுயர்நாரணோபநிடம்
ஈனமற்றசங்கரனையேயுபாசியனெனவும்
ஞானவச்சுதனுபாசகனென்னவுநாட்டித்
தானுரைத்ததுதாணிம்மனிச்சயந்தானே. (௰௬)

சிந்தைகூருமவ்வுபநிடந்திங்கள்வேணியற்கே
ழுந்துபாசியதத்துவமொழிந்ததேயானால்
அந்தமேலவனேபிரமாவவனேசீர்
இந்திரன்றனையுஞ்சிவனென்னுமோவென்னில். (௰௭)

புவனம்யாவையும்படைத்தளித்தழிப்பதுபுணர்ப்பாம்
அவர்கண்மூவரிலொருவனைத்தொழிற்கதிகாரச்
சிவனெனும்பெயர்படைத்துயிரனைத்தையுஞ்செகுக்கும்
அவனையேயந்தத்தோத்திரஞ்செய்ததத்தனையே (௰௮)

ஆனபோதுநாராயணன்றன்னையுமவனென்
றேநவின்றிடவேண்டியுமிருக்குமேயென்னில்
மேனிகழ்ந்துடனேபரமாக்கரவியன்சொல்
ஞானிருக்கையினாலதுநாரணன்றானே. (௰௯)

ஈதலாதுநாரணன்றனைவிச்சுவமென்றும்
நீதிவ்வேள்வியென்றுஞ்சொன்னவேதங்கள்சிவனைக்
கோதில்வேள்வியின்பதியென்றுங்கூறும்விச்சுவத்தின்
நாதனென்றுமங்கவனையேபரத்துவநாட்டும். (௨௰)

சீதரன்றனைத்திகழ்வயிட்டிணவதந்திரத்தில்
ஏதமாகியபகுதியென்றிருக்கையினாலே
ஓதுவேதங்கணிமித்தகாரணனென்றவொருவன்
மாதுபாகனேயென்பதுநிச்சயவழக்கே. (௨௧)

அச்சுதப்பெயரானையுஞ்சிறந்தவாரணங்கள்
விச்சுவப்பதியென்னவும்வேள்விகட்கெல்லாம்
நிச்சயித்திடுமதிபதியென்னவுநிகழ்த்தி
உச்சரித்தசொல்லோர்ந்திடும்பொழுதுபசாரம். (௨௨)

தகைமையாலுயர்சங்கரமூர்த்தியைத்தானும்
மகிமைவேதங்கள்விச்சுவமென்றிடும்வாய்மை
அகிலலோககாரணனவனாகையினாலே
புகலுகின்றதத்தனையிதுபுதுமையொன்றன்றே. (௨௩)

கன்னிபாகனதுபாசனைபகர்ந்தசாகைக்குப்
பன்னுநாரணோபநிடமென்றேபெயர்ப்பளித்த
தென்னிஞானவிருடிமுன்காண்கையாலன்றி
அன்னவன்றனைப்பரத்துவநாட்டியதன்றே. (௨௪)

திருந்தவஞ்செழுத்திருத்தலாற்சதவுருத்திரியம்
பொருந்துமேன்மையால்விளங்கியதன்மையேபோல
பிருந்தைமானும்பஞ்சப்பிரமமும்பொருந்திடலால்
விரிந்ததாரணோபதிடமும்விளங்கியதன்றே. (உரு)

விரித்தவிந்தநாராயணோபநிடத்தில்வேதா
உருத்திரன்வயிற்பிறந்தமையோதுகையாலே
திருத்தமானவத்திகிரிசங்கந்தமைச்செங்கை
தரித்தமாலிடைப்பிறந்தனனென்றிடத்தகாதே. (உசு)

பெயர்ந்துபோயதோர்கற்பபேதத்தினிற்பிரமன்
புயங்கசாயிதேகத்திடைவாக்கினாற்புகுந்து
மயங்கியேபுறப்படவழிகாண்கிலாமையினால்
வியந்துமான்மலர்நாபியாற்புறப்பட்டுவிட்டான். உஎ

ஆதலாலயன்கமலசம்பவப்பெயர்க்கமைந்தான்
போதில்வாழ்பவனகத்தின்மாயனும்புகுந்து
வாதுவென்றதோர்பிலத்துவாரத்தில்வந்ததனால்
தீதிலாவதோக்கசனெனும்பெயரினாற்சிறந்தான். உஅ

தகுதியாமவரிருவருஞ்சரீரங்கண்மாறிப்
புகுதியும்புறப்பாடுமேயல்லதுபுணர்ப்பால்
திகழொருத்தருக்கொருத்தர்சென்மித்தவரல்லால்
பகருருத்திரனிடத்திருவோருமுற்பவித்தார். (உகூ)

ஈதெலாஞ்சிவாகமத்தினில்விளம்பியதிவ்வா
றேதுசொற்கிசைந்திடவரனுபயவுருவினும்
வேதனுந்திறல்விண்டுவும்பிறந்ததுவிரித்து
போதமேற்கொளவியம்பியதிலிங்கமாபுராணம். (ங௰)

நிறைந்தலோகமுநிற்பவுந்திரிவவுமெல்லாம்
இறந்தகாலமுமிறந்திடாவிந்துவேணியனைச்
சிறந்ததாமரைத்தவிசிடைத்திசைமுகனிடத்தில்
பிறந்ததாகவும்பிதற்றுவாரறிகிலாப்பேய்கள். (ஙக)

திருந்துநெஞ்சமுங்கண்டமும்பிரமரந்திரமும்
பொருந்துநாவுநன்புருவநன்னெறியுமெப்பொழுதும்
இருந்தயோகியர்க்கீறிலாவீச்சுரன்றோற்றம்
தருந்தியானமாந்தலமெனயோகநூல்சாற்றும். (ஙஉ)

ஆகையாலயன்புருவநன்னெறியிலவ்வமலன்
யோகசாத்திரஞானமையாற்றோன்றியதுளதே
பாருசேர்மொழியாய்பலசொலவியும்பயனென்
ஓகைகூரிக்குமாபதியுபாசியமென்றாள். (௩௩)



## உ-வது-சிவவுபாசனைமறுப்புப்பரிச்சேதம்.

அங்கயற்கணுகடமயிலுனைத்தவம்மொழியைக்
குங்குமத்தனவாரணக்கொடிமனங்கொள்ளாக்
கங்கணங்காணுங்கலிங்கலிங்கலியெனக்கறங்கப்
பங்கயக்கைக்கொட்டிச்சிரித்திவையிவைபகர்வாள். (௧)

படைத்தகாவியாய்த்தவேமகனுமோர்பதியைக்
கடைத்தொழிற்சிலர்சுதந்தரஞ்சொலுங்கதையதுபோல்
அடுத்தமால்பரமானகாரணவுபநிடத்தைப்
பிடித்துநீயிங்ஙனென்பிணங்கினைச்சிவபராத்தே. (௨)

தேன்றருங்குழற்சேயிழையேயிதுதிற்ப
என்றுகொல்லுநீயிந்துசேகரனுபாசனையை
ஆன்றசெஞ்சொனாராயணவுபநிடத்தாலே
தோன்றவுத்தரிக்கின்றனனென்றான்சொல்லி. (௩)

உன்றனுத்தியின்கற்பிதமாய்ச்சிலவுரைத்தும்
என்றும்வேதவிருத்தமென்றிகழ்ந்தசொற்களிலே
பின்னையுஞ்சிலகூட்டியும்போதிவாளர்
அன்றிநின்றவராகினுமதிப்பரென்பதற்காய். (௪)

இனையசொற்சிலசொல்லினையிங்கிதுதிற்பப்
பனிமலர்க்குழலாயுயர்நாரணோபநிடம்
புனிதநாரணனுபாசனைபுகன்றதென்பதற்கும்
அனகனுமந்நாராயணன்றனையர்ச்சித்து. (௫)

முன்புசங்கரன்மகத்துவம்பெற்றனமறைக்கும்
அன்பனுமயன்சிவன்முதலாயினோர்க்கெல்லாம்
துன்பமற்றமாலிடத்திலேதோற்றமோடொடுக்கம்
என்பதற்கியாணியம்புவல்கேள்பிரமாணம். (௬)

தலையிற்பாதொருசத்தமும்பொருள்கொளுமிடத்துப்
பெரிதுபக்கிரமோபசங்காரமப்பியாசம்
மருவபூருவம்பலம்புகழென்றறுவகையாய்
விரிநியாயநிச்சயத்தினாற்பொருள்கொளல்வேண்டும். (௭)

அடைவுசேரநுவாகங்களறுபத்துநான்கும்
உடையதாநாராயணவுபநிடந்தன்னை
இடையின்மூன்றநுவாகமாத்திரமெடுத்திசைந்த
படிபொருட்கொளினுலகசம்மதமெனப்படுமோ. (அ)

உரைத்தநாரணவுபநிடத்துபக்கிரமத்தும்
நிரைத்தமுன்னநுவாகத்துநீள்கடற்றுயில்வும்
பெருத்தகாரணத்துவமுந்தனித்பெரியோர்
ஒருத்தரின்மையும்படைத்தவனொருத்தனையுரைத்து. (௯)

வாய்த்தவாகமவல்லியேமற்றவன்றனையே
ஏத்துமுத்தியைத்தருபவனென்னவுமுரைத்துப்
பூத்தநாபிநாராயணன்றன்னையப்புருட
சூத்திரத்திற்சொன்னவண்ணத்திறற்சிலசொல்லி. (௰)

வைத்தவிம்முதலாமநுவாகத்தினாலே
இத்துடன்கலந்தோதுகவெனச்சொலியிருந்த
உத்தரத்துநாராயணவுபாநுவாகத்
தத்தினிற்றிசைமுகனுறையுதரனென்றதற்பின். (௰௧)

கோலமாமலராசனத்துறையிலக்குமியும்
சேலையாகவேழ்கடலையுமுடுத்தமேதினியும்
ஏலுமிங்கிவரிரவொடுபகலவனிரண்டு
பாலும்வாழ்ந்திடுபத்தினிமாரெனப்பகர்ந்து. (௰௨)

ஆரெனத்திசைத்திவன்றனையயிர்த்திடாவண்ணம்
சாருமத்திமமாமநுவாகங்கடமிலே
நாரணப்பெயர்பதந்தொறும்பதந்தொறுநாட்டி
நேரிலாப்பரதத்துவனென்றுநிச்சயித்து. (௰௩)

அந்தமாமநுவாகமெய்வாய்மையினாலும்
முந்துநாரணன்றன்னையேசொலிமுடித்திடலால்
பந்திசேரளகப்பொன்னாரணனுபநிடம்
இந்துமோலியனுபாசனைசொல்லியதிலையே. (௰௪)

முமுச்சமத்தமையார்முதற்சாலுமாமுன்னம்
தழைத்தசெய்யின்மூன்றுகியசாலுமூவார்போல்
இழைத்தவாதியுமர்த்தமுங்கிடக்கநீயிடையே
சுழித்தெடுத்தமூவனைநுவாகமுந்தொகையும். (௰௫)

உங்கள்சந்திரசேகரனுருபாசனையைத்
துங்கவாகமவல்லியேசொல்லியதில்லை
பொங்குமந்தமூவகையதுவாகமெய்ப்பொருளைச்
சங்கைதீர்ந்திடவிளம்புவனீயதுதனைக்கேள். (௰௲)

—•••—

## ௩-வது- உபாசியனிருணயப்பரிச்சேதம்.

அந்தமூன்றினிலாதியதாமநுவாகத்
துந்தும்மதையாலுபாசியனென்னநீயுரைத்த
மூந்துசீர்புனைமகேச்சுரனென்கின்றமூர்த்தி
இந்துசேகரனன்றலதெங்ஙனேயென்னில். (௧)

அவ்விடத்தினிற்பிரணவத்தாதியாயமர்ந்த
திவ்வியாக்கரமானதோரகாரவாச்சியனைக்
கவ்வைதீர்ந்திடமகேச்சுரனென்றகட்டுரையால்
மவ்வலோதியாயகாரவாச்சியன்திருமாலே. (௨)

மற்றதெப்படியென்னின்வேதங்களுமகிமை
உற்றசாத்திரபுராணமுமிருதியுள்ளவையும்
பற்றிலாதநாராயணமூர்த்தியாம்பரனை
வெற்றிவேற்கணுயகாரவாச்சியனெனவிளம்பும். (௩)

சக்கரந்தவிர்ந்தக்கரந்தனுவுகோறனைக்கொண்
டுக்கிரப்பரித்தேர்கடாவிடமுகிலொருவன்
அக்கரங்களிலகாரநானென்றருச்சுனற்கு
மிக்குரைத்தனன்பாரதகீதையில்விளங்க. (௪)

திருத்தமாகியசங்குமந்திகிரியுங்கரத்தில்
தரித்தமாயனையகாரவாச்சியனென்றதன்மை
வரைத்தடஞ்சிலையாற்புரமெரித்தவன்வாக்கால்
உரைத்தராமச்சகத்திரநாமத்துமுளதே. (௫)

அன்னதன்றியேபிரணவவாச்சியனுவான்
சொன்னவம்மகேச்சுரனெனத்துணிந்திடுமிடத்தும்
தன்னைநேரிலாப்பிரணவவாச்சியத்தாலும்
என்னையாருநாரணனிதற்கையமொன்றிலையே. (௬)

இங்கிதற்குரைத்திடும்பிரமாணங்களினிக்கேள்
செங்கயற்கணுகமயினேயதருவசிரத்தில்
பொங்குசீர்புனைபிரணவம்பூருவமாகத்
துங்கமானவட்டாக்கரத்தொகுதியுஞ்சொல்லி. (௭)

பேசுகின்றவப்பிரணவவாச்சியனை
தேசுகூருமந்நாரணன்றனையுபாசிப்பார்
ஆசிலாதவைகுந்தநாடடைகுவரொன்று
தூசுசேரிடையாயடையாளமாய்ச்சொல்லும் (அ)

சனனமாரணந்தவிர்ந்திடுமிராமச்சந்திரனே
இனிமையாகியபிரணவவாச்சியனென்று
தனைநிகர்ப்பதொன்றின்றியதாரகப்பிரமோ
பநிடமோதியவாசகமுலகெலாம்பாடம். (கூ)

விரிசுபால்மாழுபநிடத்தாலும்விண்டுவையே
பிரணவத்தினாற்சொல்ப்படும்பொருளெனப்பேசும்
இருமையானவிம்மறைகள்சொல்லியமொழிக்கிப்பால்
பரவுசொற்பலபுராணமும்பகர்ந்திடும்படிகேள். (ய)

சீதரன்றனைப்பிரணவச்செழும்பொருளென்றும்
ஈதுமாத்துமமென்றுமவ்விரணியற்குதித்தோன்
மேதையாலுரைத்ததுசொலும்விண்டுவின்புராணத்
தாதியஞ்சகத்தெண்ணிரண்டாயவத்தியாயம். (யக)

எஞ்சலின்றியவிப்புராணத்தினிலிரண்டாம்
அஞ்சகத்திருநாலதாமத்தியாயத்தில்
வஞ்சிசூரியமண்டலமத்திமத்துறைவான்
விஞ்சம்மன்மைநாராயணனென்பதுவிளம்பி. (யஉ)

அந்தநாரணன்பிரணவப்பொருளெனுமடைவும்
சிந்தையாவருந்தெளிவுறப்பிரமமாய்ச்செப்பும்
இந்தமட்டுமென்றிதற்குமேலானவஞ்சகத்தில்
வந்தமூன்றதாமத்தியாயத்துவாய்மையிலே, (யங)

மறைபிரித்தவாறெப்படியெனமயித்திரேயர்
அறிவுடைப்பராசரர்தமைக்கேட்பமற்றவரும்
முறைமுறைப்படிவியாதபட்டத்துமுன்னிருந்தோர்
எறிகடற்றலத்திருபதோடெண்மருண்டென்றும். (யச)

இவ்வியாதர்பின்வியாதபட்டந்தனக்கிருப்பார்
தவ்வலின்றியவச்சுவத்தாமனென்றும்
அவ்வவ்வேதியர்துவாபராந்தந்தொறுமடைவே
திவ்வியப்புகழ்மறைத்துறைசெய்வர்களென்னும். (யரு)

இருநிலத்தினின்மறையெலாமிறந்தகாலத்தில்
பிரணவத்துமட்டேநிலைபெற்றிடுமென்றும்
அருமையுற்றவப்பிரணவவக்கரந்தானே
பரவுலோகவுற்பத்தியதாம்பொருளென்றும். (௧௬)

இத்திறம்பெறும்பிரணவப்பொருளதாயிருப்பான்
நித்தனாகியநாரணனென்னநிச்சயித்துப்
புத்திபண்ணுதிநீயெனவிவையெலாம்புகன்றார்
சித்தமப்படியேமயித்திரேயருந்தெளிந்தார். (௧௭)

பன்னுபாரதகீதையிற்பிரணவப்பயனும்
என்னைநீநினையென்றுபார்த்தனுக்கரியிசைத்தான்
கன்னிபாகனும்பிரணவப்பொருள்கண்ணனென்று
சொன்னசொற்பிரமாண்டமாம்புராணமுஞ்சொல்லும். (௧௮)

எட்டெழுத்திலொன்றாகியபிரணவவெழுத்தின்
திட்டமெய்ப்பொருளரியெனச்சுகமுனிதெளிந்து
பட்டபத்திரனும்பரிக்கித்துபூபதிக்குக்
கட்டுரைத்தமைவிளம்பிடுநீடுபாகவதம். (௧௯)

மாசிலாதசீர்ப்பிரணவமாகியாய்வைத்துப்
பேசிடுந்துவாதசாக்கரப்பிரமவித்தையினும்
தேசமேலிதுசகலருந்தெளிந்திடச்செப்பும்
வீசுபாரதகதையுடன்விண்டுவின்புராணம். (௨௰)

கண்ணுதற்சிவன்முனிவர்க்குக்கண்ணனைக்காட்டி
எண்ணுசீர்ப்பிரணவப்பொருளாகியவிவனை
நண்ணிமுத்தியைச்சேருதியென்றமைநாட்டும்
மண்ணின்மேனிகழ்பாரதாந்தத்தரிவங்கிசம். (௨௧)

முந்துசீர்ப்பிரணவப்பொருளரியெனமொழிந்தான்
இந்திரப்பெயரவனெனவெளிபெறவியம்பும்
அந்தமானவைம்பத்தொன்றாமத்தியாயத்துப்
புந்திகூரியோர்புகழ்ந்திடும்பதுமமாம்புராணம். (௨௨)

வண்டுழாயணியுஞ்சுடர்மவுலிமாதவனே
எண்டகும்பிரணவத்தினிற்பெறுபொருளென்று
புண்டரீகர்நாரதரிவர்புகன்றவாதரத்தில்
கண்டுகொள்ளுமாறுரைசெயும்பாரதகாதை. (௨௩)

இளங்கலாபமாமயிலனுயிங்கிதற்கெல்லாம்
துளங்குசீர்புனைபுவனதிட்டாந்தமுந்தோன்ற
வளங்குலாவுநீடணியரங்கத்துமாயனுக்கு
விளங்குகின்றதுபிரணவாகாரமாம்விமானம். (உச)

பிரணவப்பொருளரியெனும்பெருமைநீயறிய
ஒருதொடைப்படச்சிலபிரமாணநானுரைத்தேன்
சுரிகருங்குழற்றேகையேவம்மகேச்சுரனும்
தருணவெண்பிறைசூடியன்றச்சுதன்றனை. (உரு)

அச்சுதப்பெயராலுயரற்புதன்றனையே
வைச்சசீர்புனைமகேச்சுரனென்னுநாமத்தால்
உச்சரித்தெடுத்தோதிநீடுலகசம்மதமாய்
நிச்சயித்ததுகர்ப்பமாகியவுபநிடமே. (உசா)

வாய்த்தசீர்ப்பதுமந்தனில்வாசுதேவனைமுன்
தோத்திரஞ்செயுஞ்சகத்திரப்பேர்த்தொகுதியினும்
கீர்த்திவைம்முகனிரணியகெர்ப்பசங்கிதையில்
எத்தியோதியவிராமநாமங்களாயிரத்தும். (உஎ)

தாமவேல்விறல்வீட்டுமர்பாரதந்தனிலே
சேமமாகவேயோதுநாமச்சகத்திரத்தும்
வாமமேகலையல்குலாய்மகேச்சுரனென்றும்
நாமதேயநாராயணன்தன்னதாய்நவிலும். (உஅ)

சுடர்குலாவுசீர்நேமிமாலேமகேச்சுரனென்
றிடியுலாங்கொடியிந்திரன்றுதித்தவாறியம்பும்
படியுளோரெலாம்புகழ்ந்திடுபதுமமாபுராணத்
தடைவதானவைம்பத்தொன்றுமத்தியாயத்தில். (உகூ)

தருமகேச்சுரநாமதேயத்தினைத்தானீ
டகிலமீதறியார்களஞ்ஞானியரோனும்
திகிரிமாதவன்றனஞ்சயற்கோருபதேசம்
பகருநீடிதிகாசமாம்பாரதகீதை. (௩௰)

அலங்கலோதியாய்மற்றுமக்கீதையிலஞ்சாம்
புலன்குவிந்துளயோகநூல்புகன்றிடுமிடத்தில்
துலங்குசங்குசக்கரத்தையாயுதமகேச்சுரனை
இலங்குறுண்ணறிவாற்றியானிக்கவென்றிருக்கும். (௩க)

ஏற்றுவாகனன்வாரணனுக்ககவந்தெதிர்ந்து
தோற்றநாண்மூகுந்தனைமகேச்சுரனென்றுதுதித்த
மாற்றமைம்பதோடஞ்சதாய்வழங்குமத்தியாயத்
தூற்றமாய்ச்சொலும்பதுமவுத்தரகாண்டம். (௫௨)

சொற்றமுக்கணன்பசுபதியாம்வரஞ்சுரர்பால்
பெற்றதன்மையையுரைத்திடும்பெருமறைக்கேற்ப
மற்றவன்றனக்குயர்மகேச்சுரனெனும்வரமும்
உற்றபட்டமுங்கட்டினரும்பரொன்பதனே. (௫௩)

கருதுசீர்புனைபாரதகன்னபர்வத்தில்
திரிபுரப்பிரசங்கத்தில்வெளிபெறச்செகமேல்
உரைசெயாநின்றதாதலாலுயருமாபதிக்குச்
சரியிலாமகேச்சுரப்பெயர்வரபலந்தானே. (௫௪)

மூன்றுசீர்மகேச்சுரச்சொற்குமுக்கியப்பொருளாய்
மன்னிநின்றவன்வண்டுழாய்மாலைமாதவனே
அன்னதன்றிமுக்கண்ணனேயென்றறைந்தனையேல்
துன்னுமிவ்விடத்தினிலுரைத்துளமகேச்சுரனே. (௫௫)

உலககாரணனென்னவுமுத்தியையுதவும்
தலைவனென்னவுமுரைத்தலாலனையவார்தன்மை
சலபமாய்ப்பிறைசூடியவம்மகேச்சுரனுக்
கிலகுமாமறைபுகன்றிடாதினையதுமன்றி. (௫௬)

தங்குமுங்களதானவாகமத்திலேதானே
துங்கமாஞ்சதாசிவனிடத்தம்மகேச்சுரற்குப்
பொங்குந்தோற்றமுமொடுக்கமும்புகன்றிடுகையினால்
அங்கவன்றனக்குலககாரணத்துவமடாதே. (௫௭)

உலககாரணன்செங்கண்மாலேயெனுமுண்மை
பலபடச்சதுமறையினுமேற்பகர்கின்றேன்
புலமைகூரவிப்பொழுதுநற்புராணவாசகத்தால்
நிலைமையாகவேவிரித்துரைக்குவெனதுநீகேள். (௫௮)



### கசேந்திரவுபாசனைப்பரிச்சேதம்.

தங்குபங்கயமலர்ந்ததோர்தண்புனற்றடத்தில்
பொங்குமும்மதக்கிம்புரிக்களிறொன்றுபுகுந்து
செங்கண்வெள்ளெயிற்றிடங்கர்வாய்ப்பட்டுளந்திகைத்துத்
திங்கினிக்கரையேறுவதரிதெனவெண்ணி. (௧)

அகிலகாரணனாகியவொருத்தனுக்கபயம்
சகலசீவதயாபரவத்துவுக்கபயம்
நிகரிலோகநியாமகநித்தனுக்கபயம்
பகரும்வேதபாராயணநாதனுக்கபயம். (௨)

ஆதியந்தமிலாதபரஞ்சுடர்க்கபயம்
சோதின்மூர்த்தியைக்கொடுத்திடுந்தேவனுக்கபயம்
மூதுசத்துமசத்துமிலாமுதற்கபயம்
ஓதுபல்லுயிருக்குயிராமொளிக்கபயம். (௩)

சென்மநாமமுமுருவமுஞ்செறிகுலங்குற்றம்
கன்மமென்பதிலாதவொருத்தனுக்கபயம்
தன்மயஞ்செய்துபாவனலீலையாற்றனே
பன்மையாமுலகம்படைப்பான்றனக்கபயம். (௪)

புருடனென்றிடப்புலப்படுந்தேவனுக்கபயம்
அருவமாயுருவாயமர்வான்றனக்கபயம்
பரமவாத்துமனாய்ப்பரனாய்ப்பகவானாய்
விரிபரப்பிரமப்பெயர்விமலனுக்கபயம். (௫)

பெண்ணொடாணலியென்னவுட்பிறிக்கரிதாகி
எண்ணரும்பகுதித்தொடொன்பதிலாதாய்
உண்ணிறைந்துபுறம்புநிறைந்துலகெல்லாம்
நண்ணுகின்றவியாபகனாம்பொருட்கபயம். (௬)

பிறப்பிறப்பிலியானபெருந்தகையாகிக்
குறிப்புறத்தனதிச்சையிலாகியகொள்கைத்
திறத்துவிக்கிரகங்கள்படைத்துமேதினிமேல்
அறத்தினைத்திரமாக்குமகண்டனுக்கபயம். (௭)

ஓதுகாரணமொன்றுந்தனக்கிலனாகி
மேதற்கொத்தவர்மிக்கவரின்றியேதானே
காதல்கூருலகுக்கொருகாரணனான
ஆதிமூலபராபரவத்துவுக்கபயம். (௮)

என்றுகொண்டுபொதுப்படவின்னனபடியே
நின்றுதன்றுதிக்கையினைவானுறநீட்டி
மின்றிருந்தியமேகமுழங்குவபோல
மொன்றிமொன்றியினைத்துமுறைப்படுகாலை. (௯)

அனையமாகரிசொல்லியசொற்களனைத்தும்
வனசனைம்முகனுதியர்கேட்டுமதிப்பால்
இனையசொற்பொருளியாமலயாமலவென்று
வினவிவந்துயகாரம்விளைப்பதுவிட்டார். (௰)

ஈதுகாலையிலெங்குநிறைந்தருளீசன்
வேதரூபவிலிங்ககுலாதிபன்மேலே
ஆதரம்பெறவம்பரவீதியிற்றோன்றிச்
சோதியாழியிடங்காறும்படிதொட்டு. (௰௧)

தந்திமுத்திபெறும்படிதண்ணளிசெய்தான்
அந்தவேலையினந்தரதுந்துமியார்ப்ப
வந்துநான்முகனைம்முகனேமுதல்வானோர்
சிந்தினார்மலர்மாமறைதோத்திரஞ்செய்தார். (௰௨)

இஃதிறக்கதைபாகவதத்திருநாலாய்
வைத்தகந்தமிரண்டொடுநாலளவுஞ்சேர்
அத்தியாயமுறைத்திடுமவ்வளவேயோ
உத்திகூர்பிரமாண்டமுமியாவையுமோதும். (௰௩)



பலவுபாசனைப்பரிச்சேதம்.

ஆதலாலுலகுக்கொருகாரணனாவான்
தாதுசேர்மலருந்தியில்வேதனைத்தந்த
தீதிலாநெடுமாயவனென்பதுதேனே
ஓதினேனதுமேலுமுணர்ந்திடுகென்றாள். (௧)

ஈதுநிற்பநாரணனைவேதங்களிச்சகத்துக்
காதிகாரணனென்னவுமுத்தியையளிக்கும்
நாதனென்னவும்பற்பலவிடத்தினுநாட்டி
நீதியாகவேநிச்சயித்துரைக்கையினாலும். (௨)

பெயர்த்துமிங்கிதிற்பேரடையாளமதாக
இயற்கையாகியவகாரவாச்சியனெனலாலும்
உயர்ச்சிபரமகேச்சுரனையேயோதுமாதியிலே
இயக்கநீர்க்கடற்பள்ளிகொள்பவனெனலாலும். (௩)

கோதைபாகனுக்கெதிகடற்றுயில்வதுகூறா
தாதலாலுமிங்குரைத்திடுமகேச்சுரனாவான்
சீதநாண்மலர்த்திருவளர்மாரயனென்பதற்குத்
தாதுசேர்குழற்றையலேசந்தயமிலையே. (௪)

கயலைநேர்விழிக்கன்னியேகருடவாகனனே
உயர்மகேச்சுரனென்பதிங்குள்ளவாறுரைத்தேன்
இயலுமந்தமூன்றுமநுவாகத்தினிடத்தில்
பயிலுமவ்விருபாக்கனுமிலக்குமிபதியே. (௫)

பன்னுமற்றதெப்படியெனிலவ்விருபாக்கன்
என்னநின்றசொல்விவிதலோசனனையுமிதத்தால்
மன்னுகின்றபுள்வாகனன்றனையுமதிப்பால்
துன்னுரூபமிந்திரியமில்லானையுஞ்சொல்லும். (௬)

ஆதலாலரியாயிரநயனனென்பதனை
ஓதுசீர்புனைபுருடசூத்தத்தினிலுரைக்கும்
கோதையேயிவன்பறவைவாகனனெனுங்கொள்கை
மேதினிக்குளியாவர்க்குநர்ம்பேசவேண்டாவே. (௭)

பந்தமாகியபகுதியாற்பற்றிலாப்பரமன்
இந்தியங்களுமுருவமுமிலாதவனென்றும்
கொந்துலாவுதாரோதியாகமவிள்ங்கொடியே
சந்தமாகியவேதவேதாந்தமுச்சரிக்கும். (௮)

அன்றியேவிருபாக்கனென்கின்றவம்மொழியால்
இன்றுமுக்கணனென்னநீபொருள்கொளுமிடத்தில்
வென்றிநாரசிங்காதிவிக்கிரகங்கடமக்கும்
துன்றுமுக்கணுண்டெனப்பலபுராணமுஞ்சொல்லும்.

ஈதலாற்பிராமியபராசரியமென்றிசைக்கும்
தீதிலாப்பிரமாணமாஞ்சிற்பசாத்திரத்தின்
மூதுசீர்சயனாதனத்தானமாமூர்த்தி
பேதகத்திறாணேனமுக்கண்ணனாய்ப்பேசும். (௰)

மற்றிதன்றியும்வல்லிகேள்கீழநுவாகத்
துற்றநாரணன்றனக்கடையாளமாயுரைக்கப்
பெற்றிடும்பரப்பிரமசத்தமுமதன்பின்னாய்ப்
பற்றிநின்றதோர்புருடசத்தமுமிவ்வுபயமும். (௰௧)

துலங்குசீர்விருபாக்கனைச்சொல்லுகையாலே
அலங்கலோதியாயன்னவனாரணனேயாம்
இலங்கவின்னமுமொன்றுகேளிவ்விடத்தினிலே
பொலங்குழாய்புலப்படவுரைத்துவிபுருடனுக்கு. ௰௨

ஓதுமிந்நீடுபநிடத்தாதியிற்கமல
மாதுபூமியுமருங்குறைபத்தினிமார்சொன்
றேதயற்றிட நிச்சயித்திருக்கையாலிவனைப்
பூதிபூசியசிவனெனப்பொருள்கொளப்படாதே.(௰௩)

கலன்களாற்செழுங்கவினுளமெய்யிலக்கணத்தால்
பொலன்கொள்கொம்பெனப்பொலிவுகூராகமப்பூவாய்
இலங்குகிட்டிணையிங்கலமென்கின்றவியல்பும்
நலங்கொள்பங்கயப்பாதநாராயணனிறமே. (௰௪)

அன்னதெவ்வகையென்னின்மத்திமவநுவாகம்
தன்னிலீடியவுபாசனைக்குத்தலமாக
மன்னிநின்றசிரிதயபற்பத்தையும்வகுத்துப்
பன்னியங்கொருக்குமாராயமாம்பதத்தில். (௰௫)

உரப்புநீலமேகத்தினுள்ளேயிருந்தொளியைப்
பரப்புமின்னெனநாரணனும்பரமான்மா
விருப்பமாகியவிக்கிரகத்துடன்விளங்கி
இருப்பனென்றெவர்க்குமுகபாடமாயிருக்கும். (௰௬)

நண்ணுசீர்புனைநாரணன்றனக்குநாலுவாம்
வண்ணமுண்டெனச்சுருதிகள்சகலமும்வகுக்கும்
எண்ணுபாரதகதையினும்பலபலவிடத்தும்
கண்ணனுக்கநேகவிதவண்ணமுஞ்சொலிக்காட்டும்.(௰௭)

அந்தநாரணன்மார்பினைச்சந்ததமகலா
திந்திரைப்பெருந்தேவிவீற்றிருக்கையினாலும்
விந்தையாதியாய்விளங்குவிக்கிரகநாரணற்குச்
சந்தமாம்பல்புராணமுஞ்சாற்றுதலாலும். (௰௮)

மொழியுமக்கவன்மூர்த்திமுவெட்டினிற்றியானம்
எழில்பெறும்படியுரைத்திட்டிடங்களெங்கெங்கும்
பழுதிலாதநன்னிறத்தினைப்பலபலபடியாய்
வழுவிலாதநூல்சகலமும்வகுத்திடலாலும். (௰௯)

ஏதமற்றிங்கிட்டிணையிங்கலனுவான்
சீதரப்பெயர்மூர்த்தியேயங்குபாசியனும்
சாதனம்பரமாத்துமந்தானுநாரணனென்
றேதமற்றிடமுன்னமேநிச்சயித்திருக்கும். (௨௰)

## ௯-வது-வேதங்களிதரதேவதைகட் குபாசனையில்லையென்றபரிச்சேதம்.



நிச்சயித்ததிங்கெங்ஙனமெனவதுநிகழ்த்தில்
கச்சணிந்தபொற்கொங்கையாகமக்கணங்குழையே
உச்சரித்துநீள்விரகினாலுத்தரித்திடநீ
வைச்சவந்நடுவாமநுவாகத்தினாலே. (௧)

தூயதாம்பரஞ்சோதியென்றுந்துலங்கியவா
காயமென்றுங்களங்கமில்லாதசத்தென்றும்
மேயசம்புவென்றுஞ்சிவனென்றும்விஞ்சியசீர்
ஏய்பரப்பிரமம்பரமாத்துமாவென்றும். (௨)

வேதசாகைகளிப்படியிப்படிவெவ்வே
றேதமின்றியியம்பியசொற்களினாலே
ஓதுபாசியவத்துவாமொருத்தனையுலகோர்
ஆதரித்தறியும்படிக்காட்டுவதாக. (௩)

நம்புசீர்ப்பரமாத்துமாத்தானுநாரணனே
அம்பரப்பிரமப்பெயரானுநாரணனே
சம்புசத்தத்தினுட்பொருடானுநாரணனே
மொய்ம்புடைச்சிவமூர்த்தியுமந்தநாரணனே. (௪)

தொக்கயோகியொண்பரஞ்சோதிநாரணனே
தக்கசீர்ப்பரதத்துவந்தானுநாரணனே
மிக்கசத்தொடுவிச்சுவந்தானுநாரணனே
முக்கணக்கிடுகாலமுமுற்றுநாரணனே. (௫)

இன்னவாறுபதந்தொறுநாரணனென்றென்
றுன்னியுன்னிமொழிந்ததற்குத்தரமாகக்
கன்னநேத்திரங்கேட்பனகாண்பனவிவற்றுள்
மன்னியுள்ளினும்புறம்பினும்வாழ்பவனென்றும். (௬)

புவனகாரணனும்பரிபூரணவானும்
தவறிலாதவனைத்தறிவுள்ளவன்றானும்
விவிதலோகம்வகுக்குமிடுக்குடையானும்
உவமையின்மையாமுத்தியுகந்தருள்வானும் (௭)

தனக்கொரீசனிலாமலிருப்பவன்றானும்
அனைத்துயிர்க்குமோரீச்சுரனாயமர்வானும்
மனத்தினாற்றுமுயற்சிவகுத்திடுவானும்
எனைத்துநாரணனென்றுமுடிக்கையினாலும். (௮)

இப்பெருங்குறிசேரநுவாகமதொன்றே
செப்புகின்றதுபோதுமினித்திருமாலின்
மெய்ப்பரத்துவத்துக்கெனவேதவியாதன்
ஒப்பிலாவொருசூத்திரமோதுகையாலும். (௯)

மறிகுலாவியவானுதலாகமமானே
அதிரும்வேதத்திலிப்படியோரடையாளம்
இதரதேவதைகட்கிலையாகையினாலும்
முதன்மைநாரணனேபரமாத்துமமூர்த்தி. (௰)

ஆகமங்கடெரிந்துமிழற்றுமணங்கே
நாகமெல்லணையிற்றுயினாதனையின்னம்
ஓகைகூர்பரமாத்துமனென்பதுரைப்பேன்
நீகுறிக்கொளவங்கதுநெஞ்சினில்வையாய். (௰௧)

பரவுசீர்புனையும்பிரபஞ்சசாரத்தில்
பிரணவத்தினுக்கிருடியுஞ்சந்தமும்பேசித்
திரமிகுத்தவம்மந்திரத்துக்கதிதெய்வம்
தரையினிற்பரமாத்துமாவென்றுநிச்சயித்து. (௰௨)

உரைத்தவப்பரமாத்துமாவாகியவொருவன்
கரத்தினிற்கதைசக்கரம்வால்வளைகமலம்
தரித்துமின்னிகர்பீதகவாடையுஞ்சாத்தி
இருக்குமங்கவனுமரும்விண்டுவென்றியம்பும். (௰௩)

அத்திறம்பரமாத்துமாவமலநாரணனென்
றுத்தரித்துவந்தனமதற்குத்தரமாகச்
சித்திரத்திலாட்பிரமனுஞ்சிவனுமிந்திரனும்
நித்தசூரியர்களுமெனவுரைத்ததுநிரைத்து. (௰௪)

அனையதேவரெலாமவனேயென்றவடிபோல்
இனையநாரணனும்மவனேயென்றதிலையால்
தனையுறுத்துறையப்பரமாத்துமந்தனைப்
பணிமதிச்சடிலச்சிவனென்றிடப்படாதே. (௰௫)

நீண்டவேல்விழியாயிதுநிற்பநின்னினைவால்
பூண்டசிற்பரமாத்துமாவென்னுமிப்பொருளைத்
தாண்டவம்புரியுஞ்சிவனென்றுநிச்சயித்தால்
மீண்டுமங்கவனேசிவனென்னவேண்டாவே. (௰௬)

அங்கயற்கணாய்சிவனயன்படைத்தளித்தழிப்போர்
தங்களுக்குமேளயொருவனுமென்றுரைத்தனையேல்
உங்கள்சைவசித்தாந்தநூல்வழிக்குமவ்வொருவன்
தங்குருத்திரனவனையச்சிவனெனத்தகாதே. (௰௭)

அந்தநீள்பரமாக்கரமானசத்தத்தால்
பைந்துழாய்முடிமாலையும்பகர்ந்ததென்றனையேல்
முந்துசீர்ப்பிரமன்சிவனிவருடன்மொழியா
திந்திரன்றனக்கும்பினாகப்பகர்ந்திடுமோ. (௰௮)

அனையவக்கரசத்தமச்சுதனைபோதாதோ
எனிலவன்றனைச்சகலசத்தமுஞ்சொலுமியல்பால்
தனிபெறப்பிரமன்சிவனிந்திரன்முனென்
றினிமையாய்ச்சொலுஞ்சொல்லுமாலைப்பகர்ந்திடுமே

இந்துநேர்நுதல்வஞ்சியிவ்விடத்திலக்கரச்சொல்
பைந்துழாய்முடிமாயனைப்பகர்ந்ததேயில்லை
முந்தியோதியதோர்பரமாத்துமமூர்த்தி
அந்தநாரணனென்பதற்கில்லைமேவறையும். (௨௰)

நிருபவாகமவல்லியேயிவையெலாநிற்ப
அரியபாரதகீதையிலருச்சுனன்றனக்குக்
கரியமாமுகில்வண்ணராங்கண்ணனொந்தமனீச்
சுரியபாவனைபாரெனச்சொன்னவாசகத்தை. (௨௧)

இரவிதான்றியானித்துமின்மினிப்புழுவிடத்தில்
பெரியதேசினைப்பெற்றனனென்றபெற்றியைப்போல்
கரியமாமுகில்வண்ணனார்கண்ணுதற்சிவனை
உரியபாவனைசெய்தனனென்னவுமுரைத்தாய். (௨௨)

ஆகமப்பெண்ணேயருச்சுனற்கச்சுதன்றானும்
யோகசத்தியைக்காட்டினனென்றதுண்டாயின்
நீகுறித்திடுமத்தியாயப்பெயர்நிச்சந்
தேகவிச்சுவரூபவத்தியாயமாய்ச்சொலுமே. (௨௩)

தருமனுக்கிளையாற்கிளையானொருதாளால்
இருநிலத்தையடக்கியவச்சுதனையுன்
கருதுவிச்சுவரூபவிக்கிரகநான்காணப்
பெரிதுவாஞ்சையுற்றேனென்றபெற்றியினாலும்.(௨௪)

வீரவிற்கையருச்சுனன்மேலருண்மேவா
வாரிதித்துயின்மாயனுமென்வடிவத்துள்
ஓரிடத்தினுளனைத்துலகங்களுமுளவாய்ப்
பாரெனத்தவ்வியஞானக்கண்ணளித்தபண்பாலும். உ௫

மண்டுபார்த்தனுநின்றிருமேனியின்மாலே
அண்டகோடிகளெம்முகனுன்முகனுதி
எண்டருஞ்சுரர்நாகரியக்கரையெல்லாம்
கண்டுகொண்டனெனென்றதோர்கட்டுரையாலும். உ௬

அவ்வுரைக்குயர்மாலுமருச்சுனனேநீ
மெய்வ்விழிகொண்டுகண்டவென்விச்சுவரூபம்
தவ்வலற்றதவஞ்சவனம்பலதானம்
எவ்வெவைற்றினுக்காண்பரிதென்கையினாலும். (உ௭)

திகழுஞானவிலோசனஞ்செங்கண்மாலருளால்
தகையமுக்கணன்முன்புபெற்றந்தமாதவனுர்
மகிமைவிச்சுவரூபத்தின்வளங்கண்டவாய்மை
புகலுகின்றதோர்வராகமாபுராணமேபோல. (உ௮)

இளைத்தநுண்ணிடைவஞ்சியேமற்றுநம்மிறைவன்
திளைத்தவெஞ்சிலைவீரனுமிராமசந்திரனுர்
விளைத்தவிச்சுவரூபமுன்னுட்கண்டமேன்மை
கிளர்த்தியோதியவிரணியகர்ப்பசங்கிதைபோல். (உ௯)

பகவனோதியகீதையும்பார்த்தனிப்பரமன்
திகரில்விச்சுவவுருவினைக்கண்டதேதிகழ்த்தும்
தொகவதற்குளேயோகமென்றோதியசொல்லால்
தகைமையுத்தியோகத்தையேசொன்னதத்தனையே. ()

மந்திரத்திறம்வல்லவர்கருடபாவனையால்
வெந்திறற்பெருங்கருடனுய்விளங்குமவ்விதம்போல்
அந்தமுக்கணனயிக்கபாவனையினலரிதான்
உந்துசற்பரனுயினனென்றுமொன்றுரைத்தாய் (௩௧)

வெய்தெழுங்கடல்விடத்தினைவிழுங்கியமேனுள்
மைதிகழ்ந்தகண்டத்தினன்கருடபாவனையைச்
செய்ததன்மையைக்காருடகவசமந்திரத்தும்
மொய்தரும்பதுமத்துநான்முன்னமேமொழிந்தேன்

பாலலோசனன்பரத்துவமாயினாலன்றே
நீலமேனிமானெஞ்சகத்திடைதியானிப்பான்
நாலுவேலைகள்பாற்கடலானபோதன்றே
கோலவாரமுதாதியாம்பொருளெலாங்கொடுக்கும். ௫௩

இந்துசேகரற்கந்தரியாமிமாலென்னு
முந்துசொற்குநீமொழிந்தவம்முக்கணமூர்த்தி
அந்தவந்தரியாமிபாவனைசெய்தவதற்கும்
சிந்தைகொண்டுகேளுபர்பிரமாணநான்செப்ப. (௫௪)

---

எ-வது-கிருத்திவாசனுபாசகனென்றபரிச்சேதம்.

மருத்துவன்முதற்சுரரெலாம்வானுலகிற்போய்
ஒருத்தனாகியேயோகமுற்றவ்விடத்துறைந்த
கிருத்திவாசனைக்கண்டுநீயாரென்றுகேட்ப
அருத்திகூர்ந்தவனந்தரியாமிபாவனையால். (௧)

முதுபரத்துவமுகுந்தனுன்முளரியாசனனுன்
கதிர்கண்மூன்றுநான்றுபரத்தோடுசங்கமுநான்
உதவுமைம்பெரும்பூதநானென்னவுமுனாத்த
ததருவச்சிரத்தாதிகண்டத்தினிலறையும். (௨)

அங்கயற்கணுகமயினோபகிலகாரணனும்
செங்கண்மாலினையயிக்கியபாவனைசெய்தே
தங்குமேன்மையாற்சகலமுந்தாமெனமொழிந்தார்
உங்கள்சந்திரசேகரனொருவன்மாத்திரமோ. (௩)

இதயசுத்தியிகும்பிரதத்தனனென்பான்
அதிர்குரற்கிரிநோயிராவதத்தானைப்
பதயுகந்தமில்வணங்கிநீயெனக்கொருபண்பால்
உதவுமுத்தியுபாயமுரைத்தருளென்ன (௪)

மற்றதற்கெதிருத்தரம்வானவர்கோவும்
நத்துமிச்சகநல்கியகாரணஞ்சாற்றி
உற்றெனைச்செயுபாசனையென்றமையோதும்
பற்றுசொற்கவுவிக்கியமந்திரபாடம். (௫)

சேமமாம்பிரமத்தினயிக்கத்தைச்செய்தே
நாமவாதபனுன்மனுநானெனநாட்டி
வாமதேவமகாமுனியோதியவாய்மை
தூமவார்குழன்மானனையாய்மறைசொல்லும். (௬)

இல்லையேவருந்தோற்றமுமொடுக்கமுமுடையார்
தொல்லைஞாலமேற்றுங்களும்பரனெனச்சொல்ல
வல்லதென்னெனிற்சாத்திரத்தினில்வழக்காகச்
சொல்லுமென்பதுபகர்ந்திடும்வியாதசூத்திரமும். (௭)

உரைத்தவிம்மறைப்பொருளுடனொருவழக்காக
வரைத்தடம்புயத்திரணியன்மதலையென்வயினே
பெருத்தலோகமங்கதனுளேயானென்றபேச்சு
நிரைத்தநாரசிங்காதியாம்புராணங்கணிகழ்த்தும். (௮)

நெய்புலாவுவேல்விழியினாயிவையெலாநிற்கப்
பையராவணைப்பரமனேபரனெனும்படிக்கும்
கையல்பங்கனுபாசகனென்பதுதனக்கும்
துய்யநூலினாற்பலபிரமாணமுஞ்சொலக்கேள். (௯)

பனியிளம்பிறைவேணியான்றன்னையம்பரத்தோர்
அனகனாகியநாரணன்றிருவருட்கமைந்தாய்
மனதிலங்கவன்மந்திரரகசியம்வைத்தாய்
புனிதமாயவன்பாததீர்த்தத்தையும்பொறுத்தாய். (௰)

மகிமைதங்குமவ்வாமனன்வளர்த்திடுமந்நாள்
சகலமங்கலகங்கையாற்பங்கயாசனத்தான்
திகழுமன்புடன்றிருவடிவிளக்கியசெய்கை
அகிலமேலுனைப்பவித்திரமாக்குகைக்கன்றோ. (௰௧)

விஞ்சுபுண்ணியசன்மநீமேவினையேயென்
றஞ்சுறப்புகழ்ந்துஞ்சொலுமிருக்கின்மூன்றுஞ்சீர்ச்
செஞ்சொலட்டகத்தேழொடொன்றனவத்தியாயத்
தஞ்சுமைஞ்சுமோராறுமாயமைந்திடும்வருக்கம் (௰௨)

யாச்சவற்கியோபநிடதமுமிந்துசேகரற்கு
வாய்ச்சநாரணனுபாசியனென்றுசொல்வழங்கும்
சாச்சுதம்பெறுமதருவசிரத்துமேதிலருர்
தீச்சமுக்கணனைத்தியாதாவெனச்செப்பும். (௰௩)

எக்கணக்குளசிவகோடிகளிடத்தினிலும்
புக்குறைந்திடுமுயர்பரமாத்துமாப்பொருளாய்த்
தொக்கசீர்புனையும்பரஞ்சோதிதானென்று
தக்கபேர்புனைவிண்டுவாகியதருத்தனக்கு. (௰௪)

விரவுசாகையின்றனமாமுருத்திரன்வேள்வி
பெரிதுசெய்தபின்மகத்துவம்பெற்றமைபேசும்
அரியகாயிருக்கஞ்சதாமட்டகத்தஞ்சாய்
மருவுசீர்ப்பருச்சத்திலாறுமநுவாகம். (யரு)

வாரணிந்தபொற்கொங்கையாய்மற்றிதற்கொப்பக்
காரொணத்திகழ்மேனியங்கருடவாகனனுக்
கோரொழுத்தையுமுருத்திரனுபாசகனென்று
பாரதத்தினிற்பலவிடத்திலுஞ்சொலும்படிகேள் (யசு)

தாதுசேர்மலர்ச்செஞ்சடைச்சங்கரன்சருவ
மேதவேள்வியிற்சகலபூதாதியைவேட்டுத்
தீதிலந்தரியாமிநாராயணன்திருவா
ராதனைப்படியவையெலாஞ்சமர்ப்பணமாக்கி. (யஎ)

மற்றவன்திருவருளினான்மகத்துவமெல்லாம்
பெற்றுநான்சகப்பிரபுவானேனென்றபேச்சு
வெற்றிவேலெனத்தோற்றமாகியவிழியணங்கே
கொற்றநீதிம்சரிராசதன்மத்திலேகூறும். (யஅ)

தலைவானவர்சேவைபண்ணுவர்சிவன்கமலத்
தலைநீயுபாசனைசெயுமந்தநான்முகத்துத்
தவனுகந்தெனைவழிபடுமியான்தொழத்தக்கோன்
எவனுமில்லெனக்கண்ணனுர்தாமியம்பியதும். (யகூ)

மூக்கணனைநீண்மூளரிநான்முகன்முகநோக்கித்
தக்கசீர்புனைநாரணனெனக்குமுன்றனக்கும்
மிக்கவந்தரியாமியென்றுரைத்ததும்விளம்பும்
செக்காரம்பல்வாயன்னமேயசுவமேதகத்தில். (உய)



அ-வது-கிரிமடந்தையுபாசனைப்பரிச்சேதம்.

அரவணிந்திடமலரோயகிலநாயகரே
இரவுடன்பகல்பாதுதான்தியானமாயிருப்பீர்
உரைசெயும்பொழுதும்பினும்பெரியர்யாரொன்று
கிரிமடந்தையக்கிருத்திவாசன்றனைக்கேட்ப. (க)

பாதிமேனிசெம்பவளமேநிகர்திகம்பரனும்
கேதவாணிகேளுலகிலஞ்ஞானமாகின்ற
ஓதமாகடற்கோட்நாரணனெனவுரைத்த
சாதியத்தியாயஞ்சொலுங்கருமகாண்டத்தில். (உ)

ஏதமற்றவிளாவிரதப்பெயர்மேவும்
மாதலத்திமவானருள்வானுகளுடனே
ஆதரத்தினோடமர்ந்தருளுஞ்சிவனன்பால்
மேனைதமிக்குளயோகசமாதியைமேவி. (௩)

புனைந்தசீர்மகாபுருடமந்திரஞ்செபித்திதயம்
கனிந்துநீசங்கருடணதியானமுஞ்செய்து
முனைந்துதன்பிதாவானநான்முகனையுந்தந்த
அனந்தனேயரியேயெனப்புகழ்ந்துவாழ்ந்ததனை. (௪)

கஞ்சமாமலராதினுளகவினெலாங்கவர்ந்த
பஞ்சின்மெல்லடிப்பாவையேயபரமபாகவதத்
தஞ்சதானகந்தத்தினிலமர்பதினேழாம்
செஞ்சொலத்தியாயத்தினிற்றெளிவுறச்செப்பும். (௫)

மங்கலம்புனையுந்துளவத்திருமாலைப்
பங்கயன்சிவனாதியார்ச்சனைபண்ணித்
தங்கள்தங்கள்பதங்கள்படைத்தமைசாற்றும்
பொங்குபார்மிசைமாநரசிங்கபுராணம். (௬)

ஆரவாரவலைகடலிற்றுயில்வானை
ஏருலாமலரோனரனிந்திரரெல்லாம்
சீரிதாகவுபாசனைசெய்தனரொன்றே
நாரதீயநவின்றுதிரம்பெறநாட்டும். (௭)

வெற்றிமாலையுபாசனைசெய்தவியப்பால்
நெற்றிலோசனனுன்முகனிந்திரனென்றோர்
உற்றதங்கள்பதங்களையொன்றொழியாதே
பெற்றதன்மைகள்பேசுமிலிங்கபுராணம். (௮)

பங்கில்வாழுயிராணியைச்சங்கரன்பார்த்துப்
பொங்குமாதவஞ்செய்துளபுண்ணியர்க்கல்லால்
செங்கண்மால்சரணாம்புயமேன்மனஞ்செல்லா
திங்குனக்கதுவாய்த்ததேயென்றுகொண்டாடி (௯)

ஏமமாதிருநாமமோராயிருநூறும்
சேமமாமுபதேசமகிழ்ந்தருள்செய்து
நாமநூறுடனுலொடுநாலுநவின்றே
சாமிராமவுபாசனைசெய்ததுஞ்சாற்றி (௰)

தீயுமிர்த்தவுபாசனையின்வழிநிற்றி
செயிழாயெனமுன்புரைசெய்தமையெல்லாம்
வேயையென்றித்தோளிணையாகமமின்னே
எயகூருமநாமபுராணமிசைக்கும். (௰)



௯-வது-மார்க்கண்டனுபாசனைப்பரிச்சேதம்.

வண்டுபாடிமகிழ்ந்தசடைப்பரமனைமார்
கண்டமாமுனிகால்கைசிரம்புவிபற்றத்
தண்டனாகவிழுந்துசதாசிவனேநின்
றொண்டன்முத்திபெறும்படிசொல்லுதியென்ன (௧)

மாதுடங்கனுமவ்விடைவரவர்முனியே
தோன்றனையன்புடமையுயர்திருவா
ராதனைப்புரிகின்றனனொருகடிகைப்
போதிருத்திடெனப்பரிவாலிதுபுகல். (௨)

முந்துபூசைநடத்தியிருந்துழிமுனியும்
நந்திவாகனநீயுலகம்பதினாலின்
வந்தனைருகனென்றுமதித்திடுகின்றோம்
இந்தவாசகமென்னுரைசெய்தருளென்ன. (௩)

மோனமாதவபுங்கவமூவுலகத்தும்
தானமாகியதாபரசங்கமமெல்லாம்
தேனுலாமலரால்ருச்சனையெனைச்செய்யும்
நானுபாசனைசெய்வதுநாரணன்றன்னை. (௪)

இக்கருத்திரகச்சியமின்றுரைசெய்தோம்
சிக்கெனக்கொளுனக்கிதுவேயுபதேசம்
தக்கமுத்தியினிப்பெறுவாயென்றதன்மை
மிக்ககூருமம்வேறும்விரித்துவிளம்பும். (௫)

சோதிபெற்றமயிற்பரியேறுசுவாமிக்
காதரத்தொடுமுக்கணன்மாலையருச்சித்
தேதமற்றனனென்றுரைசெய்ததியம்பும்
பூதலத்துவளம்புனைகந்தபுராணம். (௬)

சலிலமாமதிசெஞ்சடைமீதுதரித்தோன்
இலகுமாலையுபாசனைசெய்தனனென்றே
மலைமடந்தைதனக்குரைசெய்துளவாய்மை
நிலைபெறப்பதுமம்புவிமீதுநிகழ்த்தும் (௭)

ஏயமேன்மையிராமனைமுக்கணனீரேழ்
ஆயிரந்திகழ்கற்பமருச்சனைசெய்தே
தேயமானமகத்துவமெய்தியசெய்கை
ஆயநீதியகத்தியசங்கிதைசொல்லும் (௮)

ஆகையாலரியேபரனென்பதுமழகாரி
தோகைபாகனுபாசகனென்பதுஞ்சொன்னேன்
யாகருந்திவளர்ந்தபசுங்கிளிபோல
ஆகமங்கடெரிந்துமிழற்றுமணங்கே. (௯)

உபாசனைப்படலம்-முற்றும்.—ஆக திருவிருத்தம்-௱௬௯.

அரிதாசர்திருவடிகளேசரணம்.



## ௬-வது-சர்வசிருட்டிவத்துநிருணயப்படலம்.

### ௧-வது-பெரியபிராட்டிபிரமருத்திராதிகளைச்சிருஷ்டித்தபரிச்சேதம்.

உத்தமத்திருமாலினுபாசனைதிற்க
வைத்தவிப்புவனத்தினின்மற்றவன்மார்பில்
பத்தினித்திருவின்னருண்மேன்மைபடைத்தே
வித்தகப்பிரமன்சிவனேமுதன்மேலோர். (௧)

ஆயசீர்புனையம்புவனத்திலனைத்தாய்
ஏயதங்கள்பதங்கள்படைத்தமையெல்லாம்
மேயவேதம்விதித்துரைசெய்தவிதத்தால்
தூயநீமதிதேறிடமாறுசொலக்கேள். (௨)

இட்டமானவிருக்கினிலெட்டெனவோதும்
அட்டகந்தனிலேழெனுமத்தியாயத்தில்
திட்டமார்ந்தசமப்பெயர்சேர்வருக்கத்தின்
மட்டுலாமலர்மாதரியின்மனையாளை. (௩)

தி[illegible]ல்காரணியென்னவுதியாமகையெனவும்
துகைபதன்மனமூகர்தவரோவரவர்தமைமேய
மகிமைநான்முகன்சங்கரன்வாசவன்வசுக்கள்
திகழருக்கராய்ச்செய்பவளென்னவுஞ்செப்பும். (௪)

ஏயவிந்தவிருக்கினிலிந்தவட்டகத்தில்
தூயவிந்தவத்தியாயத்திற்சொல்லியவருக்கம்
போயபின்வரும்புனிதமாகியவருக்கத்தில்
ஆயசீரிலக்குமியரிமார்பினிலமர்வாள். (௫)

முப்புரங்களெரித்திடமுக்கணனுக்குத்
தப்பிலாதபினாகமளித்தருள்சார்ந்தாள்
இப்பெரும்புவனங்களெரிக்கவுநிற்கும்
அப்புராரிபிறப்புமனுக்கிரகித்தாள். (௬)

நந்துலோகசிருட்டிநடத்துதன்முன்னே
முந்துசீர்புனையுந்திறன்முக்கணனுக்குத்
தந்தையாகியநான்முகன்றன்னையுந்தந்தாள்
எந்தநாளுமவட்கிடம்பாற்கடலென்னும். (௭)

பாலவென்றசெழுஞ்சொலினாகமப்பாவாய்
மாலின்மார்பகமாளிகையாயிடைவைகும்
ஏலவார்குழலிலக்குமிமகிமையையெல்லாம்
மேலுநானுனக்கேற்பவிளம்புகின்றேனால். (௮)



உ-வது-வேள்விவிச்சுவநாயகப்பரிச்சேதம்.

வேள்விவிச்சுவமென்றரியைச்சொலிவேதம்
தாழ்விலாதுயர்விச்சுவம்வேள்விதமக்கும்
வாழ்வுகூர்சிவனாயகனென்றவழக்கின்
சூழ்வினாலவனேபரனென்றுதுதித்தும். (௧)

விச்சுவம்மெனநக்கனேயோதும்விதந்தான்
இச்சகத்தனிநாயகனாகையினென்றும்
அச்சுதன்றனைவிச்சுவநாயகனென்னை
உச்சரித்ததுநிருபசாரமதென்றும் (௨)

தகைமைசேர்பஞ்சராத்திரமாயவன்றன்னைப்
பகுதியென்கையினான்மறைநின்றுபகர்ந்த
மிகுநிமித்தமதாகியகாரணம்வேள்வித்
தகள்படைத்தவனேயெனவுஞ்சிலசொன்னாய். (௩)

மின்னுமாழிமுகுந்தனைவேள்வியினாலே
கன்னிபாகனுபாசனைசெய்துகளித்தான்
என்னநீடிருக்கிலியம்புகையாலே.
அன்னசங்கரன்வேள்வியினாயகனானான். (௪)

மங்கலாகமவல்லியெனுந்திறன்மானே
அங்கமான்மழுவாளனைநீடபிசாரம்
தங்குவேள்விதனக்கிறையாவதுகொண்டே
பொங்கும்வேள்வியினதிபதியென்றனைபோலாம். (௫)

மட்டுலாமலர்நான்முகனீந்தவரத்தால்
அட்டமூர்த்தியுமாயதிலாதியனாகப்
பட்டமெய்தியபாலவிலோசனனைத்தான்
நிட்டம்விச்சுவநாயகனென்பதுசெப்பும். (௬)

இந்தவாறுபல்களிரந்தவருக்கே
அந்தநீடுபசாரமடுத்திடுமல்லால்
பந்திசேர்குழலாயரிதானபதத்தான்
தந்தபேணாயுணாப்பதுவோவுபசாரம். (௭)

மகிமையாகியபஞ்சவிராத்திரமாலைப்
பகுதியென்றுவிளம்பியிடும்பரமார்த்தத்
தகுதியின்னதெனத்தெளியாதுணர்தற்கு
மிகவுநின்னறியாமையையேவெளியிட்டாய். (௮)

வீசுபஞ்சவிராத்திரநூலினின்மின்னே
ஆசிலாதசகற்பரிபூரணனாகிப்
பேசுமாதியுமந்தமுமில்லதோர்பெம்மான்
வாசுதேவனெனும்பெயராளுயர்மாயன். (௯)

பரவுமிச்சையினால்வருவாகியபகுதி
புருடகாலவிபத்தமெனும்பொருளெல்லாம்
கிரமதாம்படிசிட்டிசெய்தங்கவைதம்மை
மருவுதேகமதாகமகிழ்ந்திடுமென்றும். (௰)

இனையதாகியசிட்டியியற்றியபின்னே
அனையனாகியவாரணகாரணனாவான்
தனதுலீலையின்மற்றுளதத்துவமெல்லாம்
மனமுகந்துசிருட்டிவகுத்தனனென்றும். (௰௧)

அறிவினான்பிருமங்கவன்சங்கருடணனேர்
பெறுபிரத்தியுமன்னனுருத்திரனும்பெயராய்
மறுவிலாதவன்மனமகங்காரமாம்வகையில்
செறிவுகூரதிதேவதையாயினனென்றும். (௰௨)

இனையவாஞ்சகந்தோன்றலும்பிறத்தலுங்காப்பும்
அனையவாசுதேவன்வயிற்பெற்றவன்றனக்கே
தனுவுமாகியதன்மையாற்சகலமாஞ்சகமும்
புனிதமாயனேயென்றொருபொருள்கொடுபுகலும்

படலம்.

மேனிதன்னையுமுயிரெனவிளம்புமோவென்னில்
மானிலத்தினிற்றேகிதேகாபிமானத்தால்
யானிளைத்தனென்பருத்தனெனென்பதுபோலத்
தேனறுப்பிருமாலையுஞ்செகமெனச்சொலுமால். (௧௪)

பஞ்சராத்திரமறைப்பொருளாகியபடியால்
செஞ்சொன்மாமறைசெப்பியநிமித்தகாரணனும்
வஞ்சிமேல்விடைக்கிஞ்சுகக்குதலைவாய்ப்பயிலே
நஞ்சராவணைத்துயிலுநாராயணன்றானே. (௧௫)



௩-வது-ஜகத்காரணத்துவவிவரணப்பரிச்சேதம்.

தையமருதமாலேயுபதானகாரணனும்
இயனிமித்தகாரணனுமாகியதெங்ஙனென்றால்
உயரவைக்கெலாமேற்கவுமுன்னுளத்தெளிவுற்
றயர்வுநீங்கவுமுத்தரித்தோதுவனதுகேள். (௧)

சிலந்திதன்னிடத்தினின்றுநூலினைச்செலுத்திப்
பலித்தநூலினைமீண்டடக்கிக்கொளும்படிபோல்
பொலிந்தநாரணனிடத்தினிற்புவனங்களெல்லாம்
மலிந்தந்தோற்றமுமொடுக்கமும்பெறுமெனுமறைகள்.

நீதிவேதங்களொருவனேநிமித்தகாரணனும்
ஓதுசீருபாதானகாரணனுமென்றுரைத்துப்
பேதமின்மையுந்தெளிவுறவிளக்குமப்பேச்சுக்
காதரத்துடன்புராணதிட்டாந்தமுமாகி. (௩)

நேரிலாதசீர்நிமித்தகாரணனுபாதான
காரணத்தருப்பக்கண்ணனேவிளங்கிநிற்காட்சி
சீரிதானதற்கேதுசம்பந்தமென்பதனைப்
பாரின்மேற்சொலும்பாகவதாதியாம்புராணம். (௪)



௪-வது-பீதாம்பரனைப்பிறப்பிலியென்றபரிச்சேதம்.

ஈதுநிற்கநாராயணவுபநிடதத்தில்
பேதையேபிறவாநின்றபிரமனைப்பரிவால்
ஓதுசீர்புனையுருத்திரசத்தவாச்சியனும்
ஆதிநாரணனளித்தனனென்னுமப்பொருளே. (௧)

நீலகண்டனுமுருத்திரனிடத்திலேநிறைந்த
கோலமாமலரயன்பிறந்தானெனக்கொண்டாய்

ஓலவேலைசூழ்பூதலமோடதியேலே
ஞலமேவமுளைப்பதுதனைக்கண்டம்பரியாரோ. (௨)

நாரிபாகற்குநான்முகனிடத்தினுற்பத்தி
பாரமாமறைபலபடப்பகருகையாலும்
கோலமால்வயிற்பிறப்பிலுங்குளிர்மலரயற்கு
நீலகண்டனையிளவலாய்நிகழ்த்துகையாலும். (௩)

பெருத்தசுக்தபேதங்களிற்பிரமனிடத்தும்
உருத்திரற்குயர்மறைபிறப்புரைக்கையினாலும்
தரத்தினாலுபர்யிதாவையுமுன்னவன்றனையும்
வரித்தடங்கணாப்மக்களென்றோதவும்வழக்கே. (௪)

ஈதலாதுசத்தச்சலத்தாற்பொருளிசைந்தால்
மாதுமேவியபங்கினன்மலரவனிடத்தில்
சாதமானதுவெளிப்பெறப்பலபடச்சாற்றும்
வேதவாசகந்தனக்கினுவிரோதமாய்விடுமே. (௫)

சிவனிடத்துமாலயனிவர்செனித்தமைசெப்பும்
தவறிலாதவிலிங்கபுராணத்துத்தானே
துவமதாகமுன்சொன்னசொற்கண்டமைதோன்ற
பவலமாவிடத்தானயன்பிறந்ததுபகரும். (௬)

அன்றியப்பெரும்புராணமுந்தாமதமதலால்
துன்றுமாமறையரிதனக்குற்பவஞ்சொலாது
நின்றசாத்திகப்பலபுராணங்களினெறிக்கும்
வென்றிவேதசனுயிம்மொழிவிரோதமாய்விளையும்.

தகுதிமாலயனெனுமிவர்சரீரங்கண்மாறிப்
புகுதியும்புறப்பாடுமேபுரிந்தனரல்லால்
திகழொருத்தருக்கொருத்தர்செனயித்திலொன்றே
தொகுதியாலொருமகேத்திரசாலமுஞ்சொன்னாய். (௮)

நாரணன்வயினான்முகன்பிறந்திலனென்று
பாரிடத்திலோர்சத்தியம்பகர்வதேயானால்
சாரமானவச்சகலவேதாந்தசாத்திரமும்
சீரிதன்றெனவேற்றுநூற்செய்யவேண்டிடுமால். (௯)

அயனிடத்திலேபிறந்ததுகொண்டதோக்கசனென்
றியலுநாமதேயம்படைத்தானெனவிசைத்தாய்
பயனதாகியதோக்கசத்தமாம்பதத்துக்
குயருதன்பொருளுள்ளவாறின்கெடுத்துரைக்கின். (௰)

படலம்.

உணர்செறிந்தவைம்புலன்கள்கொண்டொருவராலறிய
அரியனென்பதுநீடுமட்டாங்கயோகர்க்குத்
திரமதாணவுண்ஞானக்கிணுற்றெரிசனஞ்செய்ய
உரியனென்பதுநாமநிச்சயத்திணிதுணர்க்கும். (௯௪)

நெய்த்தவேல்விழிவல்லியேயித்திறநிற்ப
மூத்தர்போற்றுமாபாரதமோட்சதன்மத்தில்
உத்திகூறுநூற்றறுபத்தோடொன்பதாய்நின்ற
அத்தியாயம்மாதியமூகானவாசகத்தில். (௯௨)

பொருவின்ஞானசம்பூரணராற்றியாணிக்க
உரியஞானகையாலோதுமூர்த்தியுங்கமூம்
மருவிடாதஞானகையாண்மனப்படாமையினுன்
அரிதனக்கமோக்கசட்பெயர்வந்ததென்றனமக்கும். ௯௬

அனையதன்மைநாராயணனென்றதத்தனையேல்
சனனமங்கவன்றனக்கிலையோவெனச்சாற்றில்
வினையிலாவவன்பிறப்பிலாதிருக்கவும்வெகுவாய்ப்
புனிதலோகமேற்றோற்றுமென்றுயர்மறைபுகலும். ()

அன்னவாறுமாலிச்சையாலவதரித்தருளும்
மின்னேநேரிடையாயதின்விபரமேதுணர்ப்பேன்
மன்னுநான்முகன்மாலிடைப்பிறந்திலனென்று
சொன்னசொற்குமாறுத்தரம்பெறும்படிச்சொலக்கேள்.



௫-வது-ஐம்முகனயன்மகனென்றபரிச்சேதம்.

தழைந்தசெஞ்சொனாராயணவுபநிடத்தாணிம்
மொழிந்தசீர்புனைபுருடசூத்திரமுதலாகப்
பொழிந்தமாமறைசகலமும்புனிதமாலிடத்துச்
செழுந்தவத்தயன்பிறந்ததோரிடத்திலோசெப்பும். ()

அந்தநுண்பொருட்கிசைவச்சுதனையம்புயத்தோன்
சிந்தைதன்னினேத்திரந்தனில்வாக்கினிற்செவியில்
முந்துநாசியினண்டத்திஞபிமுண்டகத்தின்
ஐந்தையேயெழுகாலெனைப்பெற்றனையென்றே. (௨)

வாக்கின்வந்தனமட்டெலார்துதிசெய்துவாழ்த்தித்
தேக்கமழ்ந்தபூம்பொன்னடிபணிந்துளசெய்கை
ஆக்கமாகியபாரதந்தனிலயக்கிரீவோ
பாக்கியானமாம்பனுவலில்வெளிப்படப்பகரும். (௩)

பூதநாளுடனொன்றையுமாலையின்புணர்ப்பால்
ஏதமின்றியேயொழுக்கியேவெத்தைநீசகத்துக்
காதிசிட்டியிலெனையன்றேருவளித்தனையென்ன
வேதன்மாயனைப்புகழ்ந்ததுஞ்சொல்லும்வான்மீகம்(

சகத்தையாண்டிடுந்தசாதகுமாரனேநின்பால்
மிகுத்தநீருரும்புதல்வனுய்விளங்கியவிறலோன்
முகத்தமேவவந்தனனெனத்தென்றிசைமுதல்வன்
வகுத்துரைத்தமைவிளம்புமுத்தரவிராமகதை (ரு)

பாவுமின்னவின்புராணநற்பாகவதாதி
திரமதாம்பலபுராணமுஞ்சிறந்தசோதிடமாய்
விரவுபாணுசித்தாந்தநூன்முதலவும்விரிஞ்சன்
உரகசயிபற்பிறந்ததுசொலாதுளதோ. (சா)

வேதன்மாலிடைப்பிறந்தமைமேலுநானுரைப்பேன்
ஈதுநிற்கநும்மிறைவனெண்கண்ணினிடத்தில்
சாதமாயிடுதிக்கையென்றுஞ்சனித்திடுமத்
தீதிலாதநெற்றியைத்தியானத்தலமென்றும். (எ)

பெருகுநற்புனல்வேணியான்பிறப்பிலானென்றும்
பரிசரிக்குநீயெத்தனைவருத்தமும்பட்டாய்
விரகிலொப்பமிட்டெத்தனைவிளக்கியபோதும்
சருகுமித்தனைதரணிமேற்றமனியமாமோ. (அ)

மூன்றுநெற்றியைத்தியானமாந்தலமெனமொழிந்தால்
அந்தநெற்றியிலயன்றியானித்ததேபோல
இந்துமோலியையோகியராயினுமெல்லாம்
சந்ததந்தியானிப்பதுதனைத்தவிர்த்திடாரே. (கூ)

நினைவிலப்படியேதியானிப்பவர்க்கெல்லாம்
இனியவெண்மதிச்சடையனுந்தோன்றிடாதிரானே
இனையதன்மையாற்றோற்றவானதுகொண்டே
புனிதநான்முகற்குருத்திரன்புதல்வனும்போது. (ய)

மிக்கநான்முகன்மகன்சிவனென்றவேதங்கள்
தக்கவேயாகியர்க்குஞ்சுதனென்றுசாற்றுவோ
மைக்கணுயதுநிற்கநும்மருவலான்பிறக்கப்
புக்கநெற்றியைத்தியானமாந்தலமெனும்போது.(யக)

போற்றுமந்தநான்முகன்திருத்தொடையிலேபுகழ்சேர்
ஏற்றுவாகனத்துருத்திரன்பிறந்துளவியல்பும்
தேற்றமானசீர்விண்டுவின்புராணநூற்றெளியச்
சாற்றுமத்தொடைதானுநீடியானநற்றலமோ. (மஉ)

நீலவேல்விழிவல்லியேயிவையெலாநிற்கப்
பாலலோசனன்பங்கயன்பாற்பிறந்தமையும்
ஏலுமுக்கணானான்முகனென்னுமவ்விருவோர்
மாலிடத்துதித்தொடுங்குவரென்னுமவ்வழக்கும். (மரு)

பன்னுமிங்கிவர்பகுதிசம்பந்தரென்பதுவும்
மன்னுகன்மவசத்தரோவென்றிடிவழக்கும்
உன்னுமிச்சையாற்பிறந்திலரென்னுமுத்தரமும்
அன்னமேயுணரக்கின்றனெனுறுதிகொண்டதுகேள். (மச)



கூ-வது-மூவர்முகுந்தனிடத்திலுற்பத்திப்பரிச்சேதம்

திறப்புண்டரீகமலர்ப்பிரமாவுக்குநீண்டசடைச்சிவனுக்குநிலைமையான பிறப்புண்டென்பதுதன்னையிருக்குவேதம்பேசியதுகந்தமலர்ப்பீடந் தன்னில்,சிறப்புண்டதிருமாதின்மகிமைதன்மைசெப்புமிடத்தினின்மு ன்னேதெளிவிலார்க்கும்,குறிப்புண்டாகப்பகர்ந்தேன்பவளச்செவ்வாய்க் குவளைவிழித்தவளநகைக்கோதைநல்லாய். (க)

அம்புவியுமாருதமும்புனலுந்தீயுமாகாயப்பரப்பும்பேரண்டத்தா னும், உம்பரும்போய்மாண்டிறந்த ஊழிகாலத்தோங்குமரியொருவனு மேயுளனாய்நின்றான், பம்மியசீர்புனைந்திடுமவ்வரிதன்னாபிபங்கயத்தினு ன்முகனுற்பவித்தானந்தச், செம்பதுமத்தான்பெற்றான்சிவனையென்று தெளிவாகவெகுவிருக்கிற்செப்புமன்றோ. (உ)

நீரணியுந்தடங்கடல்சூழுமூன்றுநிரைபொருந்திவிளங்கியபன்னிற த்தாசான,தாரணியாமடமங்கைபாலாகாசச் சத்தவாச்சியனுமச்சுதனுக்க ந்த,ஏரணியுஞ்சுரர்குருவுமுக்கணனுமிருவருஞ்சென்மித்ததனையெசுரு வேதத்,தாரணத்தின்முதற்பருச்சமதனிற்பத்தா யனுவாகந்தெளிவாகவ மைத்துக்கூறும். (ரு)

சந்தோகசாமமெனுஞ்சுருதியாலும் சயிமினிசாமத்தாலுந் தகுசாந் தொக்க,நந்தாதசீர்புனையுந்தலைவரானோர் தன்னிலத்துச்சுபகரும நடத் துந்தோறும்,பைந்தாதுசெறிகொன்றைமாலையானைப்பங்கயத்தின்மே லுறையும்பரமன்பெற்ற, மைந்தாநின்பொருட்டுநம வென்றுபோற்று மந்திரத்தின்பொருளையினிமறைக்கலாமோ. (ச)

நரருடனே சுரர்கணமுமண்டந்தானுநடப்பனவுநிற்பனவுநசித்தநா
ளில், பிரமமெனும்பொருளொன்றேயிருந்ததந்தப் பிரமத்தின்றிருநா
பிப்பெரும்பொற்பூவில், பரவுமறைப்பொருடெரியும்பிரமாவுற்ப
வித்தான்பசும்பொற்பூம்பதுமத்தான்பால், அரியவுருத்திரமூர்த்திபி
றந்தானென்பததருவமாம்பிரமாணத்தறியலாமே. (௫)

சதுமுகனில்லைசிவனில்லைப்பாரில்லைச்சந்திரசூரியரில்லைத்தாரையில்
லை, உதகமில்லைத்தீயில்லைவாயுவில்லை ஒன்றுமில்லையாகியபேரூழிகாலத்,
தெதிரொருவரில்லாமற்றனேதானாயிருந்துநாரணன்சிட்டியிச்சை
கூர்ந்து,பதினொருசீரிந்திரியங்களைமுன்சிட்டி பண்ணியபின்னுஞ்சங்க
ற்பந்தான்செய்தான். (௬)

நீளுமவன்றிருநெற்றிநின்றும்வேர்வுநிகழ்ந்துளதந்நீர்கனகநீபமா
ண்ட,கோளமதாகியததிலேகோலநாலுகுளிர்முகத்துநாலுமறைக்காவு
ண்டானான், மீளவுஞ்சங்கற்பிக்கநெற்றிநின்றும் விழிமூன்றுமுச்சிகைக்
கூர்வேலுங்கையும், பாளிதமாமொழியுமிகுதவமுங்கொண்டவன்பிறந்
தானென்றுமகோபநிடங்கூறும். (௭)

சிறந்திடுநாராயணன்றன்னிடத்திலேயா தித்தியர்களுருத்திரர்கள்சிவ
னுவ்வேதன், அறந்தருமாமுனிக்கணங்கள்சகலதேவரகணிதமாம்பூதங்க
ளகிலமெல்லாம், பிறந்துவளர்ந்தனவொன்றும்பிரமன்மாண்டபிரளயத்தி
ற்சொல்லியவப்பேர்களெல்லாம், இறந்துமவன்றன்னிடத்தே யிருக்கு
மென்றுமேற்றசுபாலோபநிடத்திசையக்கூறும். (௮)

பிரமனைநாரணன்பெற்றானீண்டவேணிப் பிறையனைநாரணன்பெற்
றான்சுவர்க்கலோகத், தரசனைநாரணன்பெற்றானகிலலோகமனைத்தையு
நாரணன்பெற்றானாகையாலே,மருவியவெப்பொருளனைத்துந்தானேமு
ன்னாண்மனமகிழ்ந்துதிருட்டிசெய்தவ்வுயிர்கடோறும், விரவிநின்றேய
வரவர்சத்தியுந்தானாகிவிளங்கிநின்றபடியாலாகமமாமின்னே. (௯)

மலரவனுநாரணனேயிமையவல்லிமகிணனுநாராயணனேவானோர்க்
கெல்லாம், தலைவனுநாராயணனேயகிலலோகஞ்சகலமுநாராயணனேத
ப்பாதென்று,சிலையையணிநுதலாளும்பதுமந்தன்னைத்திருமுகத்தினழ
காலுஞ்சிறந்தசெம்பொன்,மலையையணிமுலையாலும்வென்றமானேவா
ய்த்தசுபாலோபநிடமற்றுங்கூறும். (௰)

பன்னுசிவாகமநாலுமேனைநாலும் பண்புபெறத்தெளிந்துணர்க்கும்
பதுமத்தோகாய், இன்னமுமச்சுபாலோபத்தியம்புந்தன்மைவிசைப்ப
க்கேளகிலத்தினியற்சிட்டிக்கு, முன்னிந்தநாரணன்றன்பாதிமெய்யின்
முக்கணனைச்சிட்டித்தான் முறைதப்பாமல், பின்னையிமையோர்களையு
முனிவரானபேரையுமற்றோரையுஞ்சீர்பெறச்சிட்டித்தான். (௰௧)

கண்ணுங்காண்பனவு நாரணனேமன்னுங் கன்னமுங்கேட்பனவுநார
ணனேநாவும்,உண்ணும்போசனமு நாரணனேமூக்குமுயிர்க்கின்றபொ
ருளுநாரணனேமெய்யும், தண்ணித்திண்டுவது நாரணனேநெஞ்சுநயந்
துநினைப்பனவுநாரணனேசொல்லும், எண்ணுஞ்சொற்பொருளுநார
ணனேமற்றுமெல்லாநாரணனேயென்றியம்பாநிற்கும். (௰உ)

பெரும்பிரளயக்காலத்திருந்தவத்துப்பிரமமெனும்பொருளொன்ற
ப்பிரமத்தானே, பரம்பியசீருருத்திரனைத்திங்களானைப்பங்கசனியனைய
மராபதியென்பானை, விரும்பியவீசானனையிந்திரனைக்காலயிருத்தியு
வையனைவரையும்விதித்தானென்று, அரும்பொருளை வெளிப்படுத்துமம
ழகார்செஞ்சொலமர்பிருகதாரணியத்தறையுமாதோ. (௰௩)

ஏதுமிலாப்பிரளயத்திற்பிரமந்தானே யிருந்துளதப் பிரமத்தினிடத்
திற்சிட்டி,ஆதியிலேயவ்வியத்தப்பிறந்ததந்த வவ்வியத்தந்தனினின்றும
கங்காரஞ்சேர்,போதமுளமகதேவன்பிறந்தானென்று பொய்யிடையை
மெய்யிலிருபொற்குன்றேய்க்கும், சோதியிளமுலைவருந்தவரசவன்னந்
தோற்பநடப்பாயிலிங்கபுராணங்கூறும். (௰௪)

நாலுமுகனுஞ்சிவனுமிறந்தநாளினாரணனே தனியிருந்தானங்காயன்
றான், ஏலுமியற்சகம்பிரமாவியமனங்கியிந்திரன்சீருருத்திரனென்றிவ
ரையெல்லாம்,சீலமுடன்சிட்டித்தான்வடிவம்வெண்மை செம்மைசெழு
ம்பொன்மையொளிதிகழ்நீலத்தின், கோலமுடனே விளங்குமென்றும்
வேதங்குளிர்ப்பங்கிரகச்சியத்திற்குறித்துக்கூறும். (௰௫)



எ-வது-சிவன்பிரகிருதிகர்மபாசபிந்துயோனிசம்மந்தபரிச்சேதம்.

மதிநசலுடையெனுமடந்தைபால்விடும்
சதுமுகன்விந்துவாய்ச்சனித்துப்பாதகம்
சிதைவுறப்பேரிடென்றானுந்தேம்புதல்
சதபதப்பிராமணந்தன்னில்லாதுமே. (௧)

பேசகையாலியப்பிராமணத்தினும்
தூசுசேர்மருங்குலாய்சொல்லும்வாய்மைகேள்
வாசமாமலரயன்மக்கள்வேண்டிமுன்
தேசுகூருந்தவஞ்செய்துமுற்றியே (௨)

மொய்ம்பியலக்கினிமுதலதேவரைப்
பம்பியகளிப்புடன்பயந்துபின்னரும்
அம்பளவுயர்வுமோடகலமாகவே
செம்பொனிணைமத்தோர்சிமிழிடத்தினில். (௩)

மேயதன்வித்துவைவிடலுமவ்வழி
ஆயிரமுகம்விழியங்கைகால்களோ
டேயினவுருவுகொண்டெழுந்துமேல்வரும்
சேயினைநோக்கியத்திசைமுகத்தினன். (௪)

என்னைமேவிட்டுநீயெய்துகாரணம்
தன்னையோதுதியெனச்சகத்திற்பாதகம்
இன்னதென்றளவிலதியற்றினேனெனக்
கன்னவாகனபெயரருளிச்செய்தியால். (௫)

இக்கணம்பெயரெனக்கிடாதிருக்கில்யான்
துய்க்குவதிலையெனத்தும்பிபம்புசீர்
அக்கமலாலயத்தமலனன்பினால்
நக்கனைப்பவனெனநாமஞ்சாற்றினான். (௬)

அன்னவன்றன்னையேயட்டமூர்த்தியாய்ப்
பின்னையும்பின்னையும்பேரிட்டானெனப்
பன்னுவதுண்மையாற்பற்கன்பாதகம்
தன்னில்வந்துதித்தமைசாற்றல்வேண்டுமோ. (௭)

கொந்தலர்நறையிதழ்க்கொன்றைமாலையான்
இந்தியவழிபிறந்தெய்தினானென
மந்திரமறைகளின்வருக்கஞ்சொல்லலால்
பந்தனையவனுடற்பகுதியல்லவோ. (௮)

வேறு.

பூசலளிசேர்குழலாயிதனுக்கேற்பப்புராணதிட்டாந்தங்களுங்கேள்பூவைவண்ணன்,மீசுபெறும்பிரதானம்வியத்தங்காலஞ்சீவனெனுநாலுவகைத்தேகியாகி, ஏசறுசீர்சிற்றிடையையிச்சிக்கத்தோளிரண்டினுமுக்கண்ணனுமெண்கணனும், மாசறவேபிறந்ததனைநாரதியம்வண்சிருட்டிசொலுமிடத்தில்வகுத்துக்கூறும். (௯)

பங்கயத்தான்புத்திரனும்பரசுபாணிபாசுபதநூலுரைத்தான்பார்மேலென்றும்,தங்கியசிரிலிங்கபுராணத்திலோதுஞ்சாற்றியமாவாராகந்தனின்மூவேழாம், பொங்கியவத்தியாயத்திற்கமலத்தண்ணல்புரிசடைச்சங்கரன்றனையன்பொடுசிட்டித்து, மங்கலமாங்கவுரியையுமனைவியாகமற்றவற்குப்படைத்தளித்தவாறுங்கூறும். (௰)

இனையபுராணந்தன்னிலத்தியாயமிரண்டொடுதொண்ணூறதனிலேனமூர்த்தி, தனையவனிமங்கைசிலர்சிவனையேகத்தாவென்பர்சிலரரியைத்தலைவனென்பர்,வனசமுனிதனைச்சிலபேர்வத்துவென்பர்மற்றிவரிற்பரமாத்துமாவாரென்று, வினவமகிழ்வுடனந்தவராகமூர்த்திவெளிபெறவேவசுந்தரையாமின்னைநோக்கி. (௰௧)

மாலிடத்திலயன்பிறந்தானவன்சிட்டித்தான் மகதேவன்றனையந்தமகா
தேவன்றான்,சாலவருந்தவஞ்செய்துவரத்தினாலே சகலவறிவும்பெற்றான்
றலத்திலென்று,சீலருடன்பகர்ந்தபடியுரைக்கும்வேறுந் திகழறுபத்தே
ழாமத்தியாயந்தன்னில், ஆலிலையிற்றுயில்வார்பாலயனீசான னாதியவெ
லாம்பிறந்தவடைவுகூறும். (௰௨)

பாம்பணையான்றிருவுந்திமலரிற்றோன் றும்பரமேட்டிகசப்பிரசாப
திகடம்மை, ஆம்படிச்சிட்டிக்கவல்லொருவனாகியா னுமவன்றொடையி
லுதித்தளவிற்பாவம், போம்படிப்பே ரிட்டழைத்தி யென்றென்றெண்
காற்புலம்பியழப்புண்டரிகபுனிதன்றானும், தேம்பலையென் றுடன்படுத்
தியவனுக்கிட்டான்றிருநாமமிருநாலுந்தெளியக்கேளாய். (௰௩)

இக்கணைபமொழிநல்லாய்பவனேசர்வனீசானன்பசுபதியோ டிலங்கு
வீமன், உக்கிரன்மாதேவனுருத்திரனிப்பேரிலோங்கிரவி யவன்சலமேயு
ணர்க்குஞ்சர்வன், மிக்கபுவியீசானன்வாயுத்தானே விளங்குபசுபதியங்கி
வீமனாவான், தக்கபுகழுக்கிரன்றீக்கதன்மாதேவன் சந்திரனேயுருத்திர
னாந்தன்மையானே. (௰௪)

இத்திறத்தாலயனாற்பேரிடப்பட்டோங்குமெண்மருக்குமனைவியர்க
ளெண்மருண்டா,இத்தனுக்குச்சுவற்சலைசீருடையென்பாணீள்செலத்து
க்குச்சுகேசியென்பாடிகழ்பூமிக்குச், சுத்தசிவையென்பவள்வாயுவுக்கங்
கிக்குச்சுவாகாவென்பவளேயதுலங்குவானுக்,குத்தமமாந்தீக்கதற்குத்தி
கைசோமற்குரோகணியென்றினையபகுத்துணர்க்குமாதோ. (௰௫)

மைக்குழலாய்மற்றிவர்க்குமக்கள்பேரும்வகுத்துரைப்பென்பரிதிக்
குமந்தனீர்க்குச், சுக்கிரன்பூமிக்கங்காரகன்காலுக்குச் சொல்லுமனோஜ
வன்மழற்குச்சுடர்வேற்கந்தன்,தக்கசரித்திரவிசும்புதனக்குமன்னுஞ்சந்
தானந்தீக்கதனுந்தகையோனுக்கு, மிக்குவளர்கலையிலுங்கிரணசீதன்
வெண்மதிக்குநுண்மதிச்சவுமியனென்போமே. (௰௬)

இன்னணவாயுயர்விண்டுபுராணத்தெண்ணுமெட்டாமத்தியாயத்திலில
ங்கிநீர,பன்னியசீர்ப்பதினான்காம்வித்தைதன்னிற்பராசரனெனுமுனி
வர்பரமஞானம், மன்னுமயித்திரேயற்குத்தமித்துச்சிட்டிவகுத்துரைக்
குமவ்விடத்துமதிபோனெற்றி, அன்னநடையாகமமாமடந்தாய்சொல்
லுமாங்கதனைத்தெளிவுறக்கேட்டறியாய்போலும். (௰௭)

மற்றுமெழில்சேர்விண்டுபுராணந்தன்னின்மழவிடையோன்றனைப்
பார்த்துமலரோனுமே,முற்றுமுலகங்களுக்குமுதலாமீசன் முகுந்தனிட
ந்தனின்முன்புமுளைத்தேனீயும்,நெற்றிவிழியெம்மிடத்திற்பிறந்தாயிந்
தநீள்சராசரங்களுஞ்சீர்நிறைந்தஞானம், பெற்றசுருதியுமெம்பாற்பிறந்
ததேகாண்பிள்ளாயென்றுரைத்ததொருபேச்சுமுண்டே. (௰௮)

வெற்றிமுனிவர்க்கயனைமாயன்காட்டிமிகுலோககுருவிவனைவிளங்கு
நம்மைப், பெற்றவனும்பிதாமகனுமிவனேயெம்மாற்பெறுவரத்தாலெ
வர்க்குமிவன்பேறுநல்கும், நெற்றியிலெம்பாற்பிறந்திங்கிவன்பின்னோ
னாய்நிகழுமுருத்திரனுமிவனியமத்தாலே, உற்றவரமளிக்கின்றானுலகுக்
கென்னவோதியதுமனுநூலினுரைக்குமன்றே. (௰௯)

ஆசிரமந்தனிற்றனியேயினிதிருந்தவருந்தவநாரணமுனிக்குமமைந்
தநீறு, பூசியசங்கரனுக்குந் தொல்லைநாளிற் பூசல்விளைந் துளவிடத்திற்
பொறிவண்டார்க்கும், வாசமலர்த்திசைமுகத்தான்வந்துதோன்றிமற்றிந்
தமுனிவனையுமறையாற்போற்றிப், பேசியவச்சிவனுக்கும் புத்திசொல்
லிப்பெருங்கோபந்தணித்தவனைப்பின்னும்பார்த்து. (௨௰)

பிரளயத்திலண்டமெலாம்பேர்மாண்டற்றபிரமத்தினிரவகன்றபின்
னராகப், பரவுபுருடோத்தமனார்திருநாபிக்கோர் பங்கயமுண்டானதிற்
பரமனார்தம், திருவுளத்தின்மகிழ்ச்சியினாற்செனித்தேனியான்முன் செ
னித்ததற்பின்பிரமத்தின்றியானத்தந்த, அரிமனத்தின்வெகுளியினானுத
லின்வந்தாயனைத்துலகுஞ்சங்கரிக்கவமைந்தநீயும். (௨௧)

மகிழ்ச்சியினும்வெகுட்சியினுமவனிடத்தில்வந்துபிறந்துளநானுமற்
றநீயும், பகுத்தொருசிட்டிசங்காரத்துக்கோரோர் பாத்திரமாத்திரமந்
தப்பரமன்றானே, சகத்தையெலாம்படைத்தளித்துத்துடைத்துநிற்குஞ்
சகலசத்திமூர்த்தியவன்றான்காணிங்கே, மிகுத்ததவமேவடம்பூண்டிருக்கி
ன்றானீவிபரமுணர்ந்திலையென்றும்விளம்பிற்றெல்லாம். (௨௨)

புண்ணியமாமறைமுழுதும்வரம்புகண்ட புனிதவியாதப்பெயரோ
ன்புகல்கையாலே, மண்ணுலகிற்பஞ்சமமாம்வேதமென்றுவழங்கியமா
பாரதத்தில்வரஞானத்தோர், எண்ணியசீர்மோட்சதருமத்திற்செஞ்சொ
லிலங்கியநாராயணீயோபாக்கியானத், தொண்ணுதலாய்நூற்றின்மேலத்
தியாயமோராறுபத்தொன்பானிலுரைக்குமாதோ. (௨௩)

நற்கமலத்திருநாபியரிதான்பெற்றநான்முகனையுலகசிட்டிநடத்தென்
றோதச், சற்குணராஞ்சனகசனந்தாதியாரைத்தகைமைபெறவங்கவனுந்
தான்சிட்டித்து, வற்கமிகுஞ்சிட்டியைநீர்வகுப்பீரென்ன மற்றவர்களது
மறுத்தமறுக்கத்தாலே, பொற்குராங்கிற்சிவன்றனையும்படைத்தானென்
றும்போற்றியதுநாரசிங்கபுராணங்கூறும். (௨௪)

தரைபுகழும்வைகுண்டசங்கவாதந்தன்னிலேவிளங்கியமாதவனார்நா
பிக், கொருபதுமந்தோன்றியதங் கதில்வேத னுற்பவித்தானவனுமு
ருத்திரனைப்பெற்றான், கருதியருத்திரனிடத்திற்புலவுக்கைவேற்கந்தனு
தித்தானென்றுகனத்தசிட்டிக், கிரமமெலாமடைவுபடப்புவனமீது கிள
த்துகின்றதாங்கதுநீகேளாய்போலும். (௨௫)

ஆதலினாற்சங்கரன்றன்கன்மபாசத்தடங்கினவனென்பதுவுமவன்ற
னக்கின்,கோதுபகுதியிலுமிந்திரியத்திறனாலும்யோனியினிலுற்பவங்களு
ள்ளவாறும்,சாதரூபநாசமூர்த்திருமாலிடத்திலென்றுந்தன்மையுஞ்சொன்
னேனினிதெலாந்தவிரவன்றான்,மேதினியினரன்வடிவாய்ப்பிறந்ததன்மை
விளங்கவுரைத்திடுவேனவ்வியாரங்கேணீ. (௨௯)



அ-வது-சிவன்பற்பலபிறப்புப்பரிச்சேதம்.

அத்திரியார்பத்தினிகற்பழிக்கப்போந்தங்கருஞ்சாபமவளிடமற்றவ
ளிடத்தில்,சுத்தமிகுந்துருவாசமுனியாய்ஞானத்துரோணாசாரியரிடத்த
ச்சுவத்தாமாவாய்,உத்தமமாம்வியாதரிடைச்சுகனாய்நீடுறுவரிடத்துறு
வாயுளத்தின்றானம், மெய்த்துசிகிரிடவரிடமதலினீதிமிகுசைகிடவி
யரானவியாரங்கேட்கில். (௧)

போற்றருஞ்சத்தியோசாதன்வாமதேவன்பொங்கியசீரகோரன்றற்பு
ருடனென்போர், ஆற்றன்மிகுந்துருவாசனசுவத்தாமாவவ்வுருவன்னை
கிடவியராயிப்பார்மேல், தோற்றியதுபிரமாண்டமென்றுந்தொல்லைத்
தூயபுராணந்தெளியச்சொல்லுமேனும், எற்றுளபிரமாணமின்னமி
ன்னமியங்குபுராணப்படியானியம்புவேனே. (௨)

சீதரனார்தாந்தெத்தாத்திரேயராயுந்திசைமுகனாமுதகலைத்திங்களாயு
ம்மாதுறையும்பாகர்துருவாசராயும்வந்துபிறந்தமைபாகவதமுஞ்சொ
ல்லும், போதருளார்பரிகிரித்துப்பொருள்பாராட்டும்புராணரத்தினத்
துமந்தப்புராரிதானே, மேதினியிற்றுருவாசமுனிவனாகிமன்மையுட
ன்பிறந்தகதைவிரித்துக்கூறும். (௩)

பீதகனார் துரோணாச்சாரியனொன்றும் பிள்ளையரன்றிருமேனிப்பிறி
வென்றுஞ்சீர், ஓதிடவீடுமர்வசுவிலொருத்தனென்றுரைத்திடும்பார
தமற்றுமொரிடந்தன்னில்,சோதிபெறும்பாஞானசுகனார்தாமுந்துரோ
ணாசாரியரிடத்தச்சுவத்தாமாவும்,ஏதமிலாவகங்காரசொருபமான விந்து
தான்றிருமூர்த்தமென்றுங்கூறும். (௪)

வரம்பெறுவிச்சுவவரனுமறையோனுக்குமகிழ்ந்துவயிச்சுவரனுய்வ
ந்ததுங்கள், திரம்பெறுகாசிக்காண்டம்புகலுமீசன்செமதங்கியாயுலகித்
செனித்ததன்மை,பரம்பியசொற்றெளிகந்தபுராணந்தன்னிற்பரவுமீமொ
ட்டாங்காண்டம்பகருமந்நூல், நிரப்பவுணர்ந்தார்க்கல்லாலுண்மைதோ
ன்றாநீரளவன்றேவளருநெய்தலெல்லாம். (௫)

வென்றிமழுப்படையேற்றஞ்சிவனுக்குள்ளமெய்ப்பிறப்பைவேத
வேதாந்தநூல்கள்,ஒன்றுரைத்ததொன்றுரையாதிருக்கையாலேவோதிய
விந்நூல்களிற்றானுண்மையேதென், றின்றுநினைக்கின்றனையேலனைய

ன்மை யிசைந்திடு நூலொன்றொழியா தெல்லாமெய்யே, கன்றிகைநே
ரொளிமயிலேபன்மையாகக்கட்டுரைத்தபிறப்பெல்லாங்கற்பபேதம். ()



௯-வது- அப்பிராகிருததிருவவதாரப்பரிச்சேதம்.

மாசறுத்தொளிவீசிளம்பிறைவளர்சடாமுடிவைத்தசீர்
ஈசனுற்பவமின்னமெத்தனையேனுமுண்டதிருக்கமுன்
கேசவற்கிசையும்பிறப்பொடுகேடிலாமைகிளத்தினேன்
தேசுறச்சதுவேதவேதசிரங்கள்சொன்னதிறத்தினால். (௧)

அன்னதற்பரனானமாலவதாரவிக்கிரகங்களும்
கன்னிமேயுலகுக்கனுக்கிரகார்த்தமென்பதும்யோகரால்
உன்னுசீர்புனையப்பிராகதவுருவமென்பதுமுலைவிலா
மன்னுநித்தியமென்னுமாறும்வகுத்துரைப்பன்மகிழ்ந்துகேள் (௨)

அகிலகாரணவாசுதேவனமைந்தசங்கருடணனுடன்
மிகுபிரத்தியமனுன்மறைக்கொருவித்ததாமனுருத்தனும்
மகிமைமீனுயர்கமடமேனைவராகமாளரிவாமனன்
பகிராமர்கண்மூவரோடுயர்கண்ணன்மாவொடுபதின்மரும். (௩)

நன்றிமானுருநானுரைத்தவைநாலுநாலுமோராறுமே
அன்றிநூறுடனாயிரம்பதினாயிரங்களனந்தமாய்
நின்றவிக்கிரகங்களுந்திகழ்நித்தராய்மிகுசுத்தராய்
வென்றிகூரவிருப்பதச்சதுவேதநற்சிகையோதுமே. (௪)

மைத்தமேனிமுகுந்தரிச்சையில்வாய்த்தவிக்கிரகங்களே
நித்தமாகியநாதியாய்நிலைநிற்பதம்புயநிலயனும்
அத்தனேமுதலோர்சரீரமனித்தமங்கவர்தங்களுந்
பத்திகணம்மெனப்பகர்ந்ததுபாமமென்றுளசுருதியே. (௫)

விரிகொடத்துவமெனுமனைத்தினும்விண்டுவேற்றுமையென்னவே
பிருகதாரணியம்மெனப்பெயர்பெறுமறைச்சிரமோதுமால்
நிருபமால்தமதானநற்பதநித்தசூரியர்சேவையால்
விரவுமென்பதுபுவிமதித்திடவேதமெங்கும்விளம்புமே. (௬)

சகலசத்தியினிடமதாயொளிதங்குமேன்மைதழைக்குமோர்
மகிமைவிக்கிரகம்பராபரமானவைப்பினின்மருவுமால்
பகருதற்கருமன்னமூர்த்திபழிப்பில்பற்பலரூபமாய்
திகரில்சத்திபடைத்தொருத்தர்நியாமகத்தினுமன்றியே. (௭)

தேவமானவரூபமுந்திரியக்குரூபமுமிச்சையால்
மேவிலோகமம்காபகாரம்விளைக்குமப்பெருமேனியின்

பாவனுவவதாரமூர்த்திகழ்பாவபுண்ணியவழியினல்
கோலவவென்பொடிமறைச்சிமச்சைகள்கொண்டபாகமதல்லவே, (அ)

நாரணப்பெயரோனிவ்வாறுநடத்துலீலைகள்யாவதும்
காரணத்துமகாரணத்தினுமன்றுதன்கிளர்கருணையால்
தாரணிக்குளறத்தைதயிப்படிதாபனஞ்செயவேயெனுப்
பூரணப்பொருளால்விளங்குபுராணரத்தினமோதுமே. (௯)

கண்ணிணைக்கொடுகாணவாய்கொடுகட்டுரைக்கமனத்தினல்
எண்ணநாசியுயிர்ப்பவின்செவியினிதுகேட்டிடவெளிதலாத்
திண்மைமெய்ந்நிழலுள்ளதன்றுசிவப்புமன்றுகறுப்புமன்
றண்ணிதன்றகல்வதன்றணுத்தரமன்றுகாலமுமன்றரோ. (௰)

ஆர்த்தமாமுயிரன்றுகாலமுமன்றுபேரொளியன்றதன்
மாத்திரைப்படியன்றகத்துளதன்றுவாகியமன்றுதான்
சூத்திரம்பலமணிநிரைத்ததொடைக்குண்மன்னியதொகுதிபோல்
எத்துலோகமனைத்தினுக்குமிலங்குதாபரமாகியே. (௰௧)

மண்ணின்மேலுளதாய்ப்பிறந்துவளர்ந்துபூரணமாய்க்கயம்
நண்ணிநாசமதாம்விகாரநயிச்சமாறுமிலாமலே
எண்ணின்மங்கலகுணமுமிச்சையிலெய்துவிக்கிரகங்களும்
திண்ணமாயுளதன்றுமிங்குரைசெய்யும்விண்டுபுராணமே. (௰௨)

நீதியோனவளர்க்கவுங்கொலைநீசர்தம்மைநெருக்கவும்
ஓதுநீடருமத்தையாக்கவுமுண்மையாகவுகந்தொறும்
சாதமாவதிலாதநானெனதாமுருக்கொடுத்தையினுற்
பூதமாகுவெனென்றமாண்மொழிபொங்குகீதையிலுள்ளதே. (௰௩)

யோனியும்பயிலார்கருப்பமுமுட்புகார்முகிலுருவனர்
மேனிவந்ததமப்பிராகதமெய்ம்மைவிக்கிரகத்தொடே
மாநிலத்தினில்வந்துதித்துவளர்ந்திடுந்தருமந்தனக்
காணியென்பதுமல்லவுஞ்சகராவிவவ்வுவரொன்னவும். (௧௪)

பொறிகளும்பகுதியினுநின்றுடல்பூதசங்கமமன்றுதம்
நிறைவதாகியவப்பிராகதநீடுநின்மலரூபமே
மறுவின்மேனியுமிந்திரியங்களின்வகையுமானதுவண்டுழாய்
நறைகுலாவியமாலைமாமுடிநாரணற்கிவனென்னவும். (௧௫)

அரனைமாமுனிவரனாயித்தரையடிபணிந்தவரன்பினல்
பூவிலிங்கமகப்பதிட்டைகள்பண்ணியாங்கவர்பாலெலாம்

வாமுகந்தெளியோர்கள்போன்மிகுமாயநாடகவகையைநீ
டிருநிலத்தையமயக்கமாயவனிங்கிழைத்திடுமென்னவும். (௧௬)

பாரதப்படைவென்றபின்புபணிந்துவானவர்பரமவெம்
காரணத்தைமுடித்தளித்தனைகன்மமற்றறிமெய்கொடே
வாரமுற்றமைம்பனுமிப்படிவாழவைத்துவளர்த்தியென்
றேருடைத்திருநாடணைந்தருளென்றியப்பினசொன்னவும். (௧௭)

தகுருபோகணியோடுதேவகிசத்ததாமனருத்தரூர்
மிகுபிரத்தியராமதொங்கும்விளங்குருக்குமணிசெய்யவள்
நிகரில்சத்தியபாமையென்னநிகழ்ந்தபேரினர்தமையெலாம்
மகிமைமிக்குயர்பரமமாகியவாசுதேவன்மறைப்பிரான். (௧௮)

ஏசரூபமதாகவேதனிடத்தில்வல்லியொடுக்கியே
மகம்மவியுலாவுசூரியமண்டலத்தைவிளங்குதன்
தேகம்மாமியாப்பிராகததேசமேவினனென்னவும்
பாகுபாடுறம்மறையோர்புகழ்பாரதத்திடைபகருமே. (௧௯)

இருள்கடந்தவுலோகராய்மினிலங்குமார்மறுவுடையராய்
அருள்சுரந்திடுவிழிபராயகலாதசெந்திருவாளராய்
வெருள்செய்தண்டொடுசங்குநேமிகொள்விமலராயுயர்வேதமெய்ப்
பொருள்புகழ்ந்திடுபரமராயெழுபுவனமுண்டருள்புனிதனார். (௨௰)

இரந்தவானவரிடர்களைந்திடவிச்சையானரரூபமாய்
உரந்தரும்புயராவணன்றனதுயிர்குடித்தபினென்னலார்
சாந்தரும்பலபுண்ணிலாவகைதலையுறைச்சசரீரியாய்ப்
டரந்ததன்பதமேவுதன்மையயின்றவான்மிகமோதுமே. (௨௧)

தேவமானவருலகின்மன்னுதிடுக்கமானவைதீரவே
பூவைம்மனிமுகுந்தர்தாங்கிளர்புந்திவந்தவுருக்கொளாப்
டாவகாரியருயினாயுண்குவர்பாலனஞ்செய்வர்பண்பினால்
மேவுவோனாயெனப்பகர்த்திடும்விஞ்சுசீரரிவங்கிசமே. (௨௨)

அகிலதற்பரனனமாயவண்மழிவுமாவதுமற்றநீள்
பகுதிமிக்கவிகாரமற்றொளிர்பரமரூனசொரூபமாய்ச்
சகலசத்திபடைத்துவந்தசனிக்குமந்தவிடத்தினும்
மகிமைபெற்றதனுருவமேவொமிவருவமென்னும்வராகமே. (௨௩)

நந்தகோபர்குமாரராகியஞானரூபர்நலங்கொள்வை
குந்தமேவுறநாளிலங்கொருகுணபமானகும்பைதம்

படலம்.

சந்தமாகியமேனிபோலதுதன்னையவ்வழிதங்குமா
யிந்திரசாலம்விளைத்தகன்றனவொன்றுகந்தமியம்புமே. (உச)

மற்றுமப்பனுவற்செழும்பொருள்வஞ்சம்விஞ்சியசஞ்சனச்
செற்றவிக்கிரகத்தொடேவசுதேவர்தற்தருடேவனூர்
இற்றையிற்பொழுதுஞ்சிவன்முதலெண்ணும்வானவரோனையோர்
உற்றுவாசனைசெய்யவேதமதுலகில்வாழ்குனவொன்னுமே. (உரு)

எண்ணுதற்சிவன்மாயனைத்திகழ்கண்ணனேகருணாகரா
எண்ணுதட்டர்கடமைவதைக்கவுநன்றிபோலாவளர்க்கவும்
மண்ணிலிச்சையினீபுதிப்பதுமற்றுஞலவருமெய்மனோர்
புண்ணிபப்பயமென்றதுண்டுபொருந்துபாகவதத்திலே. (உசு)

எண்ணனைத்தவமுனிவனுக்குயர்கயிலையாளிகைகாட்டியே
எண்ணுமிங்கிவன்மாயமானிடநாடகத்தைநடத்தியென்
றெண்ணலீர்கடவங்கடாணமியாகமேமுதலாகவே
பண்ணுசன்மமெலாமுகந்திவனேபலந்தருபண்ணவன். (உஎ)

அனைத்ததான்வுயிர்க்குமந்தரியாமிமற்றிவனேயவன்
தனக்குமிக்கவருந்திகர்ப்பவர்தாமுமில்லையழுக்கிலா
மனத்தராகிபமுத்தருக்கிவனேவழிப்படுதெய்வமென்
றனைத்துமோதியதன்மைகூறியதின்சொலாலரிவங்கிசமே. (உஅ)

அரிகுலாவியதுளபமாமுடியாழிமாதவனேசையும்
பரிசருபரசங்களும்பரிமளமுமற்றவனென்னவே
விரிவதாகியமிகுதிசொல்லியமேன்மையாற்றிகழ்விண்டுவின்
பொருவிலாதசரீரபந்தியில்பூதசங்கமமல்லவே. (உகூ)

இக்கவேதவிபாதமோதியமிருதிவிண்டுவமேன்மைசேர்
தொக்கதுன்படர்துக்கமற்றவனுமெனச்சொலும்வாய்மையால்
சக்கரப்படையத்தமானுயர்தகுதியாகியபகுதியும்
தொக்கசீவனுமென்றொருத்தர்சொலுந்தரத்தனவல்லவே. (௩0)

மறப்பிலாமலிருக்கவந்துமறப்பபோலவுஞாலமேல்
இறப்பிலாவொருதமதும்மணிபிறந்துபோயினதென்னவும்
பிறப்பதாகியவுலகருக்குயர்தெய்வலீலையைமாயையால்
மறைப்பன்மாதவனென்றிடும்பிரமாண்டமானபுராணமே. (௩௧)

பாசமாமலர்முனியைநாரதன்வந்துபாதம்வணங்கியே
பசுவானினிதமலனென்றொருபெருமாகியநாரணன்

வராமுகந்தெளியோர்கள்போன்மிகுமாயநாடகவகையைநீ
டிருநிலத்தையமயக்கமாயவனிங்கிழைத்திடுமென்னவும். (௧௬)

பாரதப்படைவென்றபின்புபணிந்துவானவர்பரமவெம்
காரணத்தைமுடித்தளித்தனைகன்மமற்றநின்மெய்கொடே
வாரமுற்றமைபவனுமிப்படிவாழவைத்துவளர்த்தியென்
றேருடைத்திருநாடணைந்தருளென்றியப்பினசொன்னவும். (௧௭)

தகுபுரோகணியோடுதேவகிசத்ததாமனுருத்தனூர்
மிகுபிரத்தியராமனொங்கும்விளங்குருக்குமணிசெய்யவள்
நிகரில்சத்தியபாமையென்னநிகழ்ந்தபேரினர்தமையெலாம்
மகிமைமிக்குயர்பரமமாகியவாசுதேவன்மறைப்பிரான். (௧௮)

வசரூபமதாகவேதனிடத்தில்வல்லையொடுக்கியே
மகர்மவியுலாவுசூரியமண்டலத்தைவிளங்குதன்
தேகமோடுயரப்பிராகததேசமேவினனென்னவும்
பாகுபாடுறமேதையோர்புகழ்பாரதத்திடைபகருமே. (௧௯)

இருள்கடந்தவுலோகராய்மிளிலங்குமார்மறுவுடையராய்
அருள்சுரந்திடுவிழிபராயகலாதசெந்திருவாளராய்
வெருள்செய்தண்டொடுசங்குநேமிகொள்விமலராயுயர்வேதமெய்ப்
பொருள்புகழ்ந்திடுபரமராயெழுபுவனமுண்டருள்புனிதனூர். (௨௰)

இரந்தவானவரிடர்களைந்திடவிச்சையானரரூபமாய்
உரந்தரும்புயராவணன்றனதுயிர்குடித்தபினுன்னலார்
சரந்தரும்பலபுண்ணிலாவகைதலையுறைச்சசரீரியாய்ப்
பரந்ததன்பதமேவுதன்மைபயின்றவான்மிகமோதுமே. (௨௧)

தேவமானவருலகின்மன்னுதிடுக்கமானவைதீரவே
பூவைமேனிமுகுந்தர்தாங்கிளர்புந்திவந்தவுருக்கொளாப்
பாவகாரியருயிராயுண்குவர்பாலனஞ்செய்வர்பண்பினால்
மேவுவோரையெனப்பகர்ந்திடும்விஞ்சுசீரரிவங்கிசமே. (௨௨)

அகிலதற்பரனுமாயவழிவுமாவதுமற்றநீள்
பகுதிமிக்கவிகாரமற்றொளிர்பரமஞானசொரூபமாய்ச்
சகலசத்திபடைத்துவந்துசனிக்குமந்தவிடத்தினும்
மகிமைபெற்றதனுருவமேவகாமிவருவமென்னும்வராகமே. (௨௩)

நந்தகோபர்குமாரராகியஞானரூபர்நலங்கொள்வை
குந்தமேவுஅநாளிலங்கொருகுணபமானகுரம்பைதம்

சந்தமாகியமேனிபோலதுதன்னையவ்வழிதங்குமா
யிந்திரசாலம்விளைத்தகன்றனவொன்றுகந்தமியம்புமே. (உச)

மற்றுமப்பனுவற்செழும்பொருள்வஞ்சம்விஞ்சியசஞ்சனைச்
செற்றவிக்கிரகத்தொடேவசுதேவர்தத்தருடேவனூர்
இற்றையிற்பொழுதுஞ்சிவன்முதலெண்ணும்வானவரோனையோர்
உற்றுவாசனைசெய்யவேதமதுலகில்வாழ்குனவொன்னுமே. (உரு)

கண்ணுதற்சிவன்மாயனைத்திகழ்கண்ணனேகருணாகரா
நண்ணுதுட்டர்கடமைவதைக்கவுநன்றியோமைவளர்க்கவும்
மண்ணிலிச்சையினீபுதிப்பதுமற்றுநலவருமெம்மனோர்
புண்ணியப்பயனென்றதுண்டுபொருந்துபாகவதத்திலே. (உசு)

கண்ணனைத்தவமுனிவனுக்குயர்கயிலையாளிகைகாட்டியே
நண்ணுமிங்கிவன்மாயமானிடநாடகத்தைநடத்தியென்
றெண்ணலீர்கடவுங்கடாணமியாகமேமுதலாகவே
பண்ணுசன்மமெலாமுகந்திவனேபலந்தருபண்ணவன். (உஎ)

அனைத்ததான்வுயிர்க்குமந்தரியாமிமற்றிவனேயவன்
தனக்குமிக்கவருந்நிகர்ப்பவர்தாமுமில்லையழுக்கிலா
மனத்தராகிபருத்தருக்கிவனேவழிப்படுதெய்வமென்
றனைத்துமோதியதன்மைகூறியதின்சொலாலரிவங்கிசமே. (உஅ)

அரிகுலாவியதுளபமாமுடியாழிமாதவனேசையும்
பரிசருபரசங்களும்பரிமளமுமற்றவனென்னவே
விரிவதாகியமிகுதிசொல்லியமேன்மையாற்றிகழ்விண்டுவின்
பொருவிலாதசரீரபந்தியில்பூதசங்கமமல்லவே. (உகூ)

திக்கவேதவிபாதமோதியமிருதிவிண்டுவைமேன்மைசேர்
தொக்கதுன்படர்துக்கமற்றவனுமெனச்சொலும்வாய்மையால்
சக்கரப்படையத்தமானுயர்தகுதியாகியபகுதியும்
தொக்கசீவனுமென்றுருத்தர்சொலுந்தரத்தனவல்லவே. (௩௰)

மறப்பிலாமலிருக்கவந்துமறப்பபோலவுஞாலமேல்
இறப்பிலாவொருதமதும்மணிபிறந்துபோயினதென்னவும்
சிறப்பதாகியவுலகருக்குயர்தெய்வலீலையைமாயையால்
மறைப்பன்மாதவனென்றிடும்பிரமாண்டமானபுராணமே. (௩௧)

பாசமாமலர்முனியைநாரதன்வந்துபாதம்வணங்கியே
பசுவானினிதமலவென்றெருபேருமாகியநாரணன்

ஆசுகூர்தரருலகமீதுபிறந்துமோகமடைந்துநீள்
தேசுசேர்திருமேனியிற்பலசெம்புணோடுவருந்தியும். (௫௨)

தூயமெய்ப்பிறவியிற்பலசூதுமாயையின்மூழ்கியும்
அயர்வுநண்ணியுமிகுவிடாய்படசியதனைமன்னியுமரிகளால்
வெயர்வுமெய்யுறவமரிலோடியும்விபாகனைதைமேவியும்
செயலதிப்படிவிளைவதென்பதுதெளியவோதுதியென்னவே. (௫௩)

நளினமேவியதேவனுஞ்சிலநகையரும்பிடநாரதா
துளவமால்புருடர்கண்மடந்தையர்சுக்கிலத்தொடுசோணிதம்
விளையமேனியெடுத்ததில்லைவிளங்குதன்றிருமெய்கொடே
ஒளிகொள்சூரியவுதயமாமெனவுலகமீதிலுதிக்குமால். (௫௪)

உதயமப்படியாகஞானவுருபனோரிடத்திலே
அதிசூக்கயிளைப்புமோகமயர்ச்சிகாட்டுமதசுரரும்
விழையமுத்தியையடைவரென்றுவிலக்குதற்கவர்வீறுசேர்
மதிமயக்குமெனப்பகர்ந்துளவாய்மைசொல்லும்வராகமே. (௫௫)

௩-வது-சர்வசிருட்டிவத்துநிருணயப்படலமுற்றும்.

ஆ. திருவிருத்தம்- ௱௫௮.

அரிதாசர்திருவடிகளேசரணம்.

## ௪-வது-சர்வாட்சகவத்துநிருணயப்படலம்.



### க-வது-ஆதித்திருவருளென்கிற மூலபிரகிருதிபராபரசத்திபரிச்சேதம்.

அன்னவன்றிருமார்பின்மேவியவம்புயத்தவண்மகிமையும்
மன்னுவேதபுராணமென்றுமதித்தநூலின்வழக்கினால்
இன்னதன்மையதென்றுவல்லதியம்புகின்றனனீதுகேள்
மின்னைமென்றுடிதன்னைவஞ்சியைவென்றமெல்லிடையன்னமே. (௧)

இம்பர்போற்றுமிருக்கிலட்டகமெட்டிலேழெனுமத்தியா
யம்பொருந்தியவர்க்கமஞ்சடனஞ்சினும்பதினொன்றினும்
செம்பொன்மாமலர்வல்லிதன்னுபர்திருவருட்குரியவளாயே
அம்புயன்சிவனிந்திராதியர்க்குமென்னவறைந்ததும். (௨)

பெருமைசேர்சிவனுக்குநீபினாகவில்லையளித்ததும்
உரியவச்சிவனையுமவன்றனையுமகிழ்ந்தருடாதையாய்த்
திரமிகும்பிரமனையுநல்புத்திரட்டிசெய்தனளென்பதும்
விரைமலர்க்குழலாய்விளங்கவுரைத்ததுமூன்றும்விளம்பினேன். (௩)

கண்டுரைத்ததெலாமிருக்கவெகுச்சிறிதெனவென்னுஞ்சீர்க்
காண்டமென்றிடுதொகையிலோதுகணக்கிலைசந்திநாலதாய்
மூண்டுநின்றபரிச்சமானதின்முடிவிடத்திலுமிதுவலால்
காண்டகுந்திருமகிமைமாமறைகட்டுரைத்தவிடந்தொறும். (௪)

அண்டகோடிகணிபமனஞ்செயுமாதிகாரணியாகிமா
விண்டுபத்தினியாயுலோகவியாட்கஞ்செறிவிபவையாய்க்
கண்டகண்டவிடந்தொறுந்தலைகண்முகம்பெறுகன்னியாய்
எண்டகும்பலசீவகோடிகளைப்பயந்திடுமன்னையாய். (௫)

இக்கலத்தில்விளங்குமென்னுமிதற்கிலைசந்திடவினைப்டான்
நித்தையாகியபாரிலக்குமிநீளையாயினளென்னவும்
வைத்தபூமிசனங்கட்டம்மைவகிக்குமென்னவும்வன்புனல்
சத்தசாகரமாதிநீளைதரித்துநின்றிடுமென்னவும். (௬)

நிசநிலக்குமிசெல்வமியாவையுநிறைவுசெய்திடுமென்னவும்
அகிலமீதினிலீளையமூவுருவாகிநின்றவணங்குதான்
மகிமைமாயனைநித்தமும்பிரியாமல்வாழ்ந்திடுமென்னவும்
சகலவேதபுராணநூலவடன்சொரூபமதென்னவும். (௭)

அரிவையர்க்குளகுணவிலக்கணமவண்மகத்துவமென்னவும்
பரவுமங்கவன்கருணையிற்பதினாயிரத்தொருபங்கினுக்
குரிமைபெற்றவர்பிரமர்சங்கரருயருமிந்திரரிரவிசந்
திரனெனத்தகுமகிமைகொண்டுசெகத்தில்வாழ்குனரென்னவும். (௮)

ஏத்துமங்கைகளுக்குநாமகளிமயவல்லியிலங்குசீர்
பூத்தயௌவனவிந்திராணிபொலிந்தமேதைவிரத்திசீர்
வாய்த்தகார்சினைவாணிமேசழியர்வர்க்கமென்னவுமோதுமால்
சாத்திகப்பதுமச்செழுந்தொடைதன்னிலுத்தரகாண்டமே. (௯)

வண்டலம்பியவேதியாகமவல்லியின்னமுமொன்றுகேள்
தெண்டிரைக்கடல்க்கடையவந்துசிறந்தசெந்திருமங்கையைக்
கண்டுவாசவன்முதலிமேலோர்கள்கருத்தயர்ந்துகவின்பெறும்
புண்டரீகமலர்க்கண்மாலிருபொற்பதங்கள்வணங்கியே. (௰)

இங்குநின்றுவிளங்குகின்றவளியாவளென்றதுமிருசையில்
பொங்குசங்கொடுதேகிரியேந்தியபுயனுமவ்வழிபுகலுவான்
தங்குசீர்புனையிப்பராப்ரசத்தியென்மயமாயுமென்
மங்கலம்புனையலைவியாபுமென்மாயையாகியுமருவுமால். (௧௧)

சாற்றுகின்றசராசரத்தொடுசகலலோகசமூகநான்
தோற்றுவிப்பதுமீண்டொடுக்குதறன்றுவிப்பதுமிவளால்
போற்றுமிங்கிவள்கோடிசூரியர்பொற்பொடும்புயநாலொடும்
ஏற்றமாகமுனநுபவித்ததும்மையவேந்தனிடத்திலே. (௧௨)

ஈத்துமிங்கவள்கருணைபெற்றவரியாவரங்கவரம்புயம்
பூத்தநான்முகன்புராரிபுரந்தராதியராவரால்
வாய்த்தவப்பிரமன்சிவாதிகள்வாழுமிங்கிவண்மகிமையின்
சூத்திரத்தினின்மதிமயங்குவதொன்றுசொல்லியசொல்லெலாம். (௧௩)

புடவிமீதுவிளங்குகூர்மபுராணமூடேபிராமியத்
தடைவதாகநிகழ்ந்தசீர்முதலத்தியாயமுரைக்குமால்
மடநலாய்திகழினையசன்மையைமருவுமந்திரசாத்திரத்
திடையுமோதுமினிக்கதைகளியல்புமோதுவனினிதுகேள். (௧௪)



௨-வது-வேதரூபவிகங்கபூபதிபரிச்சேதம்.

சித்திரம்பெறுகருடனுக்கியநிரிவிருத்துயர்சென்னிகா
யத்திரங்கணிலங்குதோமமதாத்துமாவறிதொன்றிலாச்
சத்ததாகியவாமதேவியசாமநீடுசரீரமாம்
மொய்த்திடுஞ்சிறகுப்பிரகத்திரதங்கடாமெனமொழியவே. (௧)

எக்கிஞவெக்கினியமேனியைந்தசந்தமுறுப்பெலாம்
மிக்கதிண்ணியமேபதங்கள்விளங்குபேசுவேதமென்
றுக்குமந்தவெசுச்சினெனவோதுகாண்டமொழுக்கமாய்
வைக்குமாதிபருச்சநீள்தசமாறுவாகமுரைக்குமே. (௨)

மறைகளிற்றிகழ்சாமவேதம்வளம்பொருந்தியநாலதாய்
அறைபிராமணமானவாரிடவப்பிராமணமதனிலே
இறுதியாகியகண்டமுன்னரியைந்தகண்டவியற்குணின்
நெறிதிருந்தவிளங்கிமேற்படநின்றசாமமோர்பத்திலே. (௩)

ஒன்றநற்சிரமுந்துசாமமிரண்டதாவதுகந்தரம்
மூன்றதாவதுதோள்சணலதுமொழிபுமெய்யினுறுப்புமேல்
தோன்றுமஞ்சினொடாறுபொற்சிறைசொல்லுமேழதுவடிவமங்
கான்றவெட்டடனொன்பதுந்தொடையையிரண்டதுபின்னதே. (௪)

என்றுவேதமெலாமதிப்புடனேயிலங்கியகருடனைத்
துன்றுவேதசொரூபனென்பதுசொல்லுமத்தகுசொற்களோ
டொன்றநீடியநாரதீயமுரைத்தகாருடகவசமால்
நின்றகோசமதனிலுமைக்கொளிநீலமேவுமிடற்றினன். (௫)

கண்ணன்வாகனமானசீர்புனைகருடபாவனைபண்ணியே
வண்ணவார்கடல்கடையவவ்வழிவந்தெழுந்தவிடத்தினைத்
திண்ணமாகியபுவனமீதுதிருத்தமாகவருந்தினேன்
விண்ணுளோரிடர்தீரவென்றமைவிரியமுன்னும்விளம்பினேன். (௬)

பஞ்சராத்திரநூலுமாலுறைபரமமானபதத்திலே
செஞ்சொலார்கருடன்பணிப்பதிசேனைகாவலர்முதன்மையாம்
தஞ்சமாகியநித்தசூரிகடாமுகம்பொடுசந்ததம்
எஞ்சலின்றியசேவைசெய்துகொடினிதிருப்பர்களென்னுமே. (௭)

இனையராகியநித்தசூரிகளென்றுநித்தனொனுந்திறம்
தனையெசுச்சினிலாதிகாண்டதலத்தணித்தயருச்சமூன்
றினில்விளங்கதுவாகமாறினிலெங்களாரணர்தங்கிவாழ்
புனிதமாம்பரமப்பதத்தியல்புகலுமவ்விடையோதினேன். (௮)

வாமமேகலையல்குலாயிதுநிற்கமாதவனருளினால்
சேமமானவனந்தவிச்சுவசேனைகாவலன்முதலினோர்
தாமுமிச்சையினாலுகந்தவதாரமெய்துவனொன்றிடும்
நாமமேவியகாருடப்பெயர்நன்னுகின்றபுராணமே. (௯)

அன்னமாமணியாழிநித்தியமாய்வியாபகமாயவன்
தன்னையென்றுமகன்றிடாதுதழைக்குமென்பதுதனையெலாம்
இன்னதாமுறையித்திறங்களிலின்னவின்னவிடத்திலே
சொன்னதென்றிசைவித்ததிவ்வழிசொல்லல்வேண்டுவதில்லையே. (௰)

அகிலலோகமதிற்பிறப்பிலியாயிருக்கவுமாழியான்
புகலுருப்பலவாகுமென்றுயர்புருடசூத்தமுரைத்தசீர்
மகிமைவாய்மையையொத்திடும்பிரமாணமித்தனையோதினேன்
மிகவுநீயவையுட்கொளாயெனவேதவல்லிவிளம்பினள். (௰௧)



௧-வது-சர்வாந்திரியாமிபரிச்சேதம்.

இடைபொற்றுடிநேராரணப்பெண்ணிவ்வாறுரைக்கவிளமஞ்ஞைப்
பெடையொத்திடுமாகமமாதும்பீதாம்பரனேபரனானால்
சுடர்பற்றிடுதீவிழிப்பாலச்சூலக்கரத்தனிருநாலு
வடிவத்தொன்றுஞ்சூரியமண்டலமத்திமத்துவாழ்வானை. (௧)

மூர்த்தச்சொன்னசிவன்றனக்குமொழியும்பெயரிலொருபெயரிட்
டிந்தச்சகத்தைமதிமயல்வித்திடுவானவனேயென்றியம்பிக்
கந்தக்குழலாய்மறையோர்கள்காயத்திரியிற்றியானிப்பர்
அந்தப்பிரமஞ்சிவனென்றேயவனிற்பெரியோராரென்றாள். (௨)

அயில்வேல்விழிபாகமமானீதறையச்சொல்வாளருமறைமான்
மயிலேபரிதிமண்டலத்தில்வாழ்கின்றானுமறையோர்கள்
இயலுங்காயத்திரிப்பொருளாயிருப்பானுந்தம்மிதயத்தை
முயல்விப்பானுஞ்சிவனன்றுமுகுந்தனதுநான்மொழியக்கேள். (௩)

பயிலந்தரியாமியதாகிப்பலபல்லுயிர்க்குளுறைவானும்
வெயின்மன்னியபொற்கிரணத்துவேதமயமாம்வெய்யோன்றன்
உயர்மண்டலத்திலுறைவானுமொருவனென்றேவுறுதிபெற
இயல்கொண்டுயர்நீடசுவேதத்தேராரணத்தியம்பிடுமால். (௪)

மின்னையவ்வந்தரியாமிவிண்டுவென்னும்படிதெளிய
அன்னாரணநீவனிடத்திற்பரமாத்துமனென்றுரைத்ததுவும்
தன்னேரில்லாவிந்திரற்கந்தரியாமியைமாறென்று
சன்னுமிருதமெனலானகவுடியத்திற்கழறியதும். (௫)

அரனுக்கியலந்தரியாமியரியென்றதருவணசிரத்தில்
தெரியப்பகர்ந்தபடிதானுஞ்சிறக்கும்வாமதேவன்முதல்
உரைபெற்றுளபேர்பிறருக்குமுயரந்தரியாமியைமாலென்
றிருமைச்சுருதியலவிடத்துமேற்கும்படியேயிசைத்ததுவும். (௬)

பாராகாயம்புனலங்கிபவனமெனவேபகர்கின்ற
சீராம்பூதமஞ்சுக்குஞ்சிறக்குஞ்சிவகோடிக்கும்
நாராயணனந்தரியாமியென்றுநாலுவிதமாகப்
பேராலுபரந்தரியாமிப்பிரமாணத்திற்பேசியதும். (௭)

மலங்களொன்றுமில்லாமன்மகிழுங்கோலமணிவண்ணன்
நலங்களேழினிகழ்கின்றசகலபூதாந்தரங்கட்கும்
இலங்குஞ்சீரந்தரியாமியென்றுதெளியவியன்ஞானம்
துலங்குமகோபனிடத்துடனேசுபாலோபநிடஞ்சொல்லியதும். (௮)

ஏற்றம்பெறுமிச்சுருதிகளுக்கெல்லாமிசையும்படியாகத்
தோற்றங்கிரிநேரிரணியனுஞ்சுடர்வேலவுணன்சுதன்றனக்குத்
தேற்றந்தருமந்தரியாமிதிருமாலென்றுதெரிந்தபடி
போற்றுநாரசிங்காதிபுராணம்பலவும்புகன்றனவும். (௯)

உரகாபரணனுடன்பிரமனுனக்குமெனக்குமுயர்மாலந்
தரியாமியெனப்பாரதத்தாச்சுவமேதத்திற்சாற்றியதும்
அரன்மாறனையந்தரியாமியாக்கப்பெறலாலருவரைவில்
புரிவாலெடுத்தானெனக்கன்னபருவந்தன்னிற்பகர்ந்தமையும். (௧௦)

பூவின்கொடிநேரம்பிகையைப்புகர்வெம்மழுவோன்பார்த்தருளித்
தாவுங்கயனேர்தடங்கண்ணாய்தழைக்கின்றசராசரமெல்லாம்
மேவுஞ்சருவாந்தரியானவிண்டுமகிழ்ந்தவிடந்தன்னைச்
சீவிக்கின்றேனென்றபடிதிழ்பாகவதஞ்செப்பியதும். (௰௧)

மானேமுன்னும்பகர்ந்திட்டேன்மற்றச்சருவாந்தரியாமி
தானேபரிதிமண்டலத்திற்றழைக்கின்றானென்றேசுவேதம்
தேனூர்செஞ்சொலாரணத்தாற்செப்பியதற்குத்திட்டாந்தம்
மேனூன்காயத்திரிகற்பவிதத்தால்விரித்துவிளம்பக்கேள். (௰௨)



௪-வது-காயத்திரிப்பொருள்விவரணப்பரிச்சேதம்.

நிறைவாகியகாயத்திரியினீலமிடற்றான்பெயரொனநீ
அறியாமையினாற்பொருள்கொண்டச்சொற்றன்னையரியென்று
செறிவேதாந்தமானமயித்திராவருணியோபநிடத்தில்
உறைவேல்விழியாய்நிச்சயித்தேவுரைத்ததர்த்தவுரைக்கொக்க (௧)

தாதொன்றியபங்கயத்தானைத்தமைபோற்றியாச்சவர்கியனார்
பாதம்பணிந்துசகற்குருவேபதினாலுலகும்படைத்தோனே
ஓதுங்காயத்திரிதன்னினுரைக்கும்பொருளென்னுளந்தெளிய
ஈதென்றுரைப்பாய்விண்ணப்பமிதுவேயெனவெண்கண்ணனும். (௨)

மலையின்குலத்தின்மேருப்போன்மனிதப்பிறப்பின்மறையோர்போல்
பலநன்னதியிற்கங்கையைப்போற்பருவமாதில்வசந்தனைப்போல்
இலகும்பிரசாபதிகடமிலெம்மைப்போலீடெழில்வேதச்
சொலிலிக்காயத்திரிமகிமைத்தோற்றம்பெரிதென்பதுஞ்சொல்லி. (௩)

வேதங்களுக்குப்பிரணவமேவேறொன்பதுவும்வியாகிருதிப்
பேதங்களுங்காயத்திரியின்பிறப்புந்தெளியப்பேசியதில்
ஓதுஞ்சவிதாவொளிர்மாலென்றுபதேசித்தபடியுரைக்கும்
தீதொன்றில்லாப்புவிமீதுசிறக்குங்காயத்திரியிதயம். (௪)

துறையோர்புகழ்கௌசிகமிருதிதன்னிற்காயத்திரிப்பொருளைப்
புரைதீர்பரிதிமண்டலத்திற்பொருந்திச்சகலர்புந்தியையும்
திரமாய்முயல்வித்திடுந்தேவன்றேசோராசியாணிக்கப்
பரமானந்தந்தருமென்றும்பகருமதுதானேதென்னில் (௫)

அந்தத்தேசோராசியதாமமலட்பருடனைவோர்கள்
சிந்தைக்குள்ளுந்தினகரன்றன்செழுமண்டலத்துந்திகழுமென்றும்

தேனார்காயத்திரிதன்னிற்செப்பியிருக்குஞ்செழுஞ்சொற்கு
நானாவிதமாய்ப்பொருள்கொண்டுநாட்டினமைநானவில்கின்றேன் (௰௪)

அகத்தும்புறத்துஞ்செறியிருளையகற்றல்பாவமறுத்திடுதல்
பகுத்தகாலச்சொருபமதாய்ப்பலத்தையளித்தல்படாமழையால்
செகத்தைப்படைத்தறித்தலெனச்செப்பியதெலாஞ்செயவலமால்
மிகுத்தபரிதிமண்டத்தில்விளங்காநின்றானென்றுளதால் (௰௫)

அகிற்புத்தினியசங்கிதையுமந்தச்செழுஞ்சொற்கடுத்தபொருள்
செகத்தைப்படைத்துக்காத்தின்பந்திகழ்வாமுத்திசேர்த்தலெனத்
தொகுத்துச்சவிதாமாலென்றேசொன்னதந்தச்சொற்கேற்ப
மகிக்குட்சவிதாவெனும்பெயர்மாலுக்காயிரநாமத்துளதால். (௰௬)

எல்லார்மனத்துமிருக்கின்றவென்னைப்பரிதிமண்டலத்தில்
நல்லாடகம்போலொளிர்மெய்புநான்குந்தோளுந்தானாக,
உல்லாசத்தானினைத்திடவெனவுயர்மாறருமற்குரைத்தபடி
சொல்லால்விளங்கும்பாரதத்தாச்சுவமேதத்திற்பகர்ந்திடுமால். (௰௭)

பேசுந்தனதுமண்டலத்திற்பீதாம்பரன்வீற்றிருக்கையினால்
வீசுங்கிரணவொளிபடைத்தவெய்யோன்விண்டுமயமென்ற
ஏசிறிருமால்புராணத்திலிரண்டாம்பஞ்சகத்தினிடைத்
தேசம்புகழுமெட்டாமத்தியாயந்தன்னிற்செப்பியதால். (௰௮)

மைத்தண்குழலாய்சிவபரமாய்மதியின்மையினீபொருள்கொண்ட
சத்தந்தனக்குப்பிரபஞ்சசாரநன்னூல்சதுவேதம்
மெத்தும்பரிதிமண்டலத்தில்விளங்குந்தேசோராசிதனைச்
சித்தங்கருதுமெனக்காயத்திரிநிச்சயத்தைச்செப்பியதால். (௰௯)

---

௫-வது - அருக்கனந்தரியாமி தரிசனப்பரிச்சேதம்.

இத்தன்மையதாம்பொருட்கெல்லாமிசையும்படியோன்றின்னமுங்கே
மைத்தண்குழலாய்மயனென்பான்மனமாதரித்துவந்திக்க [ள்
உத்துங்கஞ்சேர்மாத்தாண்டனுறைமண்டலநின்றொருபுருடன்
சித்தமகிழ்ந்தங்கவனுக்குத்திகழுஞ்சானித்தியனானான். (௧)

சானித்தியமாகியமூர்த்திதனைக்கண்டசுரத்தச்சனுநீள்
ஞானப்பொருளேசூரியன்றனலஞ்சேர்மகிமைநவிலென்ன
வானத்துறைமண்டலநின்றுவந்தங்கிழிந்தமாபுருடன்
தானப்பரிதிமகிமையைவித்தரித்தேமொழியத்தலைப்பட்டான். (௨)

ஸ்ரீரமாமயனேகேள்வாசுதேவன்றானேபரப்பிரமம்
உரைசேருஞ்சங்கருடணனென்றுளனங்கவனிலொருமூர்த்தி

பரமானந்தவம்மூர்த்திபண்பாற்செலராசியைச்சிட்டித்
தரிதாகியதன்வீரியத்தையந்தச்சலராசியின்விட்டான். (௩)

அதுபொன்மயமாகியதோர்பேரண்டமானதவ்வண்டத்
துதரங்கிளரந்தகாரமதாயுற்றததில்லையுட்புகுந்து
கதிர்கொண்டெழில்சேரனுருத்தக்கடவுடோன்றிக்களிகூர்ந்தான்
எதிர்வேறில்லாவிரணியகர்ப்பனுமென்றவனேயிசைபெற்றான் (௪)

ஆதிப்புருடனுகையினலவனேயாதித்தியனுலகைச்
சாதத்துவஞ்செய்கையிலவனேதாவும்புகழ்ச்சூரியன்றானும்
ஓதப்பெறுமச்சூரியனேயுயர்நான்முகனைச்சிட்டித்துத்
தீதற்றுயருஞ்சகற்சிட்டிசெய்வதவன்றன்செயலாக்கி. (௫)

அத்தன்மையதாஞ்சிட்டியெலாமடைவேபரிபாலனமாக்கிச்
சித்தங்களிக்கச்சகஞ்சூழ்ந்துதிரியாநின்றான்றினகரன்சீர்
இத்தன்மையெனச்சொலிமறைந்தானிதெலாந்திகழ்சூரியசித்தாந்
தத்திற்கிளரத்தியாயத்திற்சாற்றுஞ்சோதிசாத்திரமே. (௬)

பதுமாசனனுய்க்கேயூரபாணிகிரீடகுண்டலச்சேர்
பிதனுய்ச்சங்காழியுமேந்துபீதாம்பரநாராயணனே
கதிர்சூழ்பரிதிமண்டலத்திற்களிக்கின்றனென்றவனையன்றோ
நிதியார்மறையோர்செபந்தன்னினித்தந்துதியாநிற்கின்றார். (௭)

மின்னும்பரிதிமண்டலத்தின்விளங்குங்காயத்திரிப்பொருளாய்
மன்னுந்தேவன்பேரொளிசேர்மாலேயென்னும்வகைதெளியப்
பன்னுஞ்சாந்தோக்கியோபநிடம்பகருமயித்திராவருணம்
முன்னுஞ்செழுஞ்சொற்றயித்திரியமுதலாம்வேதாந்தத்தாலும் (௮)

சார்வாங்காயத்திரியிதயத்தாலுங்குசிகன்சங்கவத்தன்
ஏராரகத்தியன்சனகனியாச்சவற்கனிவருளாக்சப்
பாரோர்புகழ்மிருதியாலும்பாராசரியபுராணமுடன்
சீராகியபாரதத்தாலுந்திகழ்மந்திரசாத்திரத்தாலும் (௯)

இத்தாரணியோர்க்கிருகண்ணுமியல்பாகியசூரியசித்தாந்
தத்தாலுஞ்சம்மதமாகத்தனாயோரறியும்படிச்சொன்னேன்
மெத்தாதவன்றன்மண்டலத்தில்விளங்குந்தேவன்சிவனென்ன
முத்தார்நகையாய்நீசொன்னமொழிதான்சத்தச்சலமென்றாள். (௰)

௬-வது-சர்வரட்சகவத்துநிருணயப்படலமுற்றும்.

ஆ-திருவித்தம். ௩௩௩.

அரிதாசர்திருவடிகளேசரணம்.

# ௫-வது. சகலவேள்விபதிநிருணயப்படலம்



## ௧-வது - வேதவிபரீதார்த்தவேள்விப்பரிச்சேதம்.

இதுநன் சுருதிமயில்சொல்லவியலாகமமானெடுத்துரைப்பாள்
முதிருங்காயத்திரிதன்னின்முக்கட்சிவமூர்த்தியைமொழியும்
அதுவுஞ்சத்தச்சலமாகியவனும்பரனேயல்லாக்கால்
விதியின்கிரமம்பெறுஞ்சகலவேள்விப்பதியாரோவென்றாள், ()

மானேர்விழியாகமமயிலிவ்வசனங்கூறமறைமாதும், [ப்போல்
தானேபொருடோற்பினுஞ்சூதைத்தவிராப்பேதைத்தன்மையை
தேனேயெல்லாமொழிந்திதனைச்செயமென்றெண்ணிச்செப்பு
கின்றாய், ஆனாலுன்றன்மனந்தெளிய வதுவுஞ்சொல்லியறிதி
[யென்றாள். (௨)

விருமம்மொழிக்காகமமானுமின்னேயொரடிகுறைந்தாலும்
அகலுந்துரவுகட்பார்களருய்யாதாளத்தமிழுவரால் [லும்
தொகைபெற்றிடுமத்தபஞ்சகத்தோர் இறைக்குத்தரநீதோற்று
சகலபொருளுந்தோற்றாய்நீதானென்றேருதத்தலைப்பட்டாள். ()

அவியின்பொருளாம்பசுக்களுக்குமடைவாகியசோமத்துக்கும்
கெவியங்களுக்குங்குறிப்பாவான்கிருத்திவாசனேயென்றும்
நவையொன்றில்லாப்பசுபந்தநடத்துந்தோறுநயனநுதல் [ம்()
சிவனைப்போற்றியனுமதத்தாற் செய்யவேண்டுஞ்செகத்கென்று

விசையாகியவெவ்விடைக்கொடியான்வேள் விவளர்த்ததனில்வந்
பசுவானதெலாமெனதென்றுபகர்ந்தானென்றும்பயனுன [த
எசுருவேதத்திநிற்சொல்லுமிந்தவேதத்தினிலெழில்சேர்
சசிம்பான்முகத்தாரணமானேதனக்கொப்பில்லாச்சமகத்தில் ()

வைப்பாகியவிப்புவனத்துவத்துவெல்லாமெனதென்றே
அப்பானிறையுஞ்செஞ்சடையானபிமானித்தபடியாலும்
ஒப்பான்மானேர்தடங்கண்ணுயோங்குமேசுவேதந்தன்னில்
தப்பாமொழிசேர்முதற்காண்டந்தன்னிலெட்டாம்பருச்சத்தில்

வருக்கமானபசுக்களைமந்திரத்தால்வழங்குமவ்விடத்தில்
இருக்குந்தேவனுருத்திரனேயிரண்டாவான்மற்றிலையென்றுப்.
பரத்துவத்தைச்சொலலாலும்பங்கிற்பாவையொடுங்கூட
அருத்திகூரநுகர்ந்தருளென்றுகுப்பசுவீந்திடலாலும் (எ)

அனையவாகுவெனுஞ்சொல்பாரகமுமதனைப்பகர்ந்திடலால்
கனமதானபன்றியும்பார்கல்லவலதாகையினாலும்

திணையும்வராகவவதாரநெடுமாற்குண்டாகையினலப்
பனகசயனன்சங்கரற்குப்பசுவாய்வேண்டுகையினாலும் (௮)

ஆருவெனும்பேர்மூடிகத்துக்கமைந்தேயிருக்கவதுவன்றித்
தோணகயனையாய்மாலென்றேசுற்றித்தொடர்ந்துபொருள்கொ
ளகமேதுக்கெனவுரைக்கின்றேங்குபுருடசூத்திரத்தில் [ள்ளும்
யாகத்தாலேயாகத்தையெகித்தார்தேவரெனுமிடத்தில் (௯)

பேசும்புருடன்றனைப்பசுவாய்ப்பிணித்தாரென்றயடியாலும்
மாசொன்றில்லாப்புருடச்சான்மாவைச்சொல்லும்வழக்காலும்
தேசம்புகழ்மால்பசுவாகைதிண்ணமானசதுவாலே
ஏசிலாருதனையுமவனென்னத்தகுமாகையினாலும். (௰)

பரமபுருடனுமாயன்பசுவானமையாற்சுபதியாம்
அரனேவேள்வியின்சொரூபமாகவேண்டுகையினாலும்
துரமாஞ்சிவஞராதனையைச்சொல்லும்புருடசூத்திரமந்
திரமாமறையும்பசுபதிமந்திரமாய்வேண்டுகையினாலும் (௰௧)

எமப்பரிதிதழல்வளியாரிந்துநெடியமாலெல்லாம்
சோமப்படராலாகின்றதென்றேயிருக்கிற்சொல்லுகையால்
தாமக்குழலாயச்சோமசத்தமுமையங்கனையல்லால்
ஓமச்சோமநறைதன்னையுரைத்ததல்லாமையினாலும் (௰௨)

தரணிபோற்றுமெசுவேதந்தன்னில்வேள்வித்தலையையுருத் [ல்
திரன்பூண்பறுத்துநிலத்திட்டான் சிலயாலென்றுசெப்புகையா
விரவுமந்தச்செமூஞ்சிரந்தான்மிக்கவேள்விச்சத்ததுக்
கருகமானமால்சிரமேயாகவேண்டுகையினாலும் (௰௩)

முருக்கினிதழாயெசுவேதமுதற்காண்டத்தின்மூன்றாகும்
பருச்சந்தன்னிலந்தமதாய்ப்பகருமநுவாகந்தன்னில
கருக்கொண்டிலவுமழைமேகக்கணங்கடவழுங்கயிலாயத்
திருக்குஞ்சிவனைவேள்விதனக்கிறைவனென்றவியல்பாலும் (௰௪)

திருவின்மார்பன்றனைப்பார்த்தன்செய்தபூசைசிவன்றனக்கே
அருகமானதெனப்புவிமேலஞ்சாம்வேதமோதுகையால்
விரவுதேவர்சகலருக்கும்வேட்குமவியின்கூறெல்லாம்
பிரசவேணியனுக்கேயற்பிதமாயிருமாகையினாலும் (௰௫)

சாமவேதந்தனிற்பிரபதப்பேர்மாமந்திரத்தினிடை
ஏமமேருவில்லையந்தணனென்றியம்பியிடலாலும்

தூமமேவுங்கருங்குழற்பைந்தொடியேயிந்தச்சொற்கேற்கப்
பூமிபோற்றும்பிரமாண்டபுராணங்கந்தபுராணத்தும் (௧௬)

மாலையரசர்மரபென்றுமலரோன்வணிகர்குலமென்றும்
சீலமுடையபுரந்தரனைத்திரமாகியசூத்திரனென்றும்
சாலுமிமையோர்தங்களைச்சங்கரசாருபமொன்றுஞ்சாற்றி
ஆலமிடற்றுப்பெருமானையந்தணாளனெனலாலும் (௧௭)

உயருங்குலமாமறையோனுக்குவணக்கொடியோனும்பர்பிரான்
அயனென்றுரைக்குந்தாழ்குலத்தோராராதிக்கவருகமதாய்ச்
செயலின்முறைமையதனாலுஞ்சிவன்றன்குலத்தின்பெருமையி
கயிலைகிரிவாழுமையாள்பங்கனுபாசியதொகையினாலும்() [னால்

பன்னுமவர்கடமக்குள்ளபாவந்தீர்க்குமெகசேவதம்
தன்னிலுஞ்சீராலுயர்ந்தசதருத்திரியமந்திரத்தும்
கன்னிபொருபங்கினிலவாழக்கயிலைக்கிரிமேல்வாழ்வானை
உன்னிலெருவருயர்ந்தவரிவ்வுலகத்துண்டோவென்றுரைத்து()

உரைத்தவிந்தமொழிக்கெல்லாமுலகத்திட்டாந்தமுமாகப்
பரித்தசூலப்படைப்பூசுபதிக்கேமுதற்சம்பாவனையும்
திருத்தமாமுதல்வழிவுந்திரமாய்நடக்கும்படியாலும்
பெருத்தவேள்விகளுரியபரப்பிரமஞ்சிவன்றனையென்றாள் ()

## ௨-வது. வைதிகவேள்விப்பரிச்சேதம்.

மன்றலணிதாராகமமாமடந்தையிவைதாம்வகுத்துரைப்ப
வென்றிவிழிவேலாரணமாமடந்தைமிகவுநகைத்தனளாய்
நன்றுமொழிந்தாய்நின்போலநல்லோரில்லையானிதனுக்
கொன்றுமொழியாதுத்தரிக்குமுறைகேளெனவோதுவதானாள்;

மானேசிவனைவேள்விபெறமறைகள்சொல்லாதிருக்கவுநீ
தானேயொன்றைமிகவிபரீதார்த்தமாகப்புகன்றாய்
பூதாரிரண்டுமில்லாமற்புனைநாமாலைதொடுக்குகைக்குத்
தானேவல்லாய்வெளிமசக்கமென்றுசொல்லத்தலைப்பட்டாள்.

திதமின்றியமோகனநூலைச்செயமென்றுரைத்தமின்னையப்,
பதுமாசனன்சங்கரன்முதலோர்பரமபுருடோத்தமன்றன்னை
விதமன்னியவேள்விகளாம்லமிகவேயாராதனைசெய்து [ளீ()
முத்துதம்பதங்கள்பெற்றமைத்துமுழுதுத்தராநான்மறையகங்க

தொக்கபசுக்கள்கவ்வியங்கள்சோமம்புரோடாசங்களெல்லாம்
மிக்கதேவர்சகலருக்கும்வேறுவேறுகுதிவேட்பத்
தக்கவேதம்விதிக்கையினாற்சாற்றும்பசுச்சோமாதிகட்குத்
திக்கம்பரந்தானொருவனுமேதம்மையுத்தேசிகனாமோ; (௪)

அடுத்தபசுபந்தஞ்செய்யுமவிடத்தரனையனுமதிகொண்
டெடுத்தவேள்விமுடிக்கின்றாரிவனேபரனென்றெண்ணுதியேல்
தொடுத்தபுவிமேற்பசுபதியாய்ச்சுரராலந்தச்சூலிவரம்
படைத்தபடியாலனுமதந்தான்பண்ணிக்கொள்வாரத்தனையே()

தாவுவிடையான்றனைவேதந்தாழ்க்கவேள்விவதத்துவுக்குக்
காவலாளியென்னவுரைக்கையினாற்றனதுகாவற்குள்
மேவுகின்றபசுக்கடமைவினியோகஞ்செய்திடுமளவும்
பூவைநல்லாயெனதென்றுபுகல்கைக்குரிமைபோதாதோ, (௬)

உலகிற்பொருள்களெல்லாமென்னுடைமையென்வேயுருத்திரனீ
டலகில்சமகத்துரைத்தானென்றறியாதுரைத்தாயதன்பொருள்
கேள்,மலையின்மடந்தைதன்பாகன்வன்னியினைமுன்போற்றியபி
ன், இலகுசகலபதந்தருவானென்றுநெடுமாலையும்போற்றி (௭)

அந்தத்திருமாலருள்வழியேயாராதிக்கவிசயமுடன்
எந்தப்பொருளுமெனக்குண்டாயிடுகயாகத்தாலென்றான்
முந்தப்புருடசூத்திரத்தின்முகுந்தனுடைமையுலகெனலால்
கொந்துச்சடையானெனதென்றுகுறித்தானென்னக்கூடாதே()

எழில்சேர்நக்கனொருத்தனுமேயிரண்டாவான்மற்றில்லையென்ன
அழகாகியநீடெசுவேதத்தாதிகாண்டத்திருநாலாம் [மே
மொழிசீர்பருச்சத்துரைத்ததெனமுன்பின்பொருளைப்பாரா
விழிமூன்றுடையான்பரனென்றுன்விபரகினம்வெளியிட்டாய்

வம்புசெறியுமுலையாயம்மகத்தாகியமந்திரப்பொருள்கேள்
இம்பருலகின்முன்னாளோரியாகம்வேட்குமிடந்தன்னில்
உம்பரிருந்தோரனைவருக்குமோரோர்கபாலமுபகரித்திட்
டம்பொனெழில்சேர்சாலையிடத்தங்கோர்கபாலமிருத்தலுமே()

அந்தச்சமயத்தவிப்பாகமார்பெற்றிலரொன்றாராய்ந்திட்
டிந்துச்சடையானொருவனுமேயிரண்டாவான்வேறில்லையென்று
சந்தித்தவனுக்காகுபசுச்சமற்பித்தாரத்தனைப்புந்தி
மந்தித்தவர்கள்காணலையுமாநீயொன்றுமருளாரோ (௰௧)

அரனுக்கங்குச்சமற்பித்தவாறுப்பசுவையரியெனநீ
விரவுமனமாச்சரியத்தால்விபரீதாத்தங்கொள்ளுதியேல்
மருவுமங்கிமாபுருடன்வாய்த்தவாறுவடிவாகிச்
சுரணைமறையப்போனபடித்துலங்குமெசுச்சிற்சொல்லுகையால் ()

அங்கிப்புருடனுருத்திரனேயன்றேவானுலந்தவுமை
பங்கனுலகிற்றனக்கேதான்பசுவானதுமாய்முடியாதோ
அங்கண்மயிலேயிதுநிற்கவாறுவெனும்பேர்வாரகத்துக்.
கிங்குநிகழுநிகண்டுகளுடியம்பிற்றில்லாமையினாலும். (௰௩)

பின்னையொரிடத்தினிற்சுருதிபெருச்சாளிப்பேராகுமென்றும்
மன்னும்பன்றிதனக்குப்பேர்வராகமென்றும்வகைபிறித்துச்
சொன்னதன்மையதனாலுந்துலங்குமாதிவராகந்தான்
அன்னநிலத்தையெடுத்ததலாலகழ்ந்ததில்லாமையினாலும். (௰௪)

ஓதக்கடலிற்றுயில்வானேயோமப்பசுவென்றுரைத்திடுதல்
வேதத்துக்குமுலகுக்கும்விருத்தமானபடியாலும்
தீதற்றிடுமவ்வாறுபதந்திகழ்மூடிகமாகையினாலும்
சூதக்கிளிநேர்மொழியாயிச்சொல்லாலொன்றும்வெல்லாதே (௰௫)

திகழும்புருடசூத்திரத்திற்றேவர்புருடப்பசுப்பிணித்து
மகமொன்றிழைத்தாரெனுமிடத்தின்மற்றப்புருடன்மாலெனநீ
புகல்கின்றனையச்சிவன்றனையும்புருடசத்தஞ்சொலலாலம்
மகிமைச்சிவனேபசுவென்றுன்மறுக்கவுனக்குவழக்குண்டோ (௰௬)



௫-வது-புருடப்பசுவிவேகப்பரிச்சேதம்.

அன்னநடையாயிவைநிற்கவந்தப்புருடப்பசுவாமொன்
றுன்னிலயனேநானதனையுனக்குத்தெளியவுரைக்கக்கேள்
மன்னுமிசைசேர்மறைகள்பரவாசுதேவன்றனைப்போற்றிப்
பின்னையவன்றன்றிருமேனிப்பிறிவாநாலாம்பெருமானை. (௧)

ஆதியானகாரணனையனிருத்தப்பேருடையானை
ஓதும்பரிதிமண்டலத்துக்குயரும்பதத்திலுறைவானைச்
சோதிமயமாமவன்றனையுந்துதித்திட்டந்தச்சுடர்மூர்த்தி
தீதிலாதசெகற்சிட்டிசெய்தபடியுஞ்செப்புவதாய், (௨)

பெரிதாமந்தவனிருத்தப்பெருமானுலகப்பிரபஞ்ச
விரிவாகியசிட்டியிலிச்சைமேவிமுந்திவிராட்பகுதி

உருவானதனைப்படைத்தருளிவாங்கும்நற்பொருளிற்குத்
தூரமாகியதோர்புருடனையுஞ்சித்தமுகந்துசிட்டித்தான் (ரு)

அந்தப்புருடன்மந்தமதியாகியிருப்பவதனைப்பார்த்
திந்தப்படியேயனிருக்கின்றாயென்றுநினைவவனைக்கெந்தாய்
புந்தித்தெளிவின்மையென்றுபோற்றிப்புகலப்பொறியளிசேர்
கந்தத்துளவத்தொடையானுங்களிகூர்ந்தவன்மேற்கருணையினால் ()

ஆறுன்மைந்தவெனையங்கிபாகக்கருதியரும்பகநீ
தானும்வெள்ளிபொருந்தியரிசமுகமாகத்தழைமலரில்
தேமையந்தநெய்பாகத்திகழுஞ்சாமேறவியாகத்
தூநாமஞ்சேர்கீர்த்திமேயமதாகையாகியயித்துமமாக. (௬)

விஞ்சுபார்நீவெளிநீர்காள்மேவுபுத்தியகங்காரம்
எஞ்சலில்லாவிலைவதாமோமேரமூம்பரிதியேயாகப்
பஞ்சபூதமாத்திரையும்பகருங்கருமேந்திரியமஞ்சும்
செஞ்சொல்ஞானேந்திரியமஞ்சுஞ்செறியும்புலனுந்திறமஞ்சும் ()

அந்தக்கரணந்தானொன்றுமாகக்கூட்டிமூவேழும்
சந்தச்சமிதைதானாகச்சாற்றுங்கிரமந்தப்பாமல்
இந்தப்படியேமகம்வாழ்வியிழையாயிழைத்தாலெழின்ஞானம்
புந்தித்தெளிவுமுண்டாகும்புவனசிட்டிபுரியென்ன. (எ)

மகிழ்வுற்றவனும்பங்கிருந்தமாலைத்தழலால்மனங்கொண்டு [ஞ்செய்
தகுமப்பெருவேள்வியைத்தொடங்கித்தன்னைப்பசுவாய்ச்சமற்பண
தகிலச்சிட்டிசெய்வதனுக்கமைந்தானென்றவடையெல்லாம்
முகிழ்த்தனத்தாய்வெளியாகமூற்கலோபநிடஞ்சொலுமால். (அ)



௬-வது-பரத்தாமனேபசுபதியென்றபரிச்சேதம்.

உருத்திரனேயேபசுபதியென்றுரைத்தாயந்தவுண்மையுங்கேள்
அருத்திகூருமெசுவேதத்தாருங்காண்டத்தினிலிரண்டாம்
பருச்சமதனிற்சிவன்றனையம்பரத்தோர்போற்றிப்பயங்கரமுப்
புரத்தைமெமக்காய்ச்செயித்தருளிப்புகழாபரணம்பூணென்றார்.(

திரந்தங்குமையோரீதுணைப்பத்திங்கட்கொழுந்தார்சடையானும்
பரிந்தங்கவரைப்பார்த்தெமக்குப்பசுவுக்கெல்லாம்பதியாக
வரந்தந்திடுதிராமாயின்மருவார்மருவிவாழ்ந்திடுமுப் [ன்றான்.()
புரத்தின்புவிமேற்பொடியாகப்பொன்றப்பொருவேனம்பாமெ

நன்றென்றிமையோர்வரங்கொடுத்தார்நந்திவாகனனுமேகிப்
பொன்றிண்கிரியைசிலையாகப்பொருந்தார்புரத்தைப்பொடிசெய் [தான்
அன்றுமுதலாய்ப்பசுபதியுமானனென்றேயாரணத்தில்
என்றுந்திருமால்பசுபதியென்றியம்புமியல்சேர்சுருவேதம். (௩)

என்னுமெசுவேதத்திலிரண்டாங்காண்டத்தினின்மூன்றாய்
நண்ணும்பருச்சத்தைந்தாய்நவிலுமநுவாகந்தன்னில்
வண்ணந்திகழுத்திரப்பசுக்கள்வனதின்பசுக்களானதெலாம்
திண்ணஞ்சசிபிந்திரன்வருணையாத்தெய்வமெனலாலும். (௪)

அன்னபுகழ்சேர்சுருவேதத்தாதிகாண்டத்தினிலஞ்சாய்
மன்னும்பருச்சத்தின்முதலாய்வைத்தவநுவாகந்தன்னில்
துன்னுகின்றபசுக்களுக்குத்துவட்டாத்தெய்வமெனலாலும்
பன்னுசிவனார்முக்கியமாய்ப்பசுரும்பசுவின்பதியன்றே, (௫)

வேழ்வியதனாற்சிவனைவேட்டார்விண்ணோரெனுமிடத்தில்
தாழ்விலாதசிவவேயத்தக்கவேள்விதானென்றாய்
சூழ்விவேகயிலாவிருதைத்தொல்லைப்புவியிலொருவருடை,
வாழ்வைத்தனதென்றிழுமாந்தரால்வந்துபலித்தாப்போலாமோ(௬)

---

௫-வது-வேள்விப்புருடன்விவரணப்பரிச்சேதம்.

பின்னேசிவனைவேள்வியெனவேதந்தன்னில்விளம்பிடா
தந்நேமிமேமகவேள்வியாகிநின்றவனையுங்கேள்
பொன்னார்கமலத்திசைமுகத்தன்புவனசிட்டிசெயமனத்தின்
உன்னுவிரவிற்பசுறன்னினுகந்துசிலைச்சிட்டித்தான், (௧)

திவத்திற்பிறந்தபேரெல்லாந்தேவராஞூரிரவினிலுற்
பவித்திட்டவர்களசுரரெனப்பட்டார்முந்துபகர்தேவர்
சுவற்கப்பதத்தையிச்சித்துச்சொல்லுமிந்நன்கெனும்யாகத்
தவத்தைச்செய்தார்தவப்பயன்கடாமவ்வுலகாய்த்தழைத்துளவால்()

பற்றிப்பின்னுந்தவஞ்செய்தார்பயில்பூவுலகிற்பகிருக்கும்
சொற்றம்புவர்லோகத்தெசுஞ்சுவற்கவுலகிற்சாமமுமாய்
முற்றும்விளங்கிற்றவர்தவத்தைமுயன்றார்பின்னுமுயலளவில்
மற்றொப்பில்லாவிருக்கெசுசாமங்களென்னுமறைமூன்றில். (௩)

ஓகைபெறவேயடைவினிற்காருகபத்தியமுமொளிகிளரும்
வேகமுளதெக்கணாக்கினிபுமிகுவாகவனீயச்சுடரும்

ஆகமமென்றும்பிறந்தவவர்வற்றுந்தணியாதிருந்தவத்தில்
ஏகமனதாமாயோகத்திருந்தாரவர்களிருப்பளவில் (௪)

அந்தவங்கிகளிற்கண்களவையாயிரமுமாயிரமாம்
முந்துதாளுமாயிரமாமுகமாயிரமேமோர்முழுமூர்த்தி
வந்துமுளைத்தான்முளைத்தவனைவானோர்வாழ்த்திவந்தனைசெய்
தெந்தைநீயாரெனவவனுமெச்சப்புருடனியானென்றான்; (௫)

மின்னிடையாயிருக்சாமவேதத்திருபத்தாகுதியின்
மன்னிநின்றபிராமணத்தில்வளர்த்தியாயமொருமூன்றில்
சொன்னதந்தப்புருடனையேதுலங்கும்வேள்விவிண்டுவென
அன்னநடையாகமமானேயந்தச்சாமவேதத்தில். (௬)

வீறுகியவப்பிராமணத்தின்மிகுமத்தியாயம்பதின்மூன்றில்
ஆறுகியகாண்டந்தன்னிலையந்திரப்பகர்ந்துளதால்
ஈறேதுமிலாத்திருமாலையிலங்கும்வேள்வியென்றின்னம்
கூறுநின்றபிரமாணக்கொள்கையுரைப்பேன்குறிக்கொள்ளாய், (௭)

மூந்துமிருக்குப்பிராமணத்தின்முதற்பஞ்சிகையின்மூன்றுகி
வந்துநிகழ்த்தியாயத்தின்மருவுநாலாங்காண்டத்தில்
விந்தைவளருமணிமார்பன்விண்டுதானேவேள்வியெனப்
பந்தியளகப்பசுங்கொடியேபார்மேல்விளங்கப்பகர்ந்திடுமே; (௮)

எசுவேதத்துமுதற்காண்டத்தேழாம்பருச்சத்திரண்டாம்
வசைதீரநுவாகந்தன்னின்மாலேவேள்வியெனவுரைக்கும் [ன்
இசைகூடொசுவேதத்திரண்டாமெண்ணுங்காண்டத்திரண்டொடுமூ
றசையாப்பருச்சத்தநுவாகத்தைஞ்சென்பதமப்படிச்சொலுமால்

மொழியுமந்தமறையின்னுமூன்றாங்காண்டமுதற்பருச்சத்
தெழில்சேர்பத்தாமநுவாகமியாகந்திருமாலென்றுரைக்கும்
அழகாமந்தக்காண்டத்திலஞ்சாம்பருச்சத்தாதியதாய்ப்
பிழைதீரநுவாகமுமாலேபெருவேள்வியெனப்பேசிடுமால் (௰)

இதலாலஞ்சாங்காண்டத்திலிரண்டாம்பருச்சத்திருநாலா
வதுதானுகிவிளங்குமநுவாகந்தனிலுமாயவனே
இதமாம்வேள்வியென்றுரைக்கும்வேதமின்னம்வேள்வியையச்
சுதனேயென்றுபகர்ந்தமையைச்சொல்லச்சொல்லத்தொலையாதே

இந்தமறையின்பொருட்கெல்லாமேற்பவிமையோரொழின்மாலைப்
புந்திமகிழ்வான்மிகுவேள்விப்புருடனென்றுபுகழ்ந்தமையைத்

சந்து திகழுமணிமுலையாய்சாற்றும் விண்டுபுராணத்து
மூர்ந்து மஞ்சத்தினிலாறுமூன்றுமாமத்தியாயத்தில் (௰௨)

வனசமகளைப்புரந்தரன்றன்மானேயுலகமாதாவே
புனிதவேள்விச்சகலமுமாய்ப்பொலிந்தநெடுமாறிருமார்பில்
தினமும்வாழநீமுன்னாட்செய்ததன்றோதவமென்ற
திணைய நூலிலிவ்வஞ்சாமத்தியாயமியம்பிடுமால் (௰௩)

எஞ்சாவேள்விவடிவாயவியஞானனைப்பாரதமுனி
விஞ்சாகுதிசேருஞ்சகலவேள்வியாலும்வேட்டுத்தன்
நெஞ்சாணந்தம்விளைந்துயர்ந்தானிலமேலென்னப்பாகவதத்
தஞ்சாங்கந்தத்திலேழாமத்தியாயமறைந்திடுமால் (௰௪)

---

௯-வது - மகபதிதேர்ச்சிப்பரிச்சேதம்.

யாகப்பதிமாலென்பதனுக்கின்னம்பிரமாணம்பலகேள்
மாகப்புனலாங்கங்கைதனைவாநாரதமாமுனியனாகி
ஓகைபெறவேகூர்ப்பிற்கல்காருகூர்ப்பீடங்குயர்ந்தகன்ற
மேதகக்கமடங்கிடந்ததனைத்தெரியக்கண்டுதிகைப்புற்றான் (௧)

திகைத்தமுனிவன்கமடத்தைச்சேர்ந்துநீடுசெகத்தினிலுன்
மகத்துவன்றோமகத்துவென்னவரிக்கச்சட்டோம்வாமுனியே
புகழ்ச்சியேதுக்கென்றனைப்போலப்பதினாயிரமாயினா
வகித்தவிந்தமாநதியின்மகிமையன்றோமகிமையென, (௨)

கங்காவானநதிமுனிவன்கண்டுபோற்றிக்கைகுவித்து
நங்காயுன்றன்மகிமைசொலநாவாயிரம்போதாதென்னப்
பொங்கார்நதியுமுனியேயென்போலப்பதினாயிரமாறு
தங்கார்கலியின்மகிமைக்குச்சரியாமகிமையில்லையென்றாள். (௩)

மருவுங்கடலைமுனியணுகிவரசாகரமேயுனதன்றோ
பெருமையெனவப்பெருங்கடலும்பேசுமுனிவர்பெருமானே
இருமைபுனையுங்கடலென்போலேழுண்டதெலாமெளிதன்றும்
தரையின்மகிமைகொண்டாடத்தக்கமகிமைதானென்ன, (௪)

நிலமங்கையைநாரதனணுகிநேமிப்புவியேயுனதன்றோ
இலகுமகிமையெனவந்தவெழின்மாநிலமங்கையுஞானம்
பொலியுமுனியேநீபுகழப்பொருளோநானென்பாறைதாங்கும்
மலையின்பெருமைக்குவமானம்வகுக்கக்கெளிதோமற்றென்றாள்

பொருப்புக்குலத்தைமுனியணுகிப்பொன்னின்சிகரப்பூதரங்காள்
விருப்பம்புகழினும்மைப்போன்மேன்மைபெற்றுரெவரொன்ன
உருப்பெற்றுயர்மாமலைக்குலமுமொண்மாமுனியேதான்முகனுல்,
வரப்பெற்றெமக்கிப்புகழென்னமற்றங்கவன்காண்மகத்தென்ன ()

வரமாமுனியுஞ்சொல்லிடவிம்மட்டேயன்றேவெனமகிழ்ந்து
பிரமாவவனையடிபணிந்தான்பெருமையன்றேபெருமையென
அருமாதவபானிப்புகழ்ச்சிக்கருகனல்மேலன்றோனத்தின்
உரமேயெனச்சத்துவமதனுலோங்குமறையேமகத்தென்ன, (எ)

வீணைமுனிபுமறைகளின்பால்மேவிப்பணிந்துவேதங்காள்
மாணுவவனிதனிலுங்கண்டிகிமையன்றேமகிமையெனப்
பூணுஞ்சுருதிகளுமெம்மைப்புனைவேள்விகளின்பொருட்டாகக்
காணும்விதித்தானுகையினுற்கனவேள்விகளேமகத்தென்ன, (அ)

சொன்னவேள்விகண்ணனைத்துணிந்துதுவாரபதிநண்ணி
மன்னுமுனியுநெடுமாலைவணங்கிவசுதேவன்மைந்தா
உன்னதன்றேமகிமையென வுயர்தக்கணையோடொக்குமென்றான்
என்னையைபந்தெளிந்ததெனவியன்மாமுனியேகுவதானுன், (கூ)

அவையிலிருந்தமண்டலிகரமைச்சர்மறையோரனைவோரும்
மவுனமுனிவந்தென்கேட்டான்மாலென் சொன்னுன்மான்மொழி
டுவகையுடனீங்கென்றெளிந்தாமேடைா நின்றுனென்னென்று(கேட்
றுவலதறியார்முகமுகங்கணோக்கிநோக்கிவியப்புற்றுர், (ய)

வியப்புற்றவர்மான்மலரடியின்விழுந்துகண்ணுவிண்ணப்பம்
அயிர்த்த முனிவந்தென்கேட்டானதற்கென்சொன்னுயருளென்ன
செயச்சக்கரக்கைத்திருமாலுந்திகழ்வெண்முறுவல்சிறிதரும்பத்(ச்
துயக்கற்றிடுமம்முனிதானேசொல்லக்கேண்மின்றெடர்ந்தென்ன

அழைத்தார்முனியைநாரதனேயம்போருகமொன்றுந்தியிலே
தழைத்தானுக்குமுனக்குமுளசல்லாபத்தின்சமிஞையி
மொழித்தாம்வரவிங்குறையென்றார் முனியுமவர்கண் முகம்பார்த்
தொன், றெழித்தானில்லையெல்லாஞ்சொன்னுனேமென்றவருமுள
[ந்தெளிந்தார், (யஉ)

இன்னதன்மைப்பெருங்கதைதானிருமையொன் பான்புராணத்து
மின்னும்பொருளைவெளிப்படுத்தவியாதமுனிவன்விரித்துரைத்த
பன்னுஞ்செஞ்சொற்பாரதமாய்ப்பயிலுமஞ்சாம்வேதத்து
மன்னுமரிவங்கிசந்சொலுமிம்மட்டேயன்றுமற்றுங்கேள், (யங)

ருகிழ்வாணகையாய்விருத்திரனுமுனேவலவுணன்றனைக்கொன்ற
மகவான்றன்னைப்பிரமகத்திவந்துசூழ்ந்துதொடர்தலுமே
நிகழ்வாளரவிற்றுயில்வானைச்சென்றுபணிந்ததேவர்பிரான்
மிகவாகியதன்குறையெல்லாம்விரித்தேவிண்ணப்பஞ்செய்தான் ()

குறைசொல்லியவானவர்கோவைக்கோவிந்தனுநீள்கருணையினால்
விறறங்கியவேற்புரந்தரனேவேள்விச்சொருபமாமென்னைத்
துறைமன்னியதந்திரநீடச்சுவமேதத்தாலாராதித்
துறுநின்மேனிப்பிரமகத்தியொழித்துக்கொள்வாயாகென்றான் ()

உரைத்தபடியேவாசவனுமுயலச்சுவமேதயாகத்தால்
அருத்திகூரவேள்விவடிவாமாலாராதனைசெய்தான்
பெருத்தபிரமகத்தியுநீங்கப்பெற்றானிப்பிரமாணம்
விரித்துமொழியுமுத்தரவான்மீகராமாயணத்துளதால், (௩௬)

௩-வது. வேள்விமறுத்தவேநன்சரிதப்பரிச்சேதம்.

வேரிக்குழலாயினிற்கவேநனென்றோர்நரபதியைப்
பாரைப்புரக்கும்படிமுனிவோர்பட்டாபிடேகம்பண்ணியபின்
சீருற்றுயர்ந்தநரபாலன்செங்கோலாணைதிசைசெல்ல
வாரக்கிரணத்தனிக்குடைக்கீழரசுபுரக்குமந்நாளில், (௧)

நீளும்வேள்விதவிர்ந்திடுகநிட்டையொழிகநியமமெல்லாம்
நாளுந்துறக்கவுலகுக்குநரபாலகனேதெய்வமென
மூளுஞ்சினமும்மதகரிமேன்முழங்குமுரசமெற்றித்தான்
ஆளும்புவியோரனைவருமங்கறியத்தட்டியறைவித்தான், (௨)

முரசத்துழனிகேட்டனவேமுனிவோரெல்லாமுழுதுலகாள்
அரசைப்பரிவாலாசிமொழிந்தையாவுலகத்தநாசாரம்
விரசச்சகலபலன்களையும்விளைவித்திடுநீள்வேள்வியெலாம்
துரிசற்றிடநின்றிருவுளத்திற்றுணிந்ததுணிவென்சொலென்றார் ()

ஞானமுனிவர்தமைநோக்கிநலஞ்சேர்வேநநரபாலன்
ஏனைவேள்விப்பதிநானேயென்னிற்பெரியாரியாவர்கடற்
றானையுலகுக்கரசன்றோசகலமானதேவதையும்
ஆனபடியாலெனைச்சொல்லுமனைத்தாமநுட்டானமுமென்றான் ()

வரமாதவரம்மொழிகேளாமன்னுவேள்விவடிவான
பரமானந்தநாரணனேபடிமேல்வருநாதனையைத்
திரமாய்நடத்திவுலகுக்குமுனக்குமேன்மைதந்திகழ்முத்தி
தருமாதலினால்வேள்விகளைத்தவிர்ப்பாயலைநீதானென்றார், (௫)

மறுத்தான்வேநநரபாலன்வரமாமுனிவரதுகண்டு
வெறுத்தார்சபித்தாரவனும்போய்விண்ணுடடைந்தானிக்கதை
நெறித்தாழ்விலாப்பராசரனார்நிகழ்த்தும்புராணமுதலஞ்சத்
தறததானுனபதின்மூன்றுமத்தியாயத்தறைந்திடுமால் (சுா)

---

அ·வது-வேள்விநாயகன்பிரசன்னபரிச்சேதம்,

அகிலலோககாரணனாயகண்டபரிபூரணனாகிப்
புகலும்வேதப்பொருளாகிப்பொலியும்பச்சைப்புயல்வண்ணன்
சகலமானவேள்விகளுந்தனதுமயமேயாயிருந்துந்
திகழுமவ்வேள்விகடம்மைச்செய்யப்பணியென்செகத்தென்னில் ()

எனக்குக்கருமபலன்கடமிலிச்சையில்லையென்றாலும்
அனைத்துக்கருமவிதங்களுநானனுட்டிக்கின்றதகிலத்தில்
சனைத்துக்காசாரத்துறைகடிருத்தவென்றுமால்பார்த்தன்
மனத்துக்கிசைத்தவாய்மைபகவற்கீதையினில்வாய்த்துளதால், (உ)

ஆதிப்புருடனுமேயவ்வரியவேள்விப்பதியென்று
போதமுடனேபுகழ்ந்ததனைப்பொங்குமணஞ்சேர்புரிகுழலாய்
ஓதும்விண்டுபுராணத்திலோங்குமிரண்டாம்பஞ்சகத்தில்
நீதிலீராறுடனொன்றாய்த்திகழத்தியாயஞ்செப்பிடுமால், (ங)

வேழ்விப்பாகமீவானும்வேள்விப்பதியுநானென்று
தாழ்வற்றுயர்பாரதகீதைதன்னினெடுமால்சாற்றினால்
வாழ்வுற்றிடுபாரதந்தன்னின்மாலேவேள்விப்புருடனெனச்
சூழ்வுற்றுதியந்தமெலாஞ்சொன்னதெண்ணத்தொலையாதே, (ச)

மிக்கசகலவேள்விகளும்வேள்விப்பதியும்வேட்பானும்
தக்கவேள்வித்திரவியங்கடாமும்வேள்விதரிப்பானும்
தொக்கவிருந்துக்களும்வேள்வித்துறையுமவேள்விதுய்ப்பானும்
புக்கவதனைப்புகழ்ந்துலகிற்போற்றும்வேள்விப்பொருடானும் (ரு)

பன்னும்வேள்விகளின்வடிவும்பலமும்பலத்தைத்தருவானும்
என்னும்வேள்விமயமெல்லாமிலங்குந்திருமாலேயென்றும்
மின்னுஞ்சுடர்வேல்வீட்டுமனுவிரித்ததஞ்சாம்வேதத்தின்
மன்னும்விண்டுசகத்திரநாமத்துவிளங்கிவாய்த்துளதால், (சு)

புகன்றவேதப்பொருளாலும்புராணமொடுசாத்திரத்தாலும்
சகங்களங்கீகரித்திடவேசாற்றுமதிகாசத்தாலும்
அகண்டனாகியனுபவனாயகிலாத்திரியாமியுமான [லே,(எ)
முகுந்தன்றானேவேள்வியெனுமுறைமைமொழிந்தேன்மொய்குழ

ரூந்தச்சாமவேதத்துமொழிந்தவேள்விநாரணனை
இந்தப்புருடசூத்திரத்தும்மெசித்தார்தேவரொன்றுளதால்
அந்தத்திறமெப்படியெனிலாயிரமாயிரமாமவயவங்கள்
தோந்தித்திங்குமுறைத்தவைதுர்ப்புத்தியர்க்குந்தோன்றுதோ. (அ)

அந்தமில்லானவயவமாயிரமாயிரமென்றளவிட்ட
தெந்தவியல்பென்றிடிலங்காயிரமென்றதுபவிலக்கணத்தால்
அந்தநெடுமாலுருப்பொவ்வொன்றனந்தமனந்தமாயிரமென்
றிந்துநுதலாய்பகர்ந்ததுமற்றிதனுக்கிசைவிப்பேதென்னில், (கூ)

எங்குமெங்குந்திருநயனமெங்குமெங்குந்திருவதனம்
எங்குமெங்குந்திருவடிமற்றெங்குமெங்குந்திகழ்புயமென்
றங்கைசங்கந்திகிரிகளாலழகுபெறுதேவனையணங்கே
பொங்குசெஞ்சொலெல்சுவேதம்புகன்றாரணத்திற் போற்றியதால்)

இவ்வாறருமாமறைதன்னிலிசைத்தபொருளுக்கேற்கும்வகைக்
கைவாழ்திகிரித்திருநெடுமால்காட்டும்விசுவரூபத்தை
ஐவாயரவாபரணத்தானனந்தமாகக்கண்டபடி
மைவார்குழலாய்முன்சொன்னவராகபுராணத்திலுமுளதால் (யக)

பின்னுமந்தச்சீதளவெண்பிறைசேர்வேணிப்பிரானுக்கு
டின்னும்விற்கைபிராமபிரான்விச்சுவரூபங்காட்டியதன்
அன்னதொருவிக்கிரகத்தையனந்தமாகக்கண்டபடி
பன்னுகின்றவிரணியகர்ப்பசங்கிதையும்பகர்ந்திட்டேன் (யஉ)

கைகளனந்தமுகமனந்தங்கால்களனந்தம்வாயனந்தம்
மெய்களனந்தமுடியனந்தம்விழிகளனந்தம்விதம்விதமாய்ப்
பைகொளரவிற்றுயில்வானைப்பார்த்தன்பார்த்துப்பணிந்தபடி
மைகொள்விழியாய்நீபகவற்கீதையினும்வகுத்துணாத்தேன் (யரு)

---

கூ-வது - புருஷசூக்தவிவரணப்பரிச்சேதம்.

நல்லாய்மற்றிங்கிவைநிற்கநாராயணனாதனையச்
சொல்லாநின்றவுயர்புருடசூத்தஞ்சிவமந்திரமென்றாய்
செல்லாவழக்காலொருவருடைச்செல்வந்தன்னைத்தித்திரிப்பு
வல்லானொருவன்றனதென்றான்மண்மேல்வலுவேவழக்காமோ, (க)

பழுதில்புருடசூத்திரந்தான்பயிலும்விண்டுபேரமென்னும்
வழியைத்தெளியப்பகர்க்கேண்மானேபுருடச்சொற்பொருடான்
முழுதுநிறைதல்செகத்துக்குமுன்னேயிருத்தலெப்பொருளும்
பொழிதல்சகலரிதயத்தும்பூவின்மணம்போற்பொலிந்திடுதல் (உ)

இன்னகுணங்களெடுமாலுக்கிசைத்தேன்மூன்றுமிதுநிற்கப்
பன்னுபுருடசூத்திரத்தும்பயிலுஞ்சுவாலோபநிடத்தும்
பின்னைவச்சசநேயகமாம்பிராமணத்தும்பேருலகைத்
துன்னும்புருடனேசிட்டிசெய்தானென்றுசொல்லுகையால் (௩)

கிளர்ச்சுருதியருக்குவியாக்கியானஞ்செய்யப்படாஞானத்
துயிர்விட்டயதிக்குத்தேவச்சுவாமியென்போர்தம்மாலும்
வெளியிட்டுலகின்மறைபிரித்தவியாசராலுமப்புருடன்
புளகப்புயநாரணனென்றேபொருணிச்சயித்துப்புகன்றுளதால் ( )

அரும்புந்தனத்தாகமமானேயமருஞ்சாமவேதத்துப்
பெரும்புண்ணியமாஞ்சாமவிதிப்பிராமணத்தும்பேறுகப்
பரம்புநாலாங்காண்டத்துப்பத்தித்திறத்தாற்பலபேரும்
விரும்புஞ்சிலமந்திரங்கடமைவெவ்வேறாகப்பிறித்தெடுத்து (௫)

இம்மந்திரங்கடேவர்பரமிம்மந்திரங்கள்கந்தபரம்
இம்மந்திரங்கள்கணேசபரமிம்மந்திரங்கள்சிவபரமென்
றம்மந்திரங்களவரவருக்கமைத்துப்புருடசூத்தமெனும்
மெய்ம்மந்திரத்தைநிச்சயித்துவிண்டுபரமென்றுரைத்துளரால்.௬)

எண்ணுஞ்சாந்தோக்கியோபநிடத்தெழில்சேர்புருடசூத்திரத்தை
நண்ணும்விண்டுபரமென்றேநவிலும்வைகாநசநூலும்
கண்ணன்றனைப்பதிட்டித்துக்கருமடத்துமிட்டதெல்லாம்
திண்ணப்பெறவிம்மந்திரத்தின்செபமேவிளிம்பாகஞ்சொலுமால்

இதலாற்புருடசூத்திரத்துக்கிருடிசந்தந்தேவதைகள்
மதுசூதனனேயல்லாதுமற்றோர்தெய்வங்குறித்துளதோ
அதுதானிற்கவிதுவுலகத்தரியின்றிருவாராதனைக்கே
விதியானதும்பாற்சிவபூசாவிதியில்வழங்கும்விதமுண்டோ. (௮)

இருடிசந்தந்தேவதைகளிலந்தப்புருடசூத்திரத்துக்
குரிமைநாராயணனேயென்றுரைத்ததெந்தவிடத்தென்னில்.
பெருகுபுகழ்சேர்சதபதமாம்பிராமணத்தும்பேருலகில்
சரியொன்றில்லாப்பதுமத்துத்தரகாண்டத்துஞ்சாற்றியதால் (௯)

மற்றும்பிரமாணம்பகரமானேகேள்துன்மார்க்கத்தைப்
பற்றுங்குரோதபதனுக்குப்பரமபுருடசூத்திரத்தை
முற்றுநாராயணனினைவான்முயன்றுசெவிக்கப்பாதகங்கள்
இற்றெஞ்சுமெனும்விருத்தமனுவேகாதசவத்தியாயத்தில் (௰)

துணைத்தாசையினற்சத்தாமந்தணனைவதித்தோன்றனக்கரியை
நினைக்கச்சார்புருடசூத்திரத்தைநியாசபூர்வமேயாகத்
தனித்தேசெயிருந்துஞ்செப்பித்திடலத்தகுபாதகநாசமாமென்று
வினைத்தாய்மையதாகியவம்மாமிருதிபாரில்விரித்துளதால் (௰க)

பாரொண்ணியசிரதருவத்திற்பகருஞ்சாந்திகருமங்கள்
ஓரொன்பதிரேறொன்பதுளாவுளாத்தவிந்தக்கருமத்தில்
சேரொன்றியமாலைக்குறித்துச்செய்யுஞ்சாந்திசிறப்பெய்த
நேரும்புருடசூத்திரத்தைநெடிதுச்சரிக்கநிகழ்த்திடுமால் (௰உ)

எண்ணும்புருடசூத்திரத்திலீரொட்டானவிருக்கினையும்
கண்ணனன்றிருவாராதனையைக்கருதிச்சித்தங்களிகூரப்
பண்ணும்பர்வாமுபசாரம்பதினாறுக்கும்வினியோகம்
நண்ணும்படியேநாளுவாநவிலுமிருதிநாட்டியதால் (௰ங)

ஏரார்வேள்வியுபத்தானமியம்புங்கற்பசூத்திரத்தில்
சோராவாய்மையுளபுருடசூத்தந்தானுமதற்கடுத்த
சீராமநுவாகமுமாகச்செப்புமநுவாகமிரண்டும்
நாராயணமென்றேவிளங்குநாமநாட்டிநவின்றுளதால் (௰ச)

மருநேர்குழலாயிந்நாத்தமாற்றத்தொடுசம்மதமாகக்
கருதும்புருடசூத்திரத்திற்கண்காண்முகமாயிரமுடையான்
ஒருமாபுருடன்றனைச்சொல்லியுலகுக்கவனேகாரணமென்
றரிதாமூர்த்திககவனருளேயன்றிவழிவேறிலையென்றும் (௰ரு)

அந்தப்புருடனோரென்னையப்பாடொன்றணுகாமல்
இந்தப்புருடசூத்திரத்துக்கிசையுத்தரநாராயணத்தில்
முந்தச்சொன்னபுருடனையேமொழிவுற்றந்தப்புருடனுக்கா
நந்தப்புவியுமிலக்குமியுநற்பத்தினிகளெனநாட்டி (௰சா)

முன்னேறியவம்மொழியேபோன்மூர்த்திக்கிவன்றனருளல்லால்
பின்னோர்மார்க்கமிலையென்றுமபிரசித்திபெறப்பேசியதால்
இந்நீடநுவாகமிரண்டுமியனாரணமென்பதுதோன்ற.
நன்னாரணமாமுபனிடத்தினாராயணநுவாகத்தும் (௰எ)

முந்தச்சொன்னமொழிப்படியேமுகங்கால்கண்ணாயிரமுளவா
நந்தப்புருடனவனைநாராயணனென்றோதியதால
இந்தப்புருடசூத்திரந்தானென்றுந்மாலபரமென்பதற்கின்னந்
கொந்தக்குழலாய்பிரயாணங்குறிப்பாமாறுகூறக்கேள் (௰அ)

## ௯-வது - சதாநந்தர் சதாசிவனுக்குட்பருவிருத்தமுபதேசித்தப் பரிச்சேதம்.

தூயதிருப்பாற்கடனடுவிற் றலங்குதந்தமயமாகி
ஏயசிகரவைசயந்தமென் னுமொருமால்வளையிடத்தில்
சேயநியமத்தொடுயோகத்தியானனுகிச்செங்கமல
மேயசதுரானனமூர்த்திவிளங்கவிருந்தமேனாள் (௧)

மற்றங்கவனெற்றியிற்பிறந்தமைந்தன்புவனபதித்தசிவன்
உற்றம்பரவீதியினின்றாமுயர்மாமலையில்வந்திழிந்து
சற்றுஞ்சலியாமாயோகத்தன்னிலிருந்ததந்தையிரு
பொற்றின்கமலக்கழலிற்றன்பூவார்மகுடஞ்சேர்த்தனுமே (௨)

தாளிற்பணிந்தபுத்திரனைத்தடக்கைமலராற்பரிசித்துத்
தூளத்தாயெழுந்திரெனச்சுவாகதங்கள்பலசொல்லி
நாளெத்தனையோவுனைக்கண்டுநாமென்பதுவுநவின்றன்றன்
நீளத்தியானந்தவங்களெல்லாநிறைவேயன்றோவனநிகழ்த்தி (௩)

இருந்தவளவிற்சங்கரனுமெந்தாயுன்றனின்னருளால்
பெருந்தொறவத்தினியமத்திற்பிழையொன்றில்லையெனப்பேசி
விரிந்தவைராசதசபையைவிட்டிங்கிப்போதெழுந்தருளி
இருந்ததவத்தினைகாந்தமாரைக்குறித்திங்கெனவயனும், (௪)

மைந்த வைராசநின்றும்வந்துநெடுநாளுண்டிந்தச்
சந்தார்சோலைத் ... லாக்குச்சரியாம்புனிதத்தலமில்லை
உந்தாதரவாலேகாந்தயோகந்தன்னிலிருப்பதுவும்
நந்தாமகிமைசேர்புருடனலஞ்சேர்தியானங்காணென்ன (௫)

அந்தமொழிகேட்டுளசிவனுண்மையாபுருடரனைவோரும்
உந்துசிட்டிகாலத்திலுன்றோன்றேருவுளாரானோர்
சந்ததமுநீதியானிக்கத்தக்கபுருடராரொன்னச்
சிந்தைபகிழ்ந்துசங்கரற்குச்செந்தாமரையோனுரைசெய்வான் (௬)

புதல்வாவீங்குநீபுரைத்தபுருடரெல்லாமன்றந்த
விதமாம்புருடரனைவர்க்கும்வேறுள்ளவைக்கும்பிறப்பிடமாம்
மதமாவுரித்தவுன்றனக்குமற்றென்றனக்குமவ்வடசத்தில்
இதமாஞ்சகலசரீரியர்க்குமெண்ணுமுயிருக்குயிராகி (௭)

சகலகுணனுநிர்க்குணனுட்சகலத்துக்குஞ்சான்றாகிப்
பகவானுக்ப்பரஞ்சுடராய்ப்பரமாத்துமனுய்ப்பரானாய்
திகழுகின்றமாடருடன்செங்கணெடுமால்காணென்றான்.
இஞ்சிவனுமுபதேசப்பொருளாயதனைக்கைக்கொண்டான் (௮)

இயலைப்பொருதுகுழைதாவுங்கருங்கட்சைவாகமமானே
பயிலுந்துங்கப்புவனத்துப்பகருமிந்தப்படியெல்லாம்
சயமிக்குயர்யாரதகதையிற்றழைக்குமோட்சதருமத்தில்
இயலத்தியாய நூற்றெழுபத்தேழுமெட்டுமிசைத்திடுமால். (௯)

கந்தக்களபத்துணைமுலையாகமமானேயிங்கிவ்வாறு
சந்தச்சுருதியொடு நூல்கள்சாற்றிநின்றதன்மையினல்
இந்தப்புருடசூத்திரந்தானெழில்சேர்விண்டுபரமெனவை
குந்தத்துக்குந்திருவாழிக்குறிக்கணுட்டவேண்டுமோ. (௰)

---

௰௧-வது-சோமச்சொல்விவரணப்பரிச்சேதம்.

மிக்கபுருடசூத்திரந்தான்விண்டுபரமேயென்பதற்குத்.
தொக்கபிரமாணம்பலவுஞ்சொல்லிமுடித்தேனதுநிற்க
இக்குமொழியாய்சோமத்தாலெல்லாமுண்டாகின்றதென்று
தக்கவேதஞ்சொன்னதுமாசகிதன்மகிமைதானென்றாய் (௧)

தாமமணியுநறுங்குழற்கோதாயவ்விடத்திற்சாற்றியது
சோமலதையைக்காணன்றித்தோகைபாகனென்றனையேல்
ஏமவுரலின்முசலத்தாலிடித்துப்பிழிபவினிதருந்தச்
சேமமறைகள்சொலலாலச்சிவனையினையசெயலாமோ (௨)

வண்டார்குழலாய்சோமமெனவளருங்கொடியாற்றேவரெலாம்
உண்டானாராவென்றனையேலுற்பத்தியையங்குணாத்ததிலைத்
தண்டாவந்தச்சோமத்தாற்றணிந்தாரிமையோர்தாமென்று
கொண்டாடியதினதிசயத்தைக்குறித்துப்பகர்ந்ததத்தனையே (௩)

தேனேயதனுக்கின்னமொருத்தரங்கேடிசழக்கினிதேவன்.
தானாகுதிகளத்தனையுந்தருசூரியனைச்சார்விக்க
வானீள்சுடராங்கவன்சசியையடைவித்திடவச்சசிசகல
வானோர்களையுந்தணிக்குமெனவைகானசசூத்திரஞ்சொலலால். (௪)

உமையாள்பங்கற்கப்பொருணீபுணாத்தசோமஞ்சோமச்சொற்
கமைவாகியசந்திரன்றன்னையறைந்ததெனவுமடுத்திடுமால்
இமையோரமுதநேர்மொழியாயிங்குச்சொன்னபரமார்த்தம்
சமைவாகியவேள்விக்கந்தநாமஞ்சோமலதைதானே (௫)

இன்னமுமையாள்பதிதனையங்கிசையாதமைக்கோருத்தரங்கேள்,
அன்னநடையாயுலகினிலந்தணராயுள்ளோரனைவோரும்
மன்னும்வேதாத்தியயனத்தைமதிப்பாற்செய்யுமிடந்தோறும்
பன்னுமந்தச்சோமச்சொற்பதவேட்டிதமாய்ப்பயிலாதே (௬)

## ௰௨-வது-உம்பர்கோனுருத்திரவன்னித்தலையைத்துணித்தப் பரிச்சேதம்.

மஞ்சார்குழலாயிதுநிற்கவளமாமெசுமாமறைதன்னில்
அஞ்சாங்காண்டமுதற்பருச்சத்தடலாகியதோர்சிலையதனால்!
எஞ்சாமகத்தின்றலையிற்றதென்றுசொற்கொண்டியாகமெலாம்
புன்சாதனமாலவன்சிரமேபோனதென்றுபொருள்கொண்டாய் (க

மொழிபுமெசுவேதாரணத்துமுதலாகியசீர்ப்பருச்சத்தில்
செழுநீள்பிரவற்கியகன்மஞ்செய்தவளவிலுருத்திரனங்
கிழவாகியதன்சிரம்பெறுமென்றிசைத்தலாலுமிறைவன்றன்
அழகாகியதன்சிரத்தைத்தானறுத்ததாயுமுடியாதோ (உ)

மானேயிதற்குப்பரமார்த்தம்வளரக்கினியாமகபுருடன்
தானேற்றியதிண்சிலைநாணைத்தகுமிந்திரன்மேதகுசெல்லாய்
மேனுளறுக்கவில்வீசும்விசையாலந்தவிறலங்கிக்
காணுதசிரந்துணிந்ததென்றுமம்மந்திரமேயறைந்துளதால், (ங)

இனிதாமிந்தப்பொருள்வெளியிட்டிந்தமாமந்திரந்தானே.
புனைவேள்வியிலங்கித்தலையேபொருவெஞ்சிலையாற்போனதென
முனைவேல்விழியாய்சொல்லியதுமுன்பின்சற்றும்பாராத
மனமாச்சரியரொன்றையொன்றுவகுத்துச்சொல்லமாட்டாரோ. ()

---

## ௰௩-வது·சிவன்கங்காதரனானபரிச்சேதம்.

சுரிவார்குழலாயிதுநிற்கச்சுடராழியருக்கருச்சுனன்செய்
திரமாம்பூசைசிவனிடத்திற்சேர்ந்ததென்றுஞ்செயங்கொள்ள
விரிவாநிலத்துவிழுந்ததுமல்லாகப்பாவித்தாலுமே
தருமூலத்திற்சொரிந்தபுனல்சாகையெங்குந்தழையாதோ. (க)

தருவின்றானந்திருமாலுஞ்சாகைத்தானுஞ்சிவனுமெனும்,
கிரமமிருக்குவேதத்திற்கிருத்திவாசன்கேசவனை
விரவும்புந்திவேள்வியினால்வேட்டானென்றுமவ்விடத்தில்
சுரிமென்குழலாகமமாமனைதோன்றமுன்னுஞ்சொன்னேனே (உ)

படியேயளந்தபரந்தாமன்பதத்திற்கங்காநதியைத்தன். [தன்றன்
முடிமேற்றரித்ததன்மையைப்போன் முனைவேல் விசயன்முகுந்
அடிமேற்சாத்துமலர்சிரத்திலணிந்தானக்கனதுகொண்டே
பிடிபோனடையாயவரவர்தம்பெருமைசிறுமைதெரியாதோ (ங

ஏனையிமையோர்தமைநோக்கியிழைக்கும்பூசையெத்தனையும்
ஆனையிடருக்குதவியமாயனேயடையுமத்திறங்கேள்
தேனினியமொழிமடவாய்தேவரெல்லாந்திருமாலின்
மேனியெனவிளங்குமெசுவேதாரணத்திலுள்ளம்பிம்மால் (ச

மருவார்குழலாய்மற்றிந்தவாய்த்தமறையின்பொருட்கேற்ப
அருவாயுருவாயெங்கெங்குமனைத்துக்காலத்தினுநிகழும்
பொருளானதெலாஞ்சக்கரக்கைப்புனிதன்சரீரபூதமெனத்
தனையோர்புகழும்பராசரர்வாசகமாம்புராணஞ்சாற்றியதால் (௫)

புனிதமாமக்கினியைத்தென்புலத்தோர்தம்மைப்பூசுரரை
இனிதுபூசைசெய்கின்றாரியாவரவர்களெல்லோரும்
சனனம்காடிக்கெல்லாமந்தரியாமித்தத்துவமாலே
மனதுமகிழ்வித்தவனென்னமனுவின்மிருதிவகுத்திடுமால் (௬)

உவமையில்லாவுயர்விண்டுவொருவனந்தவொருவனுமே
புவனவியாபகனாகிப்புகலுஞ்சகலபூதமுமாய்
அவியகவியநுகர்கின்றானென்னுமனுவிலவ்வசனம்
எவருஞ்சிராத்தம்பண்ணுமிடத்தின்றுமநுட்டித்திடுகின்றார், (௭)

பார்த்தன்றன்னையவன்பொற்றேர்ப்பாகனானபரம்பரன்பார்த்
தேத்துஞ்சகலதேவர்களுமெனக்கேசரீரமவரிடத்தில்
வாய்த்தபத்திவிளைப்பவனுமியானேயந்தவடிவுதொறும்
பூத்தமலரின்மணம்போற்புக்கிருந்துபூசைகொள்வோனும் (௮)

அங்கங்கிருந்துபலமளிக்குமவனுமியானேயானாலும்
தங்குமற்றைப்பலன்பெறுவர்சாமானியபுத்தியிற்றுதிப்பர்
எங்குமியானென்றருச்சிப்பாரேற்றமானபலன்பெறுவர்
பொங்குமெனதுசொரூபத்தையறிந்தோர்முத்திபொருந்துவரால்.



௱௪ -வது - இராஜததாமதபுராணஜாதிகள்கற்பிதமென்றப் பரிச்சேதம்.

வேலேய்விழியாயிதுநிற்கவிரிஞ்சன்வணிககுலமென்றும்
மாலேயரசர்மரபென்றும்வளரிந்திரன்சூத்திரனென்றும்
கோலாகலவானதிசூடுங்குளிர்செஞ்சடிலக்கோமானை
மேலாங்குலத்தந்தணனென்றுமெய்ம்மையாலொன்றுவிதித்திட்டாய் ()

மைப்பொங்கியகந்தரத்தானேவளமானபிராமணனென்றும்
செப்பும்பிரபதப்பெயர்மந்திரமேயவனைத்துதிசெய்தற்கு
மெய்ப்பண்புளபுத்திரனென்றுமிளம்புமந்தவிரிஞ்சன்றன்
தப்பின்றியவைசியனாற்றநயன்றானந்தணனுமே (௨)

அதுதானிற்கத்தேவர்க்குளாங்கிரசனந்தணனென்றும்.
முதிராவதிதிபுத்திரர்கண்முனைமேவலரசர்குலமென்றும்
மதிமேதையராமருத்துவர்கள்வணிகரென்றுமருத்துவர்க்குப்
பதியாமச்சுவினிதேவர்பண்பாகியசூத்திரரென்றும் (௩)

சாதிநிலைமையிவ்வாறுசாற்றியிடும்பாரதநூலின்
மாதவனையும்பிரமனையுமரபுபிரித்துவகுத்திலதால்
தீதின்மருத்துக்களையதுவைசியரொன்றிடலாலவருக்குள்
ஓதவுரியனுங்கண்மூன்றுடையானுயரந்தணனும்மா (௪)

என்றுமழுவாளியைமறையோனென்றுபகர்ந்தபிரமாண்டம்.
காந்தமென்னும்புராணமிராசததாமதமாங்கற்பினதால்
பூந்தண்குழலாய்பிரபதத்திற்புராரிதன்னைப்பிராமணனென்
றுய்த்ததன்மைபிரமத்தையறிவானென்றதத்தனையே (௫)



௰௫-வது-பரமவைதீகதேவசாது வருணவிவரணப்பரிச்சேதம்.

பிரமந்தன்னைச்சிவனறிந்தபெற்றிமூன்னும்பகர்ந்திட்டேன்
திருவின்பதியேயந்தணனத்திறமும்பகர்வேன்றெளியக்கேள்
விரியும்பொருள்சேரருவமாம்வேதசிரத்திற்மேவகியுத்
திரனைமதுசூதனைச்செப்புஞ்சிறப்பாயபிராமணனென்றே (௧)

இனையதானமறைப்பொருளுக்கேற்பவஞ்சாமியல்வேதம்
தனிலச்சுவமேதம்மென்னுந்தழைத்தவேள்விச்சமயத்தில்
வனையுமம்பொற்கழல்வாசுதேவன்றன்னைவணங்கிமகா
சனமெல்லாரும்பிராமணியதெய்வமென்றறிறஞ்சொலுமால் ()

சாற்றுமகபாரதகதையிற்சத்தமுனிசம்வாதத்து
மாற்றந்தனிலுதாரணனைவளமானபிராமணனெனுமால்
தேற்றம்பெரியவிண்டுசகத்திரநாமத்துந்திருமாலை
ஆற்றுலுடையபிராமணனென்றநேகவிதமாய்ப்புகழ்ந்திடுமால் ()

தகுபாருலகோர்புகழ்பாராசரியசிற்பமுதலான
மிகுசீர்ச்சிற்பநன்னூல்கள்விமானத்தியல்புசொலுமிடத்தில்
திகழ்மாதவனந்தணன்மூக்கட்சிவனூர்த்திசீர்வணிகன்
முகநாலுடையானரசனெனமொழிந்ததனைமுன்மொழிந்தேனே (

௰௬-வது-சிவனைவேள்விப்புறம்பாகச்செய்தப்பரிச்சேதம்.

கொடிசேர்மருங்காலிருகொங்கைக்குன்றஞ்சுமந்துலாவியிடும்
கடிசேரோதிக்கயல்விழிச்செங்கனிவாய்ச்சைவாகமமானே
இடமாகியசீரொசுவேதத்தியல்பாய்நிசமூமுதற்காண்டத்
தடைவாமூன்றும்பருச்சத்திலந்தத்தநுவாகந்தன்னில். (௧)

பல்லோர்புகழும்வேள்விக்குப்பதியென்றுமையாள்பதிதன்னைச்
சொல்லாநின்றதென்றனையத்தொன்மந்திரத்தின்றணிபொருள்கே
உல்லாசச்சொல்லெசுவேதத்துபயகாண்டத்தூடாடை [ள்
இல்லாதவனையவிசாரயாகப்பதியென்றிருக்கையினால் (௨)

மிருகுத்திரமாமபிசாரவேள்விப்பதியென்றிவ்விடத்தும்
தருமுக்கணனைச்சொன்னதலாற் சகலவேள்விப்பதியென்றுஞ் பகர்
வுற்றநிலையதுதாமென்பபடி யென்றிடலப்பசுபதிக்குத், தொகை
பெற்றிடுவானவர்களைப்போற் சாதிட்டோயாதியிவ்வெல்லாம் (௫)
பண்ணுமவிப்பாகப்பேறும்பகராமையினுலும்மேனுள்
எண்ணுமகத்தையழித்தானென்றிமையோர்மெல்லா மிகழ்ந்திவனைத்
திண்ணம்வேள்விப்புறம்பாகச்செய்துச்சிட்டபாகத்தை
உண்ணென்றமையாருங்காண்டத்துரியவேதஞ்சொலலாலும் (௬)
மற்றுமிந்தக்காண்டத்துவாருத்திரமந்திரம்படித்தால்
பிற்றைறயொருமந்திரந்தற்குப்பிராயசித்தஞ்சொலலாலும்
தெற்றமிகுசீர்ச்சாதுருமாசியகன்மங்கள்செயுமிடத்து
நெற்றிவிழியான்பாராமனீராற்காப்புச்சொலலாலும் (௭)
பெருத்தசுபகன்மச்சடங்கிற்பசுமாக்கர்மந்திரத்தைக்
கிருத்திவாசன்மந்திரத்தைக்கிளர்தென்புலத்தார்மந்திரத்தை
உரைத்தபோதுநிலமகழ்ந்தலொன்றுபிளத்தல்புதைத்தலுடல்
பரத்தைதத்தீண்டலுயிர்த்தலிவைபண்ணவேண்டுங்காலத்தும் (௮)
பரிசுத்தியதாகப்புனலைப்பரிசித்திடுதல்கடனென்று
வரிசைப்புகழாபத்தம்பம்வைகாநசம்போதாயனஞ்சீர் [ல்
கருதற்கருங்காத்தியாயனங்காசினியெண்ணிபவாச்சிலாயனஞ்சொ
தருமைத்திரசாங்கியாயனமாஞ்சட்சூத்திரமுஞ்சொலலாலும் (௯)

ஓா - வது சிவசாமானியநிபரிச்சேதம்,

இருக்குவேதத்திலஞ்சாயெண்ணுகாண்டத்திலஞ்சாம்
பருச்சமதனில்ருகப்பயிலுமநுவாகந்தன்னில்
விரிக்குப்பிதாய்பாரந்தரிதவிண்டுவென்னும்பெருந்சருவுக்
குரைகளுஞ்சாக்கத்தாணமதாயோதுஞ்சிவனென்ழுளமூர்த்தி (௧)
தீதிலாம்வள்விகள்செய்துதிருமாலருள்பெற்றுயர்ந்ததையும்,
ஏதமில்லாப்பாரதத்திலிராசதன்மத்தினிற்சகல
மேதவேள்விவேட்டமையும்விளம்புமந்தசிவன்வேள்வி
நாதனென்றன்மறைகற்றநல்லோர்க்கெல்லாநகையன்றே (௨)
நாராயணனைவேள்விக்குநாதனிதற்குத்திட்டாந்தம்
தாரார்சடையான்வேள்வியினுற்றுஞாதத்தையைசொன்னேன்
சீரார்புருடசூத்திரத்திற்றிகழ்நான்முகன்யாகஞ்செய்தங்
கோரார்சிட்டித்தொழில்கற்றவியல்புஞ்சொன்னிதற்கேற்க (௩)
திசைமாமுகனோடுருத்திரனிந்திரனேமுதலாந்தேவர்கணி
டிசைகூர்முனிவர்சுரரிராக்கதரொன்றுனாக்குழுமெல்லோரும்

அசையாமனத்தராய்வேட்குமவியகவியமத்தனையும்
வசைதீர்மாலையடையுமெனவளர்நாரதியம்வகுத்திடுமால் (௪)

என்றாற்படைக்கப்படும்விரிஞ்சனென்னைக்குறித்தேயாகங்கள்
பன்னாதரவினாற்செய்துயகரும்பிரமபட்டத்தில்
மன்னாநின்றுசெகற்குருவாய்வாழ்கின்றானென்றரிவசனம்
தன்னாற்பிறந்தவாய்மைபராசரமாமிருதிதழைத்துளதால் (௫)

நற்றாமரையோனுருத்திரன்பொன்னாடாண்டிடுமிந்திரனை
பற்றாமுனிவரனைவோரும்பாரேழளந்தபராபரனை
உற்றாதரித்தாராதனைசெய்துரைக்குந்தந்தமுயர்பதங்கள்
பெற்றாரென்றுநாரசிங்கப்பெயராம்புராணம்பேசிடுமால் (௬)

தீர்த்தம்படிதன்முதலாகச்செய்யுங்கருமமனைத்தினையும்
பூத்தங்கியநாடனைநினைத்துப்புரிவார்பாசப்பொறைதீர்ந்திட்
டேத்தும்பரமபதத்திருப்பரிறவார்பிறவாரென்பதனை
வாய்த்ததக்கன்வகுத்துரைத்தவளமாமிருதிபகர்ந்திடுமால் (௭)

கன்னலிரதங்கனிந்தமொழிக்கயல்போல்விழியாயிதுநிற்கத்
தன்னைநிகர்சீர்வளரொசுவிற்சதருத்திரியந்தனிலரனை
உன்னிலொருவருயர்ந்தவரிவ்வுலகத்துண்டாவென்றுரைத்த
தென்னமொழிந்தாயன்றோநீயதனையுமாப்பேளிலைசயக்கேள் (௮)

வீசுபுனலோனைழமேலோன்முதலாயுள்ளவிண்ணவரை
வாசிபெறவேயேத்திடுமவ்வகைபோல்மதிவேணியின்முடித்த
ஈசன்றனையுமம்மறைதானேத்தியிட்டதித்தனையே
கூசமறவேநீயுணர்ந்துகொள்ளாய்முன்னுங்கூறினேன் (௯)

---

௰௮-வது-திருவிழாப்பரிச்சேதம்

மதுவார்குழலாயிதுநிற்கவளமாமுலகிற்பதிதோறும்
முதலாகியசம்பாவனையுமுந்தும்விழவுமுக்கணற்கே
இதராதிகளுக்கில்லையரனியார்க்கும்பெரியனென்றனையிவ்
விதிதான்சிவனைப்பரனென்றவிதமன்றின்னம்விளம்பக்கேள் (௧)

மிக்கவகண்டதெரிசனமாமிருதிதன்னிற்பதிதோறும்
முக்கணனுக்கேவெகுமானமுந்தச்செய்யாதொழிந்தக்கால்
தொக்கவந்தக்கிராமத்திற்றுக்கமநேகமேவுதலால்
தக்கசம்பாவனைதுரிதசாந்திப்பொருட்டத்தனைதானே (௨)

அந்தவகண்டதெரிசனமுமழகார்வைகானசநூலும்
நந்துதிகிரிதரித்தாற்குநன்னாந்திருநாணடத்துங்கால்

மந்தநகையாகமமானவைளருக்கிரதேவதைசாந்தி
முந்தவுரைக்குமுக்கிரர்க்குண்முதலாமவன்முக்கணனன்றே (௩)

உரைத்தவிதற்கோருத்தரங்கேளுலகதிட்டாந்தமதாகத்
திருத்தமாகுஞ்சிவனுக்குச்சிறக்கும்விழவுசெயுமுன்னே
அருத்திகூர்பத்திரகாளிக்கன்பாற்சாந்திபுரிகின்றார்
தரைக்குளந்தமாகாளிதானும்பரதத்துவமாமோ (௪)

மருவார்குழலாயிதுநிற்கமாலேயெல்லாவானோர்க்கும்
பெரியோனென்னுந்தன்மைக்கும்பேசும்பரதத்துவநினைவால்
தரைமேபாரவனுக்கேமுந்தச்சம்பாவனைசெய்தன்மைக்கும்
உரைசேர்பிரமாணம்பலவுமுண்மைப்படியேயுரைக்கக்கேள் (௫)

---

௰௬-வது-ஆத்துமநாயகத்துவப்பரிச்சேதம்,
தழைக்குமனுட்டுப்பிற்பெரியசந்தமில்லேத்தாரணிமேல்
இழைக்குஞ்சீரச்சுவமேதத்தேற்றமாகுமியாகமில்லைப்
பழிப்பொன்றில்லாததேனுவதைப்பற்றப்பெரிதாம்பசுவுமில்லை
மழைக்கொண்டலேம்நாராயணிலுமகத்தாகியதேவருமில்லை (௧)

என்னச்சாமவேதத்திலியல்பாநமகப்பிராமணத்தில்
மன்னுமிருபத்தாறுகிவளரத்தியாயம்பகர்ந்திடுமால்
அன்னநடையாயிதுநிற்கவைதரோபிராமணத்தும்
தன்னேநிகரொன்றில்லாமற்றழைக்கின்றமகோபநிடத்தும் (௨)

மொழியுமிருக்கிற்பிராமணத்தின்முதற்பஞ்சிகையிலாதியினும்
அழகுபுனையுமவ்வேதத்தஞ்சாங்காண்டத்தினிலஞ்சாம்
பழுதில்பருச்சத்தாதியினிற்பயிலுமநுவாகத்ததினும்
விழையுந்தெய்வகானத்தால்விளங்குஞ்சாமவேதத்தும் (௩)

தங்குஞ்சுடரக்கினிதேவன்றாழ்ந்தோன்சகலதேவர்களும்
மங்குலனையகருங்குழற்செவ்வரிவேல்விழியாய்மத்திமர்கள்
எங்கும்பரிபூரணஞனவெழில்சேர்திருமாலேயுயர்ந்தோன்
பொங்குமந்தமாயனையார்ம்பால்வாரொன்றுபுகன்றிடுமால், (௪)

மயிலேயனையாயிவைநிற்கமண்ணுக்கங்கிபதிசோமன்
பயிறாரகைக்குப்பதியிரவிபகலுக்காதிபதிமகவான்
உயர்வானவர்க்குப்பதிவருணனோதநீர்க்குப்பதிவாயு
இயல்வானுக்குப்பதிதனதனியக்கர்குலத்துக்கினியபதி (௫)

கந்தன்சேனைக்குப்பதிவெங்காலன்பிரேதபதிநக்கன்.
உத்தும்பூதபதிபிரமாவுலகங்களுக்குப்பதியெவர்க்கும்

முந்துங்கலாத்தனைத்துயிர்க்குமுகுந்தன்றானேபதியென்னச்
சந்தப்பயிலுக்கிரசிரமாஞ்சடங்கோபத்தற்சாற்றியதால், (௬)

உருவந்தேசுவியாபகஞ்சிரோங்குபுகழ்வீரியம்படைத்துப்
பிரமன்முதலாகப்பகரும்பெரியோர்க்கெலலாய்ப்பெரியோனாய்
விரவுகருணைத்தடங்கண்மால்விளங்காநின்றானெனவேதம் [கும்.(௭)
மருவும்பொருளைப்பின்சொலுப்வாமனமாம்புராணம்வகுத்துரைக்

வேதப்பனுவற்பெருங்கடையின்மேதையுடையோருட்புகுந்து
தீதற்றுயருந்தேவகிபுத்திரரத்தினத்தைத்தெரிந்தெடுப்பர்
போதத்தகையில்லார்வேறுபுன்றேவர்களாங்கண்மணியைச்
சோதித்தெடுப்பாரெனப்பரத்துவாசஸ்மிருதிசொல்லியதால்.. (௮)

அரியின்பரமமகிமையிலோரணுவைக்கோடிகூறிட்டுத்
திரியவதிலொன்றினையனந்தஞ்செய்தங்கதிலொன்றையுங்கோடி
உருவவகிர்செய்யினுமதனிலொன்றுக்கொவ்வார்தண்கமலப்
பிரமன்சிவனாதியரென்னப்பிறீத்தேநாரதியம்பேசும். (௯)

சகல்புவனங்களையுமொருதட்டுத்தனிலும்மிற்சமமாய்த்
திகழுமொருதட்டினில்வாசுதேவன்றனையுஞ்சீர்தூக்கித்
தகுந்தமிருதியாரியுந்தரத்திற்குமோதரன்றானே
மகிமையுடையானென்பதற்குமற்றோரையமிலையென்றும். (௰)

பூதங்களுக்குமுருத்திரற்கும்பொழியுங்கிரணத்தினகரர்க்கும்
வேதங்களுக்கும்வசுக்களுக்குப்விண்ணோர்களுக்கும்விரிதிரைநீர்
ஓதங்களுக்குங்காலத்திற்கும்முலகங்களுக்குமுலகத்தில்
பேதங்களுக்குமனைத்திற்குமபதிதாம்பரனேபதியென்றும்: (௰௧)

வேதங்களுமங்கியுந்தெய்வமிகுவந்தணர்க்குவியன்சாதிப்
பேதங்களுக்கவ்வந்தணரோபேசுந்தெய்வம்பெய்வளையார்க்
கோதுங்கணவனேதெய்வமுயரானின்றரியாரியார்க்கும்
தீதங்கணுகாவிண்ணோர்க்குந்தெய்வந்திருமாலேயென்றும் (௰௨)

சிறந்தசெங்கைச்சுடராழித்திருமாலனினிற்பெரியோர்கள்.
இறந்தகாலநிகழ்காலமெதிர்காலத்துமிலையென்றும்!
நிறைந்தவஞ்சாம்வேதத்திணிகழ்த்துமதனாநீண்மறைகள்.
அறிந்துபுகழுந்திருமாலுக்கதிகரானபேரிலையே. (௰௩)

---

## உ௰-வது- முதற்சம்பாவனைமுகுந்தனுக்கென்றபரிச்சேதம்.

அதனாற்பரதத்துவமென்பதறிந்துவேள்வியகத்தெல்லாம்-
முதலாஞ்சம்பாவனைசெய்வார்முகுந்தன்றனக்கம்முறையுங்கேள்

பிதமாகியசிரோசுவேதம்பயிலுஞ்சாகைதனிற்பனிவெண்
மதிபோனுதலாய்முதற்சம்பாவனைமானுக்கேவகுத்துளதால் (க)

இந்தச்சுருதிச்செழும்பொருளுக்கேற்பவஞ்சாம்வேதத்தில்
சந்தம்புனையுஞ்சபாபருவந்தன்னிற்றருமநரபாலன்
முந்துமிராசசூயத்தைமுடித்துமுதுமாமுனிக்கணமும்
மந்திரிகளும்பூபாலவர்க்கயுந்திரண்டமாசபையில் (உ)

மதிப்பானுயர்க்கிரசம்பாவனையார்க்கெடுப்பதெனக்கங்கா
நதிப்பாலகனும்வீட்டுமன்மெய்ந்நலஞ்சேர்தருமநாண்மலர்மேல்
உதிப்பானுந்திண்கயிலாயத்துறையும்புகழ்சேருமாடதியும்
துதிப்பானுலகின்பொறைதீரச்சூழ்பாற்கடலிற்றுயினீங்கி (ங)

வந்திப்புவியில்வசுதேவன்மதலையாகியவதரித்தான்
இந்தக்கண்ணனிருக்கின்முனிவனிற்பெரியாரினியுண்டோ
முந்தச்சம்பாவனைசெய்யாமயன்னமுரசக்கொடியோனும்
அந்தப்படியேசெய்தகதையகிலந்தனிலாரறியாதார் (ச)

கொழுந்திண்படைக்கைச்சகதேவக்கோவுமந்தக்குழாங்காணச்
செழுந்தண்டுளவத்தொடைமாலேதேவர்க்கெல்லாந்தேவனென
மொழிந்தச்சம்பாவனையீந்தான்முழுமாமலர்மாரியைவானோர்
பொழிந்திட்டனரித்திட்டாந்தம்புவனத்துக்குப்போதாதோ (ரு)

ஏ-வது-சகலவேள்விப்பதிநிருணயப்படலமுற்றும்,
ஆ திருவிருத்தம்-௱கூச.
அரிதாசர்திருவடிகளேசரணம்;



## சித்தாந்தப்படலம்.



அ-வது நாராயணனையேஅனந்தவேதங்களும்பரத்துவங்காட்டுகின்ற
பரிச்சேதம்,

சுதுமிகழ்ச்சியாதலினுலிலங்குஞ்சிவனைப்பரனென்று
வேதத்தொகுதிப்பொருள்கொண்டுவிளம்பவுனக்குவெல்லாது
பேதமுளசைவாகமமப்பிரமாணங்களென்பதுவும் [மே(
கோதைநல்லாய்முன்பகர்ந்தேன்குறிக்கொண்டனையோவென்றுஉ

ஓதுபொருந்துந்துணைவிழியாகமமானதற்குக்கட்டுரைப்பாள்
ஏதுவகையாலரிதனைநீயெண்ணும்பரனென்றிசைக்கின்றாய்
வேதமனந்தமகிலாண்டவிதங்களனந்தமெனப்புவிமேல்
ஓதுமதனையதியார்போலொருசார்வாகவுத்தரித்தாய் (௬)

இந்துக்கண்டவேதங்களிரண்டிரண்டு நாரணனைத்
துங்கப்பரதத்துவமென்றுசொன்னதுஞ்சாலிற்றுமாமோ
மங்குற்குழலாய்காணுதமறையானதெலாமற்றுனை
அன்றுச்சொலுமோதெரியாதேயதனற்பரத்தையார்கண்டார் (௪)

என்றுகமமானியம் புதனுமியலாரணவல்லியுமிசைப்பான்
குன்றுமுலையாய்கண்கண்டகுளிர்மாமறைகூறியதன்றி
ஒன்றுங்காணுமறைவேறுயுனக்குமோவென்றனுகின்றாய்
அன்றுவின்பாலுந்திருமால்கடலிற்பாலின்சுவையன்றே, (௫)

பாதிப்பிறைசேர்நுதன்மானேயைவயாடரவிற்றுயின்மேவும்
ஆதிப்பரமபுருடனேயேயனந்தம்வதங்களும்போற்றிச்
சோதிப்பரதத்துவனென்றுசொன்னமொழிக்கும்பிரமாணம்
வேதப்பொருளாற்பலநூலால்விரித்துத்தெளியவிளம்பக்கேள் ()

இயனுமெசுவேதாரணத்திலெண்ணும்பருச்சமொருமூன்றில்
மயிலுஞ்செஞ்சொலநுவாகம்பதினொன்றுயவதனிடையே
உயரும்புவனநியந்தாவாயோங்குநாராயணன்றனையே
நயமுந்தனந்தமாமறையுநவின்றுபரனென்றதுநாட்டும் (௬)

இந்தமறையின்பொருட்கிசையவெழில்சேர்திருமான்மணியுந்தி
வந்தபிரமன்வேதத்தைமதுகைடவர்கொண்டகலச்
சிந்தைகலங்கிமாயனைத்தோத்திரஞ்செய்தேத்துமிடந்தன்னில்
அந்தமில்லாமறைகளுனையன்றேபோற்றுமென்றறைந்தான், (எ)

நலமேனுயர்பாரதகதையிற்றழைக்குமோட்சதருமத்தில்
நலமாகியநூற்றெழுபத்துநாலாகியவத்தியாயத்தில்
நில்லாயிடமேவசொலுமிதுதானிற்கநேமிநெடுமாயன்
இல்லால்வலியதனஞ்சயற்குத்தியங்குசித்தந்தெளிவாக (அ)

எல்லாவேதங்களினுமியானேயறியப்படுவானென்
றெல்லாசத்தாற்பகர்ந்தபடியுரைக்குந்தரமோவொலிவண்டார்
அல்லார்குழலாய்மூவைஞ்சாயமருன்சீரத்தியாயத்தில்
பல்லோர்புகழும்படியுலகிற்பகவற்கிதைபகர்ந்திடுமால் (கூ)

இனிதாகியராமாயணத்துமிம்மாநிலமேன்மறையஞ்சாய்ப்
புனைசீர்மகபாரதந்தனிலும்புகலும்படியேபொன்மாலைக்
கனமாமறையுமாதியிடைகடையெங்கெங்குந்துதிக்குமெனச்
சனமேசயருக்கிசைந்திடவைசம்பாயனருஞ்சாற்றினரால் (ய)

அருமாமறையிலக்கரங்களவையெத்தனையுண்டத்தனையும்
திருமாலுமையேயென்னுந்திறத்துக்குலசிட்டாந்தம்
தன்னாமேற்சகலத்தனருந்தாமத்தியயனந்தினந்தோறும்
உலாவாநின்றுரிஅவேதமோதாதவர்களுணைநரரோ (யக)

நறுமென்குழலாயண்டங்களுராயணன்பால்வருமது
துறைமன்னியவிச்சுவரூபஞ்சொன்னவிடத்துஞ்சொன்னேனே()

அத்தன்மையிலுலகிலாண்டமனந்தமுளதென்பதுமெய்யே
மெத்துமிந்தவண்டங்கள்மிகுருத்திராண்டம்பிரமாண்டம்
மொய்த்தகருடாண்டங்களெனமொழியுந்திறத்துநாமத்தால்
வைத்துவழங்கும்வழங்கிலுமென்மற்றங்கவர்கள்பதியாகார் (கூ)

அலகற்றுயரும்பதிதோறுமதிகாரியர்வேறானாலும்
உலகுக்கெல்லாமதிபதியாயொருகோலோச்சுநிருபனைப்போல்
பலவர்க்கமதாய்வகுத்தெண்ணப்பட்டவண்டங்களுக்கெல்லாம்
தலைமைத்தேவன்சங்காழித்தரிக்குந்தாமோதரன்றனே. (ய)

திரமாமிந்தமொழிதனக்குத்திட்டாந்தமுநீதெளியக்கேள்
பிரமாண்டமெனவிவ்வண்டம்பேராயிருக்கப்பிதகவம்
பரநாரணனேபதியானபடிகண்டதும்பாற்பலகோடி
தரமாமண்டங்களுக்குமவன்றனேபரனென்றளந்தெளியாய்(யக)

---

## ரு - வது-சம்மதப்பரிச்சேதம்

மருத்தண்குழலாயிதுநிற்கமாலேபரனென்பதுமவன்றன்
பரத்துவத்துக்குவைதிகநூல்பகரச்சங்கைபெருவெனவும்
உரைத்ததிருமால்சங்கரனுக்குயிருக்குயிராயுள்ளிருந்தும்
புரத்தையெரித்தும்விடநுகர்ந்தும்பொருந்துலீலைபுரிந்ததுவும்()

வாழுநெடுமாலவதாரவரவிக்கிரகமானதெலாம்
சூழுங்கருமவசத்தன்றிச்சுபாவலீலையாய்த்தோன்றித்
தாழ்வற்றுயாப்பிராகதமாய்ச்சச்சிதானந்தமுமாகிக்
கேழுற்றநித்தந்தானன்றிகிளர்ந்தேயிருக்குமென்பதுவும், (உ)

மற்றத்திருமாலவதாரமருவுமிடத்துமதிச்சடையோன்
வெற்றித்தயரதாதியரைவிரும்பிப்பணிந்ததிறமாமூன்
பெற்றவரபாலனமாகப்பெருத்தவசுரர்மோகனத்தைப்
பற்றப்புவியின்மானிடர்போற்பாவித்திட்டானென்பதுவும் (ங)

கோபத்துருவமானசிவன்கோகனகத்தான்முதலானோர்
சாபத்துவசக்கிற்கன்மத்திற்சம்பந்தித்தோரென்பதுவும்
தாபித்தலத்திற்புவிமலர்ந்தநாராயணனையுங்கவர்கள்
ஆபத்துக்குத்துணையாகியருள்செய்தனனென்பதுதானும் (ச)

செருந்தார்சடிலச்சிவன்முதலாந்தேவர்தம்மைத்தியானித்தும்
பரிந்தாதரித்தார்க்கவர்நல்கும்பதமத்திரங்களென்பதுவும்
பெருந்தாரணிமேற்சிவபாமாய்ப்பேசுபாதத்துவவிகற்பம்
விரித்தபமோத்தமநானவேதவிருத்தமென்பதுவும் ()

அரிதாமுத்தியெல்லோருமடையாவகையாகமமாதி
விரிவாகியமோகனநூலைமேதைச்சிவனேமுதல்முனிவோர்
கருதாதரவாலோதுவதுகலிகாலத்துவிளைந்தரியைத்
திருவாராதனைபுவியோர்செய்யாதொழியவென்பதுவும். (௬)

மாயனாராதனைதானேமறையோர்க்கடுத்ததென்பதுவும்
மேயவவன்பானிவேத்தியமாய்விளங்குந்தீர்த்தப்பிரசாதம்
தூயதிகிரியிலாஞ்சனையூர்த்துவபுண்டரமாதரிப்பதுவே
சேயமுத்தியடைவார்கட்குத்திகழ்சாதனமென்பதுதானும் (௭)

நாராயணனேசகலபலநல்குந்தேவனென்பதுவும்
சீராயவனல்லரும்பதமேதிரமானபதமென்பதுவும்
ஏராயுயரங்கவனுலகையிலங்கும்பரமபதமென்னும்
பேராய்மேலோர்கொண்டாடப்பிரசித்திபெறவேவழங்குவதும் ( )

பன்னும்வேதத்துடன்மாறுபடாதநூலேசாத்திகநூல்
என்னுந்திறமுமந்நூலேயியல்நிச்சயநூலென்பதுவும்.
தன்னைநிகரில்லாமாலேசகலசத்தங்களினாலும்,
மன்னிநின்றவாச்சியனாய்வாழ்கின்றானென்பதுதானும் (௯)

சிவனான்முகனாதியரன்பாற்செய்யாநின்றவந்தனைக்கும்
அவனேவரபாத்திரனென்னுமடைவுமவன்மங்கலகுணங்கள்
சுவைகூரனந்தவேதத்தாற்சொன்னசிவனாலயனான்மற்
றெவராலுங்கண்டளவிடுதற்கியலாதென்னும்படிதானும் (௰)

நாராயணோபநிடமுதலாநானாசாகைத்திறங்களிலும்
சீராகியபொற்கமலத்தான்சிவனாதியர்கடியானஞ்செய்
தாராதனைபண்ணுவதற்குமமைந்தபரமாத்துமமூர்த்தி
ஏரார்நாராயணனொருவனேயெனநிச்சயித்தபடிதானும் (௰௧)

சீதக்கமலத்தயனுக்குஞ்சிவமூர்த்திக்குஞ்செகத்துக்கும்
சாதத்துவமுமுத்தியுமாலிடத்தென்பதுவுமம்மாலே
ஓதுற்பத்திநாசங்களுடையானலனென்பதுமவனே
சாதித்திடுமாபிரளயத்திற்றனியேயிருக்குமென்பதுவும் (௰௨)

சீலநெடுமால்தேவியராந்திருமாமகணித்தியையாகிச்
சாலும்படிசங்கராதியர்கடமைச்சிட்டித்தாளென்பதுவும்
மேலுமவடன்கருணையிலோரிலேசம்பெற்றோவரவரை
நாலுமுகன்முக்கணனிமையோர்நாதனுக்குமென்பதுவும் (௰௩)

பகருங்காயத்திரிப்பொருளாய்ப்பரிதிவட்டந்தனிலுறைந்து
சகலசீவகோடிக்கந்தரியாமியுமாய்த்தழைக்குமவன்
மகிமைநெடுமாலென்பதுவும்வளர்க்கும்வேள்வியனைத்துக்கும்
நிகரிலாதவதிபதியந்நெடுமாலேயென்பதுவும் (௰௪)

நண்ணு மனந்தமறையாலுநாட்டும்பரதத்துவமான
கண்ணனென்றனனைக்குறித்துமலர்க்கமலாசனத்தான் சிவன்முதலோர்
திண்ணம்புனையும்வேள்விகளின்றிறத்தாலாராதனைசெய்தே
எண்ணற்கரியதங்கள்பதமினிதுபெற்றாரென்பதுவும் (௰௫)

நாகத்தணையிற்றுயின்மருவுநாராயணனாந்தருவுக்குச்
சாகைத்தானஞ்சங்கரனுஞ்சதுராननுமென்பதுவும்
வாகைத்திருமாலேபரமன்மலரோன்முதலோர்மத்திமர்கீழ்த்
தேகச்செம்மைதிகழங்கிதேவனதமனென்பதுவும் (௰௬)

நன்றிபுனையும்பசுந்துளவநாராயணனாதனையே
அன்றிமுத்திக்கொருமார்க்கமயல்வேறில்லையென்பதனை
ஒன்றுபடவாரிதிசூழுலகத்துள்ளோருளந்தெளியத்
துன்றுசெஞ்சொற்றெளிபுருடசூத்தாதிகளிற்சொல்வதுவும் (௰௭)

தண்டவில்லாவேதமனந்தமுநின்றேத்தத்தகுஞ்சகல
அண்டங்களுக்கும்பிரமாதியனைத்தேவருக்குஞ்சருவருக்கும்
முண்டகமலர்த்திருமாதின் போகமுழுதுமுண்கின்ற
கொண்டல்வண்ணன்காரணமாயிருப்பானவனேயெனுங்குறியும் ( )

அகத்தாய்ப்புறத்தாயனைத்தினுமாயணுவுக்கணுவாய்மகத்துக்கு
மகத்தாய்ப்பரமாய்ப்பற்றற்ற பரமாய்வளர்வுங்குறைவிலதாய்ச்
சகத்தாய்ச்சகத்தாதாரமுமாய்ச் சகலகுணமாய்நிர்க்குணமாய்ப்
பகுத்தாரணங்கள்சொலும்பொருளின்பரப்புக்கெட்டப்படாதாகி

உருவாயருவாயுயிர்க்குயிராயுணர்வுக்குணர்வாயொளிக்கொளியாய்
துரியந்துரியாதீதமுமாய்த்தோன்றும்பொருளாய்த்தோன்றாதாய்
மருவாநின்றுநின்மலனாய்வாக்கான்மனத்தாற்சொல்நினைக்க
அரிதானவனாயனுபவனாயகண்டபரிபூரணனாகி (௨௰)

காலங்கடந்துகுணங்களையுங்கடந்துநிருவிகற்பனுமாய்
எலுஞ்சருவஞ்ஞியனாகிலீலைக்கெல்லாமிச்சையனாய்
மூலமிடையீறிலியாகிமுத்தியளிக்குமுதலாகிச்
சாலும்பரதத்துவப்பொருளாய்ச்சதனுக்கிரகத்தானாகி (௨௧)

பேசும்பகுதிப்பற்றற்றப்பிராகதனுமாய்ப்பிரபுவுமாய்
வீசும்புவனமனைத்தினுக்குமிதுகாரணகாரணனாகி
ஆசொன்றின்றியப்பாலைக்கப்பாலாய்நின்றவனாகி
நாசத்தொடுதோற்றமுமில்லாஞானானந்தமயமாகி (௨௨)

மருவாநின்றபரவத்துவாசுதேவனென்பதுவும்
தராம்மற்பன்னூல்கற்றுணர்ந்தோர்சகலர்க்குஞ்சம்மதமாக
நிராயாமறைநான்காலுமுபநிடங்கள்முப்பத்திரண்டாலும்
விரிவால்விளங்குமிருதிகளாம்விதங்களீரொன்பதினாலும் (௨௩)

பரவும்புராணத்திறங்களொருபதினெட்டாலும்பன்னுமுப
மிருதியறமூன்றுஞ்சீர்மேவுமுபபார்புராணத்தில்
நிரைவுநாலுடனிரண்டாய்த்திகழுந்தொகையினெறியாலும்
விரியாரதராமாயணமாய்விளையஞ்சமவேதத்தாலும் (௨௪)

வரசங்கிதையின்றொகையாலும்வைகாநசநற்பஞ்சவிராத்
திரநூலாலுமுலகுக்குத்திட்டாந்தச்சோதிடத்தாலும்
விரியும்பொருளாலாராயும்வேதமாம்வாகடத்தாலும்
தெரியுங்காணந்தரும்வேதஞ்சிறக்கும்பரதநூலாலும் (௨௫)

திண்ணம்புனையுந்திசைக்கிரியைச்சிங்காரத்தாற்சிறப்பெய்த
நண்ணும்புவியிற்றிறமாகநாட்டும்பிரமாணமதாகி
வண்ணந்திகழுஞ்சிற்பமெனும்வருக்கமிகுசாத்திரத்தாலும்.
எண்ணுஞ்சைவாகமமானேயியல்பாகவெடுத்திசைவித்தன்: (௨௬)

மைத்தார்குழலாயாகையினான்மறைபோற்றியநாராயணனுக்
கெத்தேவர்களுந்தேகமதாயிருக்குமவராகையினாலும்
ஒத்தார்மிக்காரில்லாவவ்வொருவன்சகலசத்தத்தின்
வித்தாரகாரவாச்சியனாய்விளங்குமேன்மைபதனாலும். (௨௭)

கோதிலாவந்நாரணனைக்கூறுஞ்சருவாந்தரியாமி.
ஆதலாலுமவன்றன்னையாராதொந்தப்பேரோதி.
ஓதியெந்தவிதத்தருவாயொளியாயுருவாய்த்தியானித்து.
ம்மனதயுடனெயெந்தெந்தவிதத்தாற்பூசைசெய்தாலும்.. (௨௮)

அந்தவந்தயாந்தர்களுக்கந்தவந்தமூர்த்திகளில்
சந்தமுந்தந்திரியாமிதானாயிருந்துதகுந்தரத்தால்
எந்தவெந்தப்பலன்களையுமீவானாராயணனேயென்
றுந்தும்பகவற்கீதைதனிலோதுமுண்மைப்படியாலே; (௨௯)

ஏதமில்லாவுலகத்திலெங்குந்தானாயிருந்தருளிக்
கோதில்லாதபூசையெல்லாங்கொள்வானாராயணனென்றே
காதல்கூரவொன்றாகக்காணுமதுவேயறிவென்றாள்
ஓகைகூராகமமானுமொக்குமென்றேயுளந்தெளிந்தாள் (௩௰)

பானேர்மொழியார்தங்களிலிப்படிச்சம்மதமாய்ப்பகர்தலுமே
ஞானாதிகராயங்கிருந்தநன்மாமகத்தோரனைவோரும்
பூனேர்குழலீரிவ்விடத்துப்புகன்றமொழியுமுத்தரமும்
மேனிரிசைந்தவுடன்பாடுமிகநன்றென்றுவியப்புற்றார் (௩௧)

இன்னபடியாற்சங்கரன்மாலென்னுமிருவோர்மகிமையெலாம்
பன்னியறிவாற்பூருவமாம்பக்கஞ்சித்தாந்தந்தோன்ற
மின்னினிடையாகமவல்லிவேதவல்லியெனுமாதர்
சொன்னதாகச்சொன்னதமிழ்ச்சுருதியானசாத்திரத்தை (௩௨)

மீனவுருவாய்ச்சோமுகனைவென்றுவேதங்களைப்பிரமன்.
ஆனசுதனுக்களித்துலகுக்காதியர்ச்சாவதாரனுமாய்
வானநதிநேராரணியின்வடதீரத்துவேதபுரித்,
தானநின்றகருமணியந்தாமப்பெருமான்சந்நிதியில் (௫௩)

மன்னுன்மறைபோலெமக்குவகைவழங்குமதனுலினிவுலகில்
தன்னேரில்லாவிந்நூல்போற்றகைமைபெறநூன்மற்றில்லை
யென்னுவவையோருளமிறும்பூதெய்தத்திருக்கோயிலினின்று,
மின்னூர்திகரிப்படைப்பரமன்விளம்பியிட்டபடியாலும். (௫௪)

பரவுசுருதிசாத்திரசம்பன்னரானவனைவோரும்
பெருமையானவறுசமயப்பேரும்பிறருஞ்சம்மதிக்க
உரிமையானபொருள்விரித்தாங்குகந்தேயரங்கேற்றிடுமந்நாள்
பரமன்கரியபிரானுகந்தாபரணமளித்தபடியாலும் (௫௫)

வெள்ளைத்துகிலையிடையுடுத்துவெள்ளைக்கலன்கள் மிளிர்ந்தொளிர
தள்ளற்கரியபேருவகைதலைக்கொண்டோடிச்சவைகாண [த்
உள்ளத்தெளிவாமிந்நூறன்னுண்மார்பணைத்துக்கலைமகடன்
வள்ளற்கரத்தான்மூறுவலித்துமகிழ்ந்தேயீந்தபடியாலும் (௫௬)

கிளரும்புகழ்சேரவ்வேதகிரியெம்பெருமான்வேதாந்தத்.
தெளிவின்பயனைத்தமிழாகச்செய்தவிர்தத்திருமுறையை
ஒளிருஞ்சபையோர்கண்காணவுலகோராய்ந்ததம்பத்தின்
அளவுமெதிரேசென்றூரவங்கீகரித்தபடியாலும் (௫௭)

பரம்புஞ்சைவர்முதலாயபரவாதியர்களுளந்தெளிய
நிரம்புங்கேள்வியவைக்களத்தோர்நீடுங்கருமாமணிவண்ணன்
வரம்பில்சீர்க்கோயிலின்முன்னர்வயங்குபெருந்தீவளர்த்ததனில்
திரம்பொங்கிந்நூல்பகலளவிட்டெடுக்கத்தீயாப்படியாலும். (௫௮)

மிகுமிந்நூல்போற்றெய்வீகம்விளைந்தநூல்கள்வேறில்லைத்
தொகைமன்னியவிப்பெருநூலிற்சொன்னபரமார்த்தந்தன்னில்
இகலொன்றின்றிநிறைவேறவெவருட்பட்டாரவர்தாமே.
நிகரின்றியபூதலமீதுநீடுஞ்சருவஞ்ஞியராவார் (௫௯)

அரிதைப்பதிவாழரிதாதனருமாமறையைத்தமிழ்செய்து.
விரிவற்றுரைத்தவிருசமயவிளக்கநூலின்பரமாத்தம்
பரிவுற்றுணர்வாரதுகேட்பார்படிப்பார்பாராட்டுதல்செய்வார்
இருமைப்பயனென்றுரைக்கின்றவிகமும்பரமும்பெறுவாரே (௬௰)

சித்தாந்தப்படலம்முற்றும் ஆ௨ திருவிருத்தம் ௬௰௫.
காண்டம்-௪ இ-படலம்-௨௯ இ-பரிச்சேதம்-௱௫௰ இகூடிய
திருவிருத்தம்-உதா௰௯-இருசமயவிளக்கம்முற்றும்.
அரிதாசர்திருவடிகளேசரணம்.

ஸ்ரீ ஓம்.

# இருசமயவிளக்கத்தின் அட்டவணை.







முற்றும்.

